6. மாற்ற மிங்கிது சேட்டலு மதிமுடி யரனைப்
போற்று மன்பர்க ளிந்திர னுலகினும் போகார்
கூற்று வன்றன துலகினு நும்மொடு குறுகார்
ஏற்ற மாகிய சிவபத மடைந்தினி திருப்பார்.

7. நாத னாதம தடியவர்க் கடியவ னானும்
ஆத லானும வந்தகன் புரத்தினுக் கணுகேன்
வேதன் மாலமர் பதங்களும் வெஃகலன் விரைவிற்
போதி போதியென் றுரைத்தலு நன்றெனப் போனான்.

8. போன காலனு மறலியை வணங்கியே புகுந்த
பான்மை யாவையு முரைத்தலு முளம்பதை பதைப்ப
மேனி மார்பகம் வியர்ப்புற விழிகனல் பொழியக்
கூனல் வார்புரு வக்கடை நிமிர்ந்திடக் கொதித்தான்.

9. அழைத்தி மேதியை யென்னலும் போந்ததா லதன்மேற்
புழைக்கை மாலகரி யாமென வெரிநிடைப் புகுந்து
நிழற்று கின்றதோர் கவிகையுந் துவசமு நிவப்ப
வழுத்தி வீரர்கள் சுற்றிட வந்தகன் வந்தான்.

10. போந்து காசியின் முனிமக னிருந்துழிப் போகிச்
சேந்த குஞ்சியு முகில்புரை மேனியுஞ் சினத்திற்
சாந்து கண்களும் பிடித்ததோர் பாசமுங் கரத்தில்
ஏந்து தண்டமுஞ் சூலமு மாகியே யெதிர்ந்தான்.

வேறு.

11. வந்து தோன்றலு மார்க்கண்ட னென்பவன்
அந்த கன்வரு தனுகின ஞமெனச்
சிந்தை செய்தவன் செய்கையை நோக்கியே
எந்தை யாரடி யேத்தி யிறைஞ்சினான்.

12. அன்ன வேலையி லந்தக னைந்தநீ
என்னி லீசனை யாவ தியற்றினை
முன்னை யூழின் முறைமையு முக்கணன்
சொன்ன வாழுந் துடைத்திட லாகுமோ ?

13. சிறிது மூழ்வினைக் கின்மையுந் தேர்கிலாய்
உறுதி யொன்று முணர்கிலை போலுமால்
இறுதி யோபிறப் பென்றிலை யாவரும்
ஒறுவ ரன்னது பேசுதல் வேண்டுமோ ?

14. பீடு சாலும் பெருந்தவ ராக காரிலுங்
கூடு ருவிது கூடுமென் றுன்னியே
நாடி யின்னண நண்ணுதல் கற்றுணா
ஆட வாகுமி யற்கைய தாகுமோ ?

15. ஈச னார்த மிணையடி மீமிசை
நேச நெஞ்சினை நிந்தனு நீபுரி
பூசை வெம்பவம் போக்குவ தன்றியா
வீசு பாசம் விலக்கவும் வல்லதோ ?

16. சிந்து வின்கட செறிமண லெண்ணிலும்
உந்து வானத் துடுவினை யெண்ணிலும்
அந்த மின்றியெ ழுணையின் மாண்டிடும்
இந்தி ரன்றனை யெண்ணிட லாகுமோ ?

17. இற்ற வானவர் தம்மையு மெண்ணினி
றுற்ற தானவ ராகியுள் ளோரையும்
முற்ற வோதின் முடிவில தாதலான்
மற்றை யோரை வகுத்திடல் வேண்டுமோ ?

18. கணக்கு முண்டகக் காமரு கண்ணினை
தனக்கு முண்டு சதுர்முகற் குண்டுமற்
றெனக்கு முண்டு பிறப்பிறப் பென்றிடில்
உனக்கு முண்டென் றுரைத்திடல் வேண்டுமோ ?

19. வாச மாமல ரிட்டு வழிபட
ஈச னார்முன் னெனக்கருள் செய்தன
ஆசி லாவிவ் வரசிய லேந்திய
பாச சூலம் படைமழுத் தண்டமே.

20. தேவர் காப்பினுஞ் செய்தளித் தீறுசெய
மூவர் காப்பினு மொய்ம்பின ராயினோ
ரேவர் காப்பினுங் காத்திட வின்றுநின்
ஆவி கொண்டன்றி மீண்டு மகல்வனோ?

21. துன்ப மென்பது கொள்ளலை சூலிதன்
அன்ப ராயினு மந்தம்வந் தெய்திடில்
தென்பு லந்தனிற் சேர்த்துவன் றிண்ணமே
என்பி னியினி யேகென் றியமபலும்.

22. மைந்த னுங்கது கேட்டு மறலிகேள்
எந்தை யாரடி யாரதமக் கில்லையால
அந்த மென்பதுண் டாயினு நின்புரம்
வந்திடார் வெள்ளி மாலவரை யேகுவார்.

23. அனையர் தன்மை யறைகுவ னுங்கவா
புனித மாதவ ராயினும பொறபுடை
மனையின் வாழக்கையின் மலகின ராயினும
வினையி னீங்கிய வீட்டின்ப மெய்துவார்.

24. நாதன் றன்னையு நாதன தம்புயப்
பாதனு சேர்ந்து பரவினர் தமமையும்
பேதனு செய்வது பேதைமை நீரென
வேதங் கூறும விழுபபொருள் பொயகருமோ?

வேறு.

25. அன்னா தன்மை தேர்கிலைவையந் தவாபோல
உன்னுநின்று யாங்கவர் தம்பா லுறுகின்ற
என்னுவிகருந் தீங்குநினைத்தா யிவையெல்லாம்
உன்னுவிக்கு மித்தலைமைக்கு மொழிவன்றே?

26. தீதாகின்ற வாசகமென்றன் செவிகேடக
ஓதாநின்றாய் மேலவருமூற்ற முணாகில்லாய்
பேதாய்பேதாய் நீரிவணிற்கப் பெறுவாயோ
போதாய்போதா யென்றுரைசெய்தா னபுகரில்லான்.

27. கேட்டான்மைந்தன் கூறியமாற்றங் கிளாசெந்தீ
ஊட்டாநின்ற கண்ணினன்யானச் சூழுமாற்றல
காட்டாநின்றாய் நம்முயிர்கூற்றன் கைக்கொள்ள
மாட்டானென்றே யெண்ணினைகொல்லோ மதியில்லாய்.

28. என்றான்வானத் தேறெனவார்த்தா னிவனேரே
நின்றால்வாரா னென்றுநினைந்தே நெடுநீலக்
குன்றமென்னப் பாலகன்முன்னங் கொலைவேலான்
சென்றான்பாசம் வீசுவதற்குச் சிந்தித்தான்.

29. எறிந்தான்பாச மீத்திடலுற்றா னிதுபோழ்தில்
அறிந்தானானு மீசனையேத்தி யடிநீற்ற
பிறிந்தானலலன் மற்றினியிந்தப் பெருமைந்தன
மறிந்தானன்றோ வென்றிமையோரு மருளுற்றார்.

30. ஈர்க்கும்பாசங் கந்தரமுற்று மிடறில்லா
மார்க்கண்டன்முற் றோன்றினனின்பால வருதுன்பந்
தீர்க்கின்றாநீ யஞ்சலையென்றே திரையாழிக
கார்க்கண்டத்துக் கண்ணுதலையன் கழறுற்றான்.

31. மதத்தான்மிக்கான் மற்றிவன்மைந்த னுயிர்வாங்கப்
பதைத்தானென்னா வுன்னிவெகுண்டான் பதுமொன்றாற்
சிதைத்தான்வாமச் சேவடிதன்னாற் சிறிதுந்தி
உதைத்தான்கூற்றன் விண்முகிலபோன்மண் ணுறவீழ்ந்தான்.

வேறு.

32. மைந்த நீநமை வழுத்தி மாசிலா
முந்து பூசனை முயன்ற தன்மையால
அந்த மில்லதோ ராயு ணிறகியாந்
தந்து நலகினு மென்று சாற்றினன்.

# வில்லிபுத்தூரார் பாரதம்.

## கிருஷ்ணன் தூது.

1. பொருசிலைமுறித்தவீரன் கோயிலிற்புகுந்துநேமிக்
குரிசிலைவணங்கியாங்க ணிருப்பவக்குரிசினோக்கி
இருசிலையுண்டென்றிந்த விருநிலத்தியம்பும்வில்லில்
ஒருசிலைமுறித்தசீற்ற மென்கொலோவுரைசெயென்றான்.

2. ஆவதுகருதானாகி லமைச்சர்சொற்கேளானாகில்
வீவதுகுறியானாகில் விளைவதுமுணரானாகில்
நாவதுகாவானாகி லவனுக்காநடந்துபோரிற்
சாவதுபழுதென்றன்றோ சகத்துளோர்சாற்றுகின்றார்.

3. செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வனவறிந்துசொல்லார் சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவுமோரார் மண்ணின்மேல்வாழுமாந்தர்.

4. நினைக்கவுந்தொழவுமெட்டா நீயெழுந்தருளப்பெற்றுந்
தனைக்கிதுதகுதியென்று தமருடன்வாழவெண்ணான்
மனக்கடுங்கனலினன்றன் மனத்தினாலுரைத்தபுன்சொல்
எனக்கிசையாமலன்றோ விருஞ்சிலையிறுத்ததென்றான்.

5. மாயனுமகிழ்ந்துநோக்கி மாசுணமுயர்த்தமன்னன்
போயருஞ்சேனையோடு போர்க்களங்குறுகும்போது
நீயவனருகுநில்லா தொழியினுன்னேயமைந்தர்
தாயமுஞ்செல்வமுற்றுந் தரணியும்பெறுவரன்றே.

6. ஏற்றியநறுநெய்வீசி யிந்தனமடுக்கினாலுங்
காற்றுவந்துறாதபோது கடுங்கனல்கதுவவற்றோ
நீற்றணிநிமலனன்ன நின்கைவில்லிற்றதாகிற்
சீற்றவேலரசன்சேனை தென்புலம்படாகைதிண்ணம்.

7. தந்தையுந்தம்பிமாருங் கன்னனுஞ்சகுனிதானுஞ
சிந்தையிற்றெளிந்தகல்விச் செழுமதியமைச்சர்தாமும்
முந்தரவுயர்த்தகோமா னேவலான்முழுதுமெண்ணி
மந்திரமிருப்பான்வந்தோா மண்டபங்குறுகினரே.

8. தீதறுமதிவல்லோரைச் செழுமதிக்குடையானோக்கிப்
பாதபவனத்திற்போன பாண்டவர்தமமைமீண்டு
மேதகவழைத்துநாடு வேண்டுமினென்றுமூட்டும்
யாதவன்றனித்துவந்தா னென்செய்வதியம்புமென்றான்.

9. பொரும்படைமைந்தன்கூறத் தந்தையும்பொருந்தசொல்வா
இரும்புலிவலையிற்பட்டால் விடுவரோவெயினராஞோர் [ன்
வரம்பில்வெஞ்சேனையோடும் வளைந்தினிமாயன்றன்னைக்
கரும்பொழுதகலுமுன்னே கொல்வதேகருமமென்றான்.

10. கண்ணிலானுரைத்தமாற்றங் கேட்டலுங்காவலோரில்
மண்ணிலாரிதற்குமுன்பு தூதரைவளைந்துகொன்றார்
எண்ணிலாவிந்தவெண்ண மெவ்வுழிக்கறமதென்று
வெண்ணிலாமுறுவல்செயது விகர்னனும்விளம்பலுற்றான்.

11. மூத்தவரிளையோர்வேத முனிவரர்பிணியின்மிக்கோர்
தோத்திரமொழிவோர்மாதர் தூதரென்றிவரைக்கொல்லிற்
பார்த்திவர்தமக்குவேறு பாவமற்றிதனினில்லை
பூத்தெரிதொடையாய்பின்னு நரகினும்புகுவரென்றான்.

12. பழியுடைப்பகைஞரேனுந் தன்பெரும்பதியில்வந்தால்
அழிவுறக்கோறல்பாவ மாண்மையுமல்லவென்பார்
கழிகடற்சேனைசூழக் கங்குலின்வளைந்திட்டாலும் [றான்.
எழிலுடைக்கொண்டல்வண்ண னகப்படானெவர்க்குமென்

13. வெம்புயவலியான்மாதை விரிதுகிலுரிந்தவீரன்
தம்பியைமுனிந்துசீறித் தமயனைநோக்கிசொல்வான்
வம்பவிழலங்கன்மார்பா மந்தணமுரைககலுறறால்
இமபர்மற்றியாதுசொல்ல விளைஞரையழைத்ததென்றான்.

14. அதிரதர்முதலாவுள்ள வவனிபர்வளைந்துநிற்ப
எதிரமுகிறவழுங்கோயி லெரியினையெங்குமூடடி
விதுரனுமவனுஞ்சேர வெந்திடமலைவதலலால
மதிபிறிதிலலையின்னே வல்விரைந்தெழுமினென்றான்.

15. செங்கதிரெழுந்துசீறிற் செறியிருணிற்பதுண்டோ
இஙகிவனிருநதவிலலி லெரியிடவேண்டுமோதான்
வெஙகணையொன்றினாலே விளிந்திடவென்றுமீள்வேன்
கங்குலினெழுமினென்று கன்னனுஙகனன்றுசொன்னான்.

16. பதிப்பெயர்ந்தேகிநாளைப் பகைவரைக்கூடுமாயின்
விதிப்பயனென்னநம்மை வெருசமர்வெல்லவொடடான்
மதிப்பதென்வேறுகள்ள மாயனைமனையிற்கோலிச
சதிப்பதேகருமமென்று சௌபலன்பின்னுஞ்சொல்வான்.

17. சொல்லுவதியற்கையன்று குழிபறித்தரக்கரோடு
மல்லரையிருத்திமேலோ ராசனமவகுத்துநாளை
எல்லிடையழைத்துவீழ்த்தி யிகலுடன்விலங்குபூட்டித்
தொல்லருஞ்சிறையில்வைத்த றூதருக்குரிமையென்றான்.

18. மாதுலனுரைத்தமாறற மருகனுமிசைந்துகஙகுற
போதினீட்யநேகமல்லா வருகெனபபுகன்றுதானும்
நீதியினிருந்துதாழ நிலவறைசமைத்தபின்னா
ஆதிநூறாயிரமபோ ரரககளையதனுள்வைத்தான்.

19. மல்லர்பப்பரவாதம்மை மற்றதினிரட்டிவைத்தான்
வில்லுடைவீரர்தம்மை வேறதினிரட்டிவைத்தான்
பல்படைவல்லோர்தம்மைப் பதின்மடங்கதனில்வைத்தான்
அல்லிலோர்கடிகைதன்னி லறிவனையழைக்கவென்றே.

20. பெரும்பிலவறையைவேயின் பிளப்பினானிரைத்துமூடி
அரும்பெறன்மணிகளாலோ ராசனமதன்மேலாக்கிச
சுரும்பிமிர்மாலைதூக்கித் தொழிலுடைவிதானமேற்றி
வரம்பிலாவென்றிவேலான் மாறிலாவண்ணஞ்செய்தான்.

21. அடியவர்மனத்திலுள்ள வாரிருட்கங்குறீர்க்கும்
நெடியவனிருக்கவென்று நிலவறைவிரகிற்செய்த
கடியவனியற்கையஞ்சிக் கங்குலுங்கடிதிற்போகப்
படியவர்துயிலும்போகப் பரிதியுமுதயஞ்செய்தான்.

22. மாதவனிருந்தகோயில் வந்தடிவணங்கிமன்னன்
தூதுவராழியங்கைத் தோன்றலேதுளபமாலே
யாதவகுலத்தோரேறே யெழுந்தருள்கென்றானின்றமை
மேதகுமரசனென்றார் முகுந்தனும்விரைந்துசென்றான்.

23. கந்தடுகளிற்றுவேந்தன் கண்ணிலாவரசுங்கங்கை
மைந்தனுமுதலாவுள்ள மன்னருமதிவல்லோரும்
தந்திரவகையுமேனை யிளைஞருந்தன்னைச்சூழ
இந்திரனிருக்கையன்ன கோயிலூடினிதிருந்தான்.

24. நாமவேலரசரோடு நாலவகைச்சேனையோடும்
மாமுகில்வண்ணன்வந்தா னென்றனர்வரவுகண்டோர்
வீமலர்த்தொடையினானும் வேத்திரத்தவரைநோக்கித்
தாமரைத்தடங்கண்மாயன் றன்னையேவிடுமினென்றான்.

25. தன்பெருஞ்சேனைநிற்கத் தண்டுழாயலங்கலானும்
இன்புறநகைத்துவேந்த ரிருந்தபேரவையினெய்த
மின்புணர்துவசநாக விடநிகர்மனத்தினானும்
அன்பொடுதிகிரியானை யதன்மிசையிருக்கவென்றான்.

வேறு.

26. இறைவனெழிறகதிர் மணிகளழுத்திய தவிசினிருத்தலுமே
நெறுநெறெனககொடு நிலவறையிறபுக நெடியவனப்பொழுதே
மறலியெனத்தகு நிருபனியற்றிய விரகைமனத்துணரா
முறுகுசினத்துட னடியதலததுற முடிகசனத்துறவே.

27. அஞ்சினமஞ்சின மென்றுவிரைந்துய ரண்டாபணிந்திடவும்
துஞ்சினமின்றெறன வன்பணியின்கிளை துன்பமுழந்திடவும்
வஞ்சமனங்கொடு வஞ்சகனின்றிடு வஞ்சனைநன்றிதென
நெஞ்சில்வெகுண்டில கொன்றுபடுமபடி நின்றுநிமிர்ந்தனனே.

28. மலலரரககர் சூலதடுதாடுபபபரர் வாளினர்வேலினாபோர
வில்லினரிப்படி துற்றநிலத்ததறை மேவியவீரரெலாம்
தொல்லேயிடிக்கயர் வுற்றுயிரிற்றிடு சுடிகையராவெனவே
கல்லெனவுடகினர் ததகமுடற்பல கால்கொடுதைத்திடவே.

29. மாயிருஞால மெலாம்வெளியாயொளிர் மரகதசோபையுறப்
போயிருபாலும்வளேந்துவளேந்தெதிர் பொருமுனேவெமபடை
டாயிரமாயிர மங்கைபுறப்பட வண்டருமாதவரும் [யோ,
பாயிரநான்மறை பாடிவியந்து பணிந்துபுகழ்ந்தனரே.

30. ஆரணனேயர னேபுவனங்க ளனேத்தையுமன்றுதவும்
காரணனேகரு ணுகரனேகம லாசனிகாதலனே
வாரணனேபொது வேகரிகூவிட வந்தருளும்புயலே
நாரணனேமுனி யேன்முனியேயென நாகர்பணிந்தனரே.

31. மாதவனேமுனி யேயெலையாருடை வானவனேமுனியேல்
யாதவனேமுனி யேவிதயத்தி லிருப்பவனேமுனியேல்
ஆதவனேமுனி யேன்மதிவெங்கன லானவனேமுனியேல்
நீதவனேமுனி யேன்முனியேயென நின்றுபணிந்தனரே.

32. கங்கைமகன்கதி ரோன்மகனம்பிகை காதன்மகன்றனயர்
அங்கவையின்க ணிருந்தநராதிப ரடையவெழுந்தடைவே
செங்கைகுவித்த சிரத்தினராயுணா வொன்றியசிநதையராய்
எங்களபிழைப்பினேயின்றுபொறுத்தருளென்றுபணிந்தனரே.

33. தேவரும்வாசவ னுந்தவருந்திசை முகனுநராபதிபரும்
யாவருமன்பிஞெ டாயிரநாமமு மெண்ணியிறைஞ்சுதலான்
மூவருமொன்றென நின்றருணுதனு முனிவுதவிர்ந்தருளா
மீவருமண்ட முறுந்திருமேனி யொடுங்கினன்மீளவுமே.

34. தன்னினுயர்ந்தவா யாருமிலாமுகில் சதுமறையின்படியே
எந்நிலமுந்திரு வடியின்மறைந்திட வெதிரினினின்றிடவும
பின்னேயுமஞ்சி யயர்ந்திலனெஞ்சு பெயாந்திலனுசனமும[னே.
செனனியிலுங்கரம் வைததிலன்வண்புகழ் சிறிதுமொழிந்தில

# நைடதம்.

---

## நகர் நீங்கு படலம்.

1. நெடிபடு கானிடைத் தமியை நீங்கிப்போய்ப்
படுபர லமளிமேற் பள்ளி கொள்ளவெங்
கடிநக ரடைந்துமெல் லணையிற் கண்படில்
அடியனேற் கிதனினு மறனுண் டாங்கொலோ.

2. என்றவ னுரைத்தலு மடங்க லேறனான்
மென்றளிர் கவற்றுநின் மெல்லென் சீறடி
கன்றவெம் பரல்படு கானி னேகுதற்
கொன்றுமே லெனதுயி ருய்யு மோவென்றான்.

3. பொற்பினுக் குறையுளாம் பொன்னம் பாவையாய்
அற்பினிற் பயந்தநம் மக்க ளாயிடை
எற்பிரிந் துறைகுந ரேனு மெங்ஙனம்
நிற்பிரிந் தாற்றுவா நிகழ்த்து வாயென்றான்.

4. கூற்றுறழ் குருதிவேற் குரிசின் மக்கடாம்
ஆற்றினு மாற்றலா தஞரின் மூழ்கினும்
மாற்றருங் கற்பினா மகிழ்நர் கான்செல
வேற்றுநா டுறைவது விழுமி தோவென்றாள்.

5. விரிகட லமிழ்தமும் வேலை ஞாலமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையு மெளிதி னெய்தலாம்
அருமகப் பெறுதன்மற் றரிய தென்பவே.

6. என்னலும் வணரிருங் கூந்த லேந்திழை
மன்னவ மழலைவாய் மக்க டம்மொடு
மின்னகு பரிதிவேல் வீமன் மாநகர்
துன்னுதும் யாமெனச் சொல்லி னாளரோ.

7. கோற்றொடி செல்வாபாற் குறையி ரந்துநின்
றேற்றபின் றுயிர்சுமந் திருத்த லீறிலா
ஆற்றலு மானமு மறிவுங் கல்வியும்
மாற்றருஞ் சீர்த்தியு மாற்று மென்பவே.

8. மிக்கவெஞ் சமத்திடை வெருவி யோடினர்
ஒக்கறுன் புறத்தணி யுலகில் வாழுநர்
புக்குவேட் டருக்கினி லுண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே.

9. என்றலுந் திருவுள மின்ன தாகுமேல
மன்றலந் தெரியலாய் மக்க டமைநம
மின்றிகழ் மானவேல் விதர்ப்பன் மாநகர்
சென்றிடப் பணித்தரு ளென்று செப்பினாள்.

10. தண்டலில் பாகனை நோக்கித் தாதுசேர்
வண்டிமிர் தெரியலான் வருந்தி மக்களை
விண்டொடு புரிசைசூழ் விதர்ப்பன் றன்னுழைக்
கொண்டனை போகெனக் கூறி னானரோ.

11. அலமரு மக்கடம மாக மெங்கணும்
முலைவழி யொழுகுபா னனைப்ப மோந்துவாய்
புலர்தரப் பற்பலகாற் புல்லிக் கொண்டுகண்
கலுழ்தரு புனலினாற் கழூவி னாளரோ.

12. மடவர றன்னையு மதுகை வேந்தையும்
படுதுய ரொழிகென வாற்றிப் பாகனுங்
குடலுயிர் பிரித்தென வுவகை மக்களைக்
கொடிநெடுந் தேர்மிசைக் கொண்டு போயினான்.

13. சிலதியர் பரப்பிய தேங்கொண் மெல்லிதழ்
மலர்மிசை மிதிப்பினும் வருந்து சீறடி
நிலமிசை படுபர லுறைப்ப நேரிழை
புலவுவேற் காளைபின் றொடர்ந்து போயினாள்.

14. அடிதொழு மரசரு மமைச்சர் வெள்ளமும
மடவிய ரனைவரு மைந்த ரீட்டமும்
கொடிநெடு வீதிவாய்க் குறுகி யெங்கணும்
கடன்மடை திறந்தெனக் கலுழ்ந்திட டாரரோ.

15. பொய்யுறு தீமொழி புகல்கி லேனெனு
ஐயநீ யெமமையிங் கருளில் வேந்துதன்
கையகப் படுத்திநீ கானி லேகனின்
மெய்யிலும் பொய்ம்மையே விழுமி தாமென்பார

16. மேவருஞ் சூதினிற் றோற்ற மேதினி
யாவதும் வென்றல தாள வெண்ணுதல்
கோவியல் பன்றவ னுணை மேற்கொடு
நீவிரென் வாய்மையை நிறுத்து வீரென்றான்.

17. முளரியால் வெந்தவெங் கானின் மொய்துகள்
அளியொடு புலம்பின ரழுத கடகடைத்
துளியினி லவித்தனர் தொடர வெந்திறற்
களிமத களிற்றினுன் கானி லேகினுன்.

18. பறவைகள் குடம்பையுட் பார்ப்ப ருததில
கறவைகள் புனிற்றிளங் கன்றுக கூட்டில
நறவுயிர்த் தலர்கில மலர்க ளுமவேல்
இறைவனே கினன்வனத் தென்ற பின்னரே.

19. வான்மறந் தனதுளி வழங்க லின்னிசைத்
தேன்மறந் தனமட மகளிர் தேங்குழல்
பான்மறந் தனபசுங் குழவி பாய்கவுட்
கான்மத மறந்தன களிநல் யானையே.

20. பாவல ரிழந்தனர் பரிசி லுண்பலி
தேவரு மிழந்தனர் கலியின் றீமையால
காவல னெடிபடு கானி லேகலால்
யாவரு மிழந்தன ரின்ப மென்பவே.

21. அறந்தலை மயங்கின பொய்மை யார்ந்தன
மறந்தலை யெடுத்தன தீமை மலகின
திறம்பின மநுநெறி தவங்க ளாந்தன
நிறைந்தன வஞ்சனை நேமி யெங்குமே.

---

## கான்புகு படலம்.

22. ஆயிடை யுயிர்நிக ரணங்க னாளொடும்
மேயதன் னகாவயின் விசும்பு போழ்ந்துலாம்
காய்கதி நுழைகலாக் காவி னுடலம்போற்
போயின னழலுமிழ புலவு வேலினான்.

23. அள்ளிலைப் பூணினா னேகு மாறறிடைக்
கொள்ளைவண் டினமிழி நறவு கூடடுணும்
வள்ளவாய மலரவிழ் வாவி யங்கரைப
புள்ளுருக் கொடுகலி போயி னானரோ.

24. பன்மலர் கஞலிய பணிகொள் வாவியிற்
பொன்னவிர் கொடுஞ்சிறைப் புள்ளை நோக்குறா
மன்னநம் மணநிலை முடித்த வண்சிறை
அன்னமென் புள்ளினீ தழகு வாயநததே.

25. மற்றுமோ ருயிரென வளாத்த பூவையும்
சொறறரு கிள்ளையு மறப்பத் தூமணிப்
பொற்றடந் தோளினாய் பொன்னம் புள்ளினைப்
பற்றிநீ தருகெனப் பணிந்து கூறினாள்.

26. ஓர்துகி லிருவரு முடுத்து மற்றையோர்
காரகிற றீம்புகை கமழ நீவிகொண்
டோர்குடி யிருந்தன விலைகொள் பூணினாய
வார்சிறைப் புள்ளினை வளைத்து மென்றனள்.

27. கருந்தடங் கண்ணிதன் னுள்ளங் காமுறத்
திருந்துவேற் றடக்கையான் றுகிலிற் சேர்த்தலும்
பொருந்திய துகிலொடும் வஞ்சம் பூண்டெதிர்
இருந்தபுள் ளந்தரத் தெழுந்து போயதே.

28. புனைதுகில் கவர்ந்துபைம் பொன்னிறத்தபுள
பனியிரு விசும்பினிற் பறததல காண்டலும்
மனைவித னருந்துயர் நோக்கி மாழ்கினன்
வினைவலி யிதுவென மெலிவு நீக்கினன்.

29. முருகுயிரத் தளியின மூசு பூங்குழற்
கருதரு பெருந்துயா காண்கி லேனெனப்
பரிநெடுந் தேரொடும் பரிதி வானவன்
உரவுநீக் கருங்கட லொளித்திட் டானரோ.

30. மாயிரு ஞாலமும் வானு நுங்கிய
பாயிருட கங்குலிற் பாவை தன்னொடும்
போயரின் முறறிய பொலிவின் மண்டபம்
மேயின னரசர்கோன் விதியின் கொடபினால.

31. இன்னகிற் புகைதவழ்ந் தினிதின் மென்மைய
பன்மல ரமளிமேற் பள்ளி கொள்பவர்
புன்னுனி பரந்தவெம் பொடிகொள் பார்மிசை
மன்னின ரூழினும் வலிதி யாவதே.

32. வளைகட லுலகினின் மன்னர் தாடொழ
உளையரிப் பூந்தவி சுறையு மெம்பிரான்
முளரியா லெங்கணு முற்று மண்டபத்
தெளியர்போ லிருத்திகொ லென்று விம்மினள்.

33. தடங்கணீர் துடைத்துமெய் தைவந் தாயிழை
நடுங்கலென் றுற்றிட நள்ளி யாமத்து
மடங்கல்போன் மொய்ம்புடை மன்னா மன்னவன்
கொடுங்கைமேற் றுயின்றனள கோடிநு சுப்பினள்.

## பிரிவுறு படலம்.

34. நண்ணருங் கானெலாந் தொடர்ந்து நண்ணுமேற்
கண்ணினு லிவடியர் காண லாவதே
பெண்ணருங் கலத்தினைப் பிரியிற் றந்தையூர்
அண்ணிய தவ்வுழி யடைந்து வைகுமால.

35. விரிமலர்ப் பூங்குழல் விழிக்கி லீங்கிவட்
பிரிகுவ தரிதினிப் பிரிய வெண்ணிலோ
ஒருதுகி லாயதித் துகிலை யூறுசெய்
கருவியிங் கேதெனக் கருத்தி னெண்ணினான்.

36. எண்ணிய துணர்ந்திவர்ப் பிரிப்ப முன்னமே
கண்ணிய வஞ்சகக் கலியும் வாளதாய்
நண்ணிமுன் கிடத்தலு மெடுத்து நாமவேல
அண்ணலுந் துகினடு வரிந்திட் டானரோ.

37. சில்லரி நெடுங்கணா டெருளு ருவகை
மெல்லெனக் கொடுங்கையி னீக்கி வெய்துயிர்த
தொல்லையி லுயிர்விடு முடம்பு போன்மென
அல்லலங் கடலிடை யழுந்தி னானரோ.

38. எழுமகன் றனினி யென்கொ லாமென
அழுமுயிர் துறந்தென வவச மேற்கொளா
விழுமிவட் காக்கென மெலிந்து தெய்வதம்
தொழுமினை யனபல துன்ப மெய்துமால.

39. செல்லும்வெந் துயரொடுஞ் செல்லக் காலெழா
தொல்லையின் மீளும்வெய துயிர்க்கு மொண்ணுதல
கல்லத ரிடைத்தனி யேகிற் பேய்ககணம
கொல்லுமென் றுருயிர் குழைந்து சாம்புமால.

40. ஆயிடை யின்னணம் வருந்தி யனபுகூர்
வேயுறழ் தோளியைப் பிரிந்து வெஞ்சின
மாயவெங் கொடுங்கலி வயத்த னாதலிற
போயினன் பித்தரிற பொருவில வாய்மையான.

41. ஆயிடை காண்கிலா தழுங்கிச் செங்கடை
பாயரி நெடுங்கணீ ரருவி பாய்தரத்
தூயமென் மலர்க்கர நெரித்துத் துண்ணென
வாய்வெரீஇ யாலவயி றதுக்கி மாழ்கினாள்.

42. தெளித்தபூம் பள்ளியிற் சிறிது நீங்கினும்
அளப்பருந் துயரொடு மவல மெய்துவேன்
தளிப்பெயற் கானகத் துளிற் றமியள் மாழ்குறா
ஒளித்துநீ தனிவிளை யாடி லுய்வனே.

வேறு.

43. நேரலார் போரேறே நிடதத்தார் கோமானே
ஆரவரை மார்பா வளியோ னுயிர்க்குயிரே
காரிருள்வா யான்புலம்பக் கானகத்து விட்டகன்று
சாரலையா லென்னு மிதுவோநின் றண்ணளியே.

44. ஞாலத் திருண்டப்ப நாட்கமலம் வாய்நெகிழ
வேலைத் திரைமுகட்டில் வெய்யோ னெழுந்தன்றால்
மாலைக் கதிர்வடிவேல் மன்னர் பெருமானே
காலைக் கடவ கடன்கழிக்க வாராயே.

45. வாவுமின மான்காண் மயில்காண் மடப்பிடிகாள்
கூவுங் கரிய குயில்காண்மென் புள்ளினங்காள்
ஆவி யெனமேவி யகலே னெனவகன்ற
காவலன் றான்போன வழியெனக்குக் காட்டீரே.

தமயந்தி கானிடை மிக்க துன்பமுற்று வெவ்விய வனத்தை விட்டுநீங்கிச் சேதிபதி நகரத்தைச் சார்ந்தது.

வேறு.

46. துணிபட்டொழிந்தமென் றுகிலுஞ்சுடர்விட்டொளிரமண்ணுற
மணியிறவுன்றிமாசடைந்த வடிவுமவிழ்ந்தவார்குழலும்
பிணியுறுமழலுநெஞ்சமுமாய்ப்பித்தேறினாள்போற்கோமறுகில்
அணுகச்சேதிபதிநாயகன் றாய்கொலிவளொன்னாமையுறநாள்.

47. வந்தமடமான்முகநோக்கி வரிவண்டேப்பொதியவிழ்ந்த
அந்தண்கமலமலர்கவற்றி யழகுவாய்ந்தமுகம்பசப்பச
சிந்தைதளர்ந்துதனிப்போதற்குற்றதெவன்கொல்சேயிழையா
யுந்தையாருன்றலைவனெவ னுன்பேர்யாதிங்குரையென்றாள்.

48. வீமன்புதல்விபுகழ்நிடத வேந்தர்கோமான்மனைக்கிழத்தி
நாமம்பகரிற்றமயந்தி யென்பாடன்கோனண்ணலர்க்குக்
காமர்நிதியும்வளநாடுஞ் சூதினிழந்துகானிடைப்போய்
யாமந்தனின்மற்றவட்பிரிய வவளைத்தேடியீண்டணைந்தேன.

49. அனையமடமானுயிர்த்தோழி யானென்றுரைப்பவகமகிழ்ந்து
தனியளாகிக்கொடுங்கானிற் றலைவன்பிரியத்தளாந்தேங்குங்
கனைவண்டிமிருங்கருங்குழலைக் காணுமளவுமிந்நகரில்
இனையல்வாழியிருத்தியென விசைந்தாஙகவளுமிருந்தனளால்.

---

## அரிச்சந்திர புராணம்.

---

### சந்திரமதி புலம்பல்.

1. பனியானனைந்து வெயிலாலுலர்ந்து
 பசியாலலைந்துமுலவா
அநியாயவெங்க ணரவாலிறந்த
 வதிபாவமென்கொலறியேன்
தனியேகிடந்து விடநோய்செறிந்து
 தரைமீதுருண்டமகனே
இனியாரைநம்பி யுயிர்வாழ்வமென்ற
 னிறையோனும்யானுமவமே.

2. நிறையோசைபெற்ற பறையோசையற்று
 நிரையாய்நிறைந்தகழுகின்
சிறையோசையுற்ற செடியூடிறக்க
 விதியாரிழைத்தசெயலோ
மறையோனிரக்க வளநாடனைத்தும்
 வழுவாதளித்தவடிவேல்

இறையோனளித்த மகனேயுனக்கு
மிதுவோவிதித்தவிதியே.

3\. வானின்றிழிந்து சொரிகின்றதாரை
மழைபோலவீழவிழிநீர்
ஊனின்றமேனி யுதிரங்கள்சிந்த
வுயிரின்றிவெம்புதழலின்
மேனின்றுவெந்த தளிர்போலுறங்கி '
விதியாரைநொந்துதனியே
யானின்றிரங்க வேனென்பதில்லை
யிதுவோவுனீதிமகனே.

4\. செங்கோலறத்தின் முறையேசெலுத்து
திறலோனெவர்க்குமுரவோன்
வெங்கோபயானை விறன்மன்னனம்மை
விடுவிக்கவெண்ணிவருநாள்
பங்கேருகத்து மலர்போல்விளங்கு
வதனுமகிழ்ந்தபரிவால்
எங்கேயெனுசை மகனென்றுரைக்கி
னினியேதுசொல்வன்மகனே.

5\. நீராளவாவி செறிநாடனைத்து
நிறைமாதவற்குதவியும்
பாராளுநீர்மை தொடர்பற்றதன்று
படியாளுமெந்தைமுடியிற்
காராளரேர்கள் கடவோசையோய்வில்
கன்னேசிநாடதனைமேல்
ஆராளவல்ல ரவமேவனத்தி
லரவாலிறந்தமகனே.

6\. நல்லோர்வகுத்த முறையாமறங்க
ளுலெட்டிலொன்றுகுறையேம்
இல்லோரையற்ப மிகழேமிறுக்கு
மிறையன்றியேறவுகவேம்

சொல்லோமறுத்து முரையேமுரைத்த
துறவோர்கள்புத்திகடவேம்
எல்லோர்தமக்கு மினிதேவிளைப்ப
மேதாகவந்ததிதுவே.

7. மறைநீதியுற்ற புறநாடழித்து
வருசேனையாள்வதறியேம்
அறைநீதிமுற்று முணராவமைச்சை
யணிவாயில்வைததுமறியேம்
குறையேயிழைத்து வினையேவிளைத்த
குடிவைத்திருந்துமறியேம்
இறையேயுவத்தின் விளைவேயெமக்கு
மிதுவோவிதித்தவிதியே.

8. கனமுந்தருக்கள் குலமுந்தரித்த
கரமும்பெருததவுரமும்
தினமுஞ்சிறக்கு முகமுந்தரித்த
சிகையுங்கிடக்குமுறைகண்
டினமுநதரித்த துயிரானபாவி
யிறவாமலென்றன்மகனே
மனமுந்தரிபப திலைநொந்துபெற்ற
வயிறுந்தரிப்பதிலையே.

9. என்னுயகன்றன் மணிமார்பிலேறி
விளையாடுகின்றவெழிலோய்
முன்னாய்விளைந்த கனன்மூழ்கவெம்பின்
முதலேகடந்தமதலாய்
செந்நாய்திரண்டு செறிகானிருந்து
தெளியாதிரங்குமெனை நீ
அன்னாய்வருந்த லையெனுததுன்ற
னறிவுக்கடாதுமகனே.

10. மறவாளெயிற்று மணிமாசுணத்தின்
வலியாலிறந்துளவெனே

டிறவாதிருக்கு மதிபாவிதன்னை
றுறவேதெனக்கருதியோ
திறவாய்சிவந்த கனிவாயுரைத்தல
செயிலாய்முகத்துவிழியாய்
பிறவாதநித்த னடியேவழுத்து
பெருமானளித்தமகனே.

11. வடியேறுவெற்றி நெடுவேன்மலாக்கை
மகனோடிறந்துமடியாக்
கொடியேன்முகத்தில் விழியார்முனிக்கு
வளநாடளித்தகொடையார்
இடியேறடர்த்த மரமாகிமண்ணி
னிடையேயுழததலழகோ
அடியேனையொக்க முடியாதிருக்த
லநியாயமிககயமனே.

வேறு.

எனமறுகி யிவனுடனு மிறந்தே மாகி
லிவனையெடுத் தெரித்தடக்க வுரியா ரில்லை
மனமுருகா னம்மைவிலை கொண்டோன் சால
வன்கண்ணன் மனைவியவன் றனின்மா பாவி
சினமுடையா ரிடியுமுதற் செல்லே னுகிற்
செறுவரிவன் றனைக்கருச்சிச செலவ னென்று
தனதுதிரு மகனையெடுத் தணிதோள் வைத்துத்
தள்ளாடி மதிதயனூர் தனையை மீண்டாள்.

---

# கம்பராமாயணம்.

## 1. மாவலி கதை.

இராமலக்குமணர், விசுவாமித்திரருடன் செல்லுகையில், முன்னர்த் தோன்றியதோர் இருண்ட பொழிலைச்சுட்டி அஃதியாதென, அம்முனிவர், இது திருமால் தவம்புரிந்த இடமெனத்தொடங்கிப் பின்வருமாறுகூறுகின்றார்.

1. ஆனவ னிங்குறை கின்றவந் நாள்வாய்
ஊனமின் ஞால மொடுஙகு மெயிற்றன்
ஏனமெ னுந்திறல் மாவலி யென்பான்
வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்.

2. செய்தவர் வானவர் செய்குத லாற்று
மெய்தவழ் வேள்வியை முற்றிட நின்றான்
ஐயமில சிந்தைய னந்தணர் தமபால
வையமும் யாவும் வழங்க வலித்தான்.

3. ஆபத நிந்தனர் வானவ ரந்நாள்
மாயனை வந்து வணங்கி யிரந்தார்
தீயவன் வெந்தொழி றீரென நின்றார்
நாயக னும்மது செய்ய நயந்தான்.

4. காலநு னித்துணர் காசிப னென்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமா வித்தி னருங்குற ளானான்.

5. முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவ னனற்படு கையன்
அற்புத னற்புத ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதொா மெய்க்கொடு சென்றான்.

6. அன்றவன் வந்த தறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்.

நின்றனி னந்தண ரில்லை நிறைந்தோய
என்றனி னுய்ந்தவர் யாரினி யென்றான்.

7. ஆண்டகை யவ்வகை கூற வறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யாயினி நின்னுழை வந்தோரா
மாண்டவ ரல்லவா மாண்பில ரென்றான்.

8. சிந்தையு வந்தெதி ரொன்செய வென்றான்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல
வெந்திற லாயிது வேண்டுமெ னாமுன்
தந்தன னென்றனன் வெள்ளி தடுத்தான்.

9. கண்ட திறத்திது கைதவ மைய
கொண்ட குறக்குற ளென்பது கொள்ளேல்
அண்டமு முற்று மகண்டமு மேனாள்
உண்டவ னுமிது ணர்ந்துகொ ளென்றான்.

10. நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனககிய லாவகை தாழ்வது தாழ்வில
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனல மியாதுகொ லென்றான்.

11. துன்னினர் துன்னல ரென்பது சொல்லாா
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தானமு யாந்தவர் கொள்க
என்னினி வன்றுணை யாவ ருயாந்தாா.

12. வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுத ரீது கொடுப்பது நன்றால்.

13. மாய்ந்தவர் மாயந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொடி ரந்தவ ரெந்தாய்

வீந்தவ ரென்பவா வீந்தவ ரேனும
ஈந்தவ ரலல திருந்தவர் யாரே.

14. அடுப்ப வருமபழி செய்ளுரு மல்லா
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை தமமையு மனனா
கெடுபபவ ரன்னதோர் கேடிலை யென்றுனா.

15. கட்டுரை யிறறம கைத்துள போழுதே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோா
உட்டெறு வெமபகை யாவது லோபம்
விடடிட லென்று விலக்கினர் தாமே.

**வேறு.**

16. எடுத்தொருவ ருக்கொருவ ரீவதனின் முன்னம
தடுப்பது நினக்கழகி தோதகைவில் வெள்ளி
கொடுப்பது விலககுகொடி யோர்தமது சுறறம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றியொழி யுங்காண்.

**வேறு.**

17. முடியவிம் மொழியெலா மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ லொன்றுங் கொண்டிலன்
அடியொரு மூன்றுநீ யளந்து கொள்கென
நெடியவன் குறியகை நீரி னீட்டினுன்.

18. குறியவன் கையினீர் விழாமற குண்டிகை
மறிபட வாமனன் மலர்க்கைத் தர்ப்பையாற்
செறிவது நீக்கிடச சிதைந்து கண்ணுடைந்
துறுதுயாக் கடலிடை யுசன ஞேடினுன்.

19. கயந்தரு நறும்புனல கையிற நீண்டலும
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிா
வியந்தவர் வெருக்கொள விசும்பி ஞேங்கினுன்
உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே.

20. நின்றகான் மண்ணெலா நிரப்பி யப்புறம்
சென்றுபா விற்றிலை சிறிது பாரெனு
ஒன்றவா னகமெலா மொடுக்கி யும்பரை
வென்றகான் மீண்டது வெளிபெ றுமையே.

21. உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்
கலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதாம்
இலைகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைகுலாந் தோளினாய் சிறியன் சாலவே.

22. உரியதிந் திரற்கிதென் றுலகமீந்து போய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினான்
கரியவ னுலகெலாங் கடந்த தாளிணை
திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டவே.

23. ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலா தில்லைவே றிருக்கற் பாலதே.

---

2. சடாயு தசரதரை நினைந்து புலம்பல்.

1. பரவலருங் கொடைக்குநின்றன் பனிக்குடைக்கும் பொறைக்குநெடும்
பண்பு தோற்ற
கரவலருங் கற்பகமு முடுபதியுங் கடலிடமுங்
களித்து வாழப்
புரவலர்தம் புரவலனே பொய்ப்பகையே மெய்க்கணியே
புகழின் வாழ்வே
இரவலரு நல்லறமும் யானுமினி யென்படநீத்
தேகி னாயே.

2. அலங்கார மெனவுலகுக் கமுதளிக்குந் தனிக்குடையா
யாழி சூழ்ந்த
நிலங்காவ லதுகிடக்க நிலையாத நிலையுடையே
னேய நெஞ்சின்

நலங்காண நடந்தனையோ நாயகனே தீவினையே
னண்பி னின்றும்
விலங்கானே னுதலினல் விலங்கினே னின்னுமுயிர்
விடடி லேனல.

3. தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி சமபரனைத்
தடிந்த வந்நாள்
அயிர்கிடக்குங் கடல்வலயத் தயலறிய நீயுடனு
னுவி யென்று
செயிர்கிடத்தல செயயாத திருமனத்தாய் செப்பினைய
திறம்பா நின்சொல்
உயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினு ருணர்விறந்த
கூற்றி னுரே

---

### 3. சடாயு இராவணனுக்குக் கூறியது.

1. உத்தமன் றேவியை யுலகொ டோங்குதேர்
வைத்தனை யேகுவ தெங்கு வானினே
டித்தனை திசையையு மறைப்பெ னீண்டெனுப்
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினுன்.

2. வந்தன னெருவையின் மன்னன் மாண்பிலான்
எந்திரத் தேர்சசெல வொழிக்கு மெண்ணினுன்
சிந்துரக் கால்சிரனு செக்கர் சூடிய
கந்தரக் கயிலையை நிகர்க்குங் காட்சியான்.

**வேறு.**

3. கெட்டாய்கிளை யோடுநின் வாழ்வையெலாம்
சுட்டாயிது வென்ன தொடங்கினைநீ
பட்டா யெனவே கொடுபத் தினியை
விட்டே குதியால் விளிகின் றிலையால.

4. பேதாய்பிழை செய்தனை பேருலகின்
மாதாவனை யாளை மனக்கொடுநீ
யாதா கநினைத் தனையெண் ணமிலாய்
ஆதா ரநினைக கினியா ருளரோ.

# பெரியபுராணம்.

## அப்பரும் ஞானசம்பந்தரும் திருப்பூந்துருத்தியிற் சந்தித்தல்.

1. பொன்னிவலங் கொண்டுதிருப் பூந்துருத்தி யிலிருப்பக்
கன்மனத்து வல்லமணர் தமைவாதிற் கட்டழித்துத்
தென்னவன்கூ னிமிர்த்தருளித் திருநீற்றி னொளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர் மறையவனார் வருகின்றார்.

2. தீந்தமிழ்நாட் டிடைநின்று மெழுந்தருளிச் செம்பொன்னி
வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார் வாக்கினுக்கு
வேந்தரிருந் தமைகேட்டு விரைந்தவர்பாற் செல்வனெனப்
பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்தணைந்தார்.

3. சண்பைவருந் தமிழ்விரக ரெழுந்தருளத் தாங்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் மனமகிழ்ந்து
கண்பெருகுங் களிகொள்ளக் கண்டிறைஞ்சுங் காதலினால்
எண்பெருகும் விருப்பெய்த வெழுந்தருளி யெதிர்சென்றார்.

4. காழியர்கோன் வருமெல்லை கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணாமே தொழுதருளி
வாழியவர் தமைத்தாங்கு மணிமுத்தின் சிவிகையினைத்
தாழுமுட லிதுகொண்டு தாங்குவன்யா னெனத்தரித்தார்.

5. வந்தொருவ ரறியாமே மறைந்தவடி வொடும்புகலி
அந்தணனா ரேறியெழுந் தருளிவரு மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்றாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால்.

6. திருஞான முனிவரா சிருந்ததிருப் பூந்துருத்திக்
கருகாக வெழுந்தருளி யெங்குற்றா ரப்பரென
உருகாநின் றும்மடியே னும்மடிக டாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றேனென்றார்.

7. பிள்ளையா ரதுகேளாப் பெருகுவிரை வுடனிழிந்தே
யுள்ளமிகு பதைப்பெய்தி யுடையவர சினைவணங்க
வள்ளலார் வாகீச ரவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான்மறிக்கரத்தார் தொண்டரெலாந்தொழுதார்த்தார்.

---

## சீவகசிந்தாமணி.

---

### சீவகனுக்குப் போதகாசிரியன் நற்புத்தி கூறியது.

1. அறிவினுற் பெரியநீரா ரருவினை கழியநின்ற
நெறியினைக் குறுகியின்ப நிறைகட லகத்துநின்றார்
பொறியெனும் பெயரவைவாய்ப் பொங்கழ லரவின்கண்ணே
வெறிபுலங் கன்றிநின்றார் வேதனைக் கடலுணின்றார்.

2. கூற்றுவன் கொடியனுகிக் கொலைத்தொழிற் கருவிசூழ்ந்து
மாற்றரும் வலையைவைத்தான் வைத்ததை யறிந்துநாளும்
நோற்றவன் வலையைநீங்கி நுகர்ச்சியி னுலகநோக்கி
ஆற்றுறப் போதநேற்று மளியமோ பெரியமேகாண்.

3. பேரஞரி டும்பையெல்லாம் பிளந்திடும் பிறப்புநீக்கும்
ஆரமிா தரிதிறபெற்றும் அதன்பயன் கோடனேற்றும்
ஓருமைம் பொறியுமோம்பி யுளபகல் கழிந்தபின்றைக்
கூரெரி கவரும்போழ்திற் கூடுமோ குறித்தவெல்லாம்.

4. தழங்குரன் முரசிற்சாற்றித் தத்துவந் தழுவல்வேண்டிச
செழுங்களி யாளாமுன்ன ரிருளறச் செப்பினுலும்
முழங்கழ னரகின்சூழ்கு முயற்சிய ராகிநின்ற
கொழுங்களி புணர்வினுரைக் குணவதங் கொளுத்தலாமோ.

---

## நன்னூற்பொதுப்பாயிரம்.

---

### 1. பாடங்கேட்கும் முறை.

1. கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிறசார்ந்.

திருவென விருந்து சொலலெனச சொலலிப்
பருகுவ னன்னவார் வத்த னாகிச
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப
போவெனப் போத லென்மனார் புலவர்.

2. நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல
பாடம் போற்றல கேட்டவை நினைத்தல
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்.

3. ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

4. முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

5. ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றலலது பற்றல னாகும்.

6. அவ்வினை யாளரொடு பயிலவகை யொருகால்
செவ்விதி னுரைபப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

7. அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவககு மத்திறம்
அறத்திற் றிரியாப் படாசசி வழிபாடே.

---

2. மாணாக்கரது வரலாறு.

1. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

2. அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

3. களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் றறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

---

**தாயுமானவர் பாடல்.**

1. ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
வாலமமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட வனனிற்க விலலையோ
வந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க விலலையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்தமே கங்களும் வசரதர ணையிற்
சஞ்சரித் திடவிலலையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

2. எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென்
னிதயமு மொடுங்கவில்லை
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை
யாதினு மபிமானமென்

சித்தமிசை குடிகொண்ட நீகையொ டிரக்கமென்
　　சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
　　தெரிசனஞ் செய்துமறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
　　புகன்றிடேன் பிறர்கேட்கவே
போதிப்ப தலலாது சும்மா விருந்தருள்
　　பொருந்திடாப் பேதைநானே
அந்தனே குணகேடர் கண்டதாக கேட்டதா
　　வவனிமிசை யுண்டோசொலாய்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
　　யானந்த மானபரமே.

3\. அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
　　யறியாத பகருவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா
　　னற்றே னலந்தேனென
என்புலன் மயங்கவே பித்தேறறி விடடா
　　யிரங்கியொரு வழியாயினும்
இன்பவெள மாகவந் துள்ளங் களிக்கவே
　　யென்னைநீ கலந்த துண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
　　தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத
　　தன்மையாற் றனியிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
　　சுகம்வந்து வாய்க்குமுரையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
　　சோதியே சுகவாரியே.

4\. கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
　　கன்னெஞ்ச முருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
　　கற்பிக்க வொருகடவுளோ

வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை
வாழ்விப்ப துன்பரங் காண்
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள னீதமோ
புகலிடம் பிறிதுமுண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னாவனந்தோ
சொல்லான் முழுகிலோ சுகமிலலை மௌனியாய்ச்
சும்மா விருக்கவருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

5\. கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலா மொருசிங்க முதுகின்மேல் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணும லுலகத்து லாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாம்
சந்ததமு மிளமையொ டிருக்கலா மறறொரு
சரீரத்தி னும்புகுதலாம்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

1. எத்திக்குந் தானாகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே.

2. பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

3. ஓயாதோ வென்கவலை யுள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

4. ஒகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே.

5. உள்ள மறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே.

6. கன்றினுக்குச் சேதாக் கனிந்திரங்கல போலவெனக்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே.

7. ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற றிரிவதென்ன பாவம் பராபரமே.

8. வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றுயுளறும்
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே.

9. இந்தநாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரும்
அந்தநாட் காக்கவல்லா ரார்காண் பராபரமே.

10. எள்ளளவு நின்னைவிட வில்லா வெனைமயக்கில்
தள்ளுதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே.

11. எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
தெய்வ வருடகருணை செய்யாய் பராபரவே.

2. எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கும்
அத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே.

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.

னமடங்கக் கற்றாலுஞ் சித்திபெற றாலும்
னமடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

15. கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்க்
கள்ளமனந் துள்ளுவதேன் கண்டாய் பராபரமே.

16. ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்குமுனைத்
தேடியோய் கின்றேனென் செய்வேன் பராபரமே.

17. மாறுத துன்பமெல்லாம் வந்துரைத்தா னின்செவியில்
ஏறுத வாறே தியம்பாய் பராபரமே.

18. தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்தும்
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே.

19. ஆங்கார மென்னுமத யானைவா யிறகரும்பாய்
ஏங்காம லெந்தையரு ளெய்துநா ளெந்நாளோ.

20. கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்திர
வானமுத வாவி மருவுநா ளெந்நாளோ.

21. கற்குணத்தைப் போன்றவஞ்சக காரர்கள்கை கோவாமல்
நற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ.

22. கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்
சொற்கண்டா லோடுமன்பா தோய்வறிவ தெந்நாளோ.

23. சாட்டையிலாப் பம்பரம்போ லாடுஞ் சடசால
நாட்டமற வெந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ.

24. துன்பமெனுந் திட்டனைத்துஞ் சூறையிட வையாவே
இன்பவெள்ளம வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனோ.

25. ஆசைச சுழற்கடலி லாழாம லையாநின்
நேசப் புணைததா னிறுததிடு லாகாதோ.

26. ஏதுந் தெரியா தெனைமறைதத வல்லிருளை
நாதாநீ நீக்கவொரு ஞானவிளக் கில்லையோ.

27. ஆவித் துணையே யருமருந்தே யென்றனைநீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறைவாமோ.

---

# நாலடியார்.

1. உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பா வான்றோய் மலைநாட
உய்த்தீட்டுந் தேனீக கரி.

2. மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்கா யுதிர்தலு முண்டு.

3. புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க வறவினை—இன்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச
சென்றா னெனப்படுத லான்.

4. கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை—நீர்த்தன்றிக
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மகக டம்வாயான் மீட்டு.

5. அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழ்வு மியல்புடையா ரெஞ்ஞான்.
துன்புற்று வாழ்த லரிது.

6. நடுவூருள் வேதிகைச சுற்றுக்கோட் புகக
படுபனை யன்னர் பலர்நசச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டு ளேற்றுப் பனை.

7. கடிப்பிடு கண்முரசங் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பா
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல.

8. ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போல்
ஒருதன்மைத் தாகு மறநெறி யாபோல்
உருவு பலகொள லீங்கு.

9. குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நலலம்யா மென்னு நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு.

10. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எமமை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோல்
மம்ம ரறுக்கு மருந்து.

11. களாநிலத் துப்பிறந்த வுப்பினைச சான்றோர்
விளைநிலத்து நெலலின் விழுமிதாக கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

12. வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வார்
எசச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

13. கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற றெரிந்து.

14. தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்—காணாய்
அவன்றுணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல.

15. கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈர மிலாளர் தொடர்பு.

16. கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

17. அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோது வதெல்லாம்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

18. கடித்துக் கரும்பினைக் கண்டகர் நூறி
இடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து.

19. கள்ளார்கள் ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர்.

20. பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த்—தீய
புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா வவற்கு.

21. ஊரங் கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்—ஓரும்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.

22. ஒண்கதிர் வாண்மதியஞ் சேர்தலா லோங்கிய
அங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉம்
குன்றிய சீர்மைய ராயினுஞ் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின்.

23. பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையுந் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச சார்ந்து.

24. கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
ஒல்காவே யாகு முழவ ருழுபடைக்கு
மெல்லியரே யாயினு நற்சார்வு சார்ந்தார்மேல்
செல்லாவாஞ் செற்றார் சினம்.

25. நிலநலத்தா னந்திய நெல்லேபோற் றத்தம்
குலநலத்தா லாகுவா சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும்.

26. மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனந் தீபபட்டக் கால்.

27. உறுபுன றந்துல கூட்டி யறுமிடத்தும்
கல்லூற் றுழியூறு மாறேபோற் செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணுஞ் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை.

28. கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போல்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறும்
தாளாளர்க் குண்டோ தவறு.

29. ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉம்
காழ்கொண்டக் கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றான்
தாழ்வின்றித் தன்னைச செயின்.

30. இசையா தெனினு மியற்றியோ ராற்றால்
அசையாது நிற்பதா மாண்மை—இசையுங்கால்
கண்ட றிரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று.

31. நல்ல குலமென்றுந் தீய குலமென்றும்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
என்றிவற்றா னாகுங் குலம்.

32. ஆன்படு நெய்பெய் கலனு ளதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு.

33. கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
இருப்பினு நாயிருந் தற்றே யிராஅ
துரைப்பினு நாய்குரைத் தற்று.

34. எனதென தென்றிருக்கு மேழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானுந்—தனதாயிற்
றானு மதனை வழங்கான் பயன்றுவ்வான்
யானு மதனை யது.

35. ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகின்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதும்
கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர்.

# திருக்குறள்.

---

### கடவுள் வாழ்த்து.

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

2. கற்றதனா லாய பயனென்கொல வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்

3. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.

### வான் சிறப்பு.

4. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

### அறன்வலியுறுத்தல்.

5. சிறப்பீனுஞ் செலவமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு

6. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

### வாழ்க்கைத்துணைநலம்.

7. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

### புதல்வரைப் பெறுதல்.

8. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச செயல்

9. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனககேட்ட தாய்

10. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

அன்புடைமை.

11. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

விருந்தோம்பல்.

12. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

13. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

இனியவை கூறல்.

14. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

15. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

செய்ந்நன்றியறிதல்.

16. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

17. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

18. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

19. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

அடக்கமுடைமை.

20. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

21. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

ஒழுக்கமுடைமை.

22. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்.

பிறனில் விழையாமை.

23. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

பொறையுடைமை.

24. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை.

அழுக்காறாமை.

25. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

வெஃகாமை.

26. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

27. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

புறங்கூறாமை.

28. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும்.

பயனில சொல்லாமை.

29. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

30. பயனிலசொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

தீவினையச்சம்.

31. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

ஒப்புரவறிதல்.

32. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

33. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

ஈகை.

34. நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று.

35. சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈத லியையாக் கடை.

புகழ்.

36. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

37. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

அருளுடைமை.

38. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

39. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

40. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு.

கூடாவொழுக்கம்.

41. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

42. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

கள்ளாமை.

43. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

வாய்மை.

44. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

வெகுளாமை.

45. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

46. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்.

இன்னாசெய்யாமை.

47. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

48. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக கடை.

கொல்லாமை.

49. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

50. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

நிலையாமை.

51. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

52. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

53. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

54. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு.

55. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

கல்வி.

56. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.

57. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

58. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

59. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

60. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

கல்லாமை.

61. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

62. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

கேள்வி.

63. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

64. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற
கொற்கத்தி னூற்றாந் துணை.

அறிவுடைமை.

65. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.

குற்றங்கடிதல்.

66. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

பெரியாரைத்துணைக்கோடல்.

67. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

68. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

சிற்றினஞ் சேராமை.

69. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

70. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

71. மனநல மன்னுயிர்க் காக்க மினநலம்
எல்லாப் புகழுந் தரும்.

72 நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்.

தெரிந்து செயல்வகை.

73. எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு.

வலியறிதல்.

74. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

75. ஒல்வ தறிவ தறிந்ததன் கண்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

76. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

77. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

78. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

79. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

காலமறிதல்.

80 பருவத்தோ டொட்ட வொழுகற் றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

81. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

82. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

83. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

84. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

85. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

இடனறிதல்.

86. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது.

87. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

88. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

தெரிந்துதெளிதல்.

89. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

சுற்றந்தழால்.

90. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

91. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.

பொச்சாவாமை.

92. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

செங்கோன்மை.

93. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

94. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு.

95. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

96. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

கொடுங்கோன்மை.

97. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

கண்ணோட்டம்.

98. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

99. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப படும்.

100. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

101. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலா கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில.

ஊக்கமுடைமை.

102. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

103. வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

மடியின்மை.

104. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

105. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

106. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

ஆள்வினையுடைமை.

107. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

108. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

109. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

110. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக கூலி தரும்.

111. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

இடுக்கணழியாமை.

112. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

113. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்.

சொல்வன்மை.

114. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

வினைத்தூய்மை.

115. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

வினைத்திட்பம்.

116. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

வினைசெயல்வகை.

117. பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்
இருடீர வெண்ணிச செயல்.

118. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச செயல்.

குறிப்பறிதல்.

119. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

அவையஞ்சாமை.

120. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

121. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.

122. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக
கற்ற செலசசொல்லா தார்.

பொருள்செயல்வகை.

123. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள.

நட்பு.

124. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

125. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நடபு.

நட்பாராய்தல்.

126. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

தீநட்பு.

127. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

கூடாநட்பு.

128. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

பேதைமை.

129. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

உட்பகை.

130. உடமபா டிலாதவர் வாழ்ககை குடங்கருட
பாம்போ டுடனுறைந் தற்று.

பெரியாரைப்பிழையாமை.

131. எரியாற சுடபபடினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

132. குன்றன்னார் குன்ற மதிப்பிற குடியொடு
நினறன்னார் மாயவர் நிலத்து.

கள்ளுண்ணாமை.

133. துஞசினார் செததாரின் வேறலல ரெஞ்ஞான்றும்
நஞசுண்பார் கள்ளுண் பவா.

சூது.

134. சிறுமை பலசெய்து சீரழிககுஞ சூதின்
வறுமை தருவதொன் றில.

குடிமை.

135. நிலத்திற கிடந்தமை காலகாடடுங காடடுங்
குலத்திற் பிறந்தாரவாயச சொல.

136. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்ககும் பணிவு.

மானம்.

137. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தா
நிலையி னிழிந்தக கடை.

பெருமை.

138. பிறப்பொககு மெல்லா வுயிர்க்குஞ சிறபபொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

139. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

சான்றாண்மை.

140. இன்னாசெய் தார்க்கு மினியவே செயயாககால
என்ன பயத்ததோ சாலபு.

நன்றியில்செல்வம்.

141. நச்சப் படாதவன் செல்வ நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

142. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

நாணுடைமை.

143. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

144. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

குடிசெயல்வகை.

145. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச
சுற்றமாச சுற்று முலகு.

நல்குரவு.

146. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்
இன்மையே யின்னா தது.

147. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள
யாதொன்றுங் கண்பா டரிது.

இரவச்சம்.

148. கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்.
இரவாமை கோடி யுறும்.

பண்புடைமை.

149. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

கயமை.

150. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

---

# கடவுள்செய்நன்றி.

உலகத்தார் மேகத்திற்கு ஒரு நன்மையும் செய்யாதிருந்தும், அம்மேகம் அவர்களுக்கு க்ஷேமமுண்டாக மழையைச் சொரிவது போல, கடவுளானவர் ஆத்மாவினிடத்திற் கைம்மாறு வேண்டாது, அடைதற்கரிய அசாத்தியமாய் ஒப்பற்ற பெரிய வீட்டின்பத்தை அடையும்படி செய்யும் மகோபகாரத்தை "வான்செய்த நன்றிக்கு வையகமென்செய்யுமதை மறந்திடாதே" என்றபடி எப்பொழுதும் மறவாது தியானிக்கவேண்டும்.

தெய்வபக்தியே தீவினையாகிய உளையைக் கடந்துசெல்லும் ஊன்றுகோல்; தெய்வதரிசனமே பிறவிக்கடலைக் கரைகாணும் நாவாய்; தெய்வத்தியானமே முத்தியாகிய மேல்வீட்டிலேறும் நூலேணி; தெய்வத்தின் அருளுதயமே அஞ்ஞான இருளை யொழிக்கும் ஆதித்தியோதயம்; தெய்வவணக்கமே நரக வாசலை அடைக்கும் தாழ்; தெய்வத்தை வாழ்த்தும் வாழ்த்தே பாச விலங்கைத் தறிக்கும் கருவியாம். தெய்வபக்தி உதிக்காமல் உலக பாசம் ஒழியென்றாலும் ஒழியாது; தெய்வத்தைத் தொழாமற் பாவநிவாரணமாகிறது பிரயாசம். தெய்வத்தை ஆராதிப்பதல்லவோ தவஞ்செய்கை; அதற்கு அந்நியமாகச்செய்வதெல்லாம் அவஞ்செய்கையே. ஒரு நொடிப்பொழுதாவது தெய்வத்தை ஸ்துதியாத நாவுக்குப் பரிசுத்தமேது? தெய்வசிந்தனையினாலன்றிச சித்தசுத்தி சொப்பனத்திலும் வருமா? சுயகாரிய துரந்தரனுஞ் சுவாமிகாரிய வழுவழுகனுமாய் இருப்பவனுக்குத் தெய்வகடாக்ஷம் எவ்வாறு கிடைக்கும்? "குழந்தையுந் தெய்வமும் கொண்டாடுமிடத்தில" என்கின்றார்களே.

சூரிய கிரணம் பாயாததும், காற்று வீசாததுமாகிய இடமுமிருக்கலாம்; கடவுளின் வியாபகத்திற்கு அந்நியமோ ஒன்றுமில்லை. ஆதலால், அவருக்கு அகம புறம் எங்குங் கண், எங்கும் செவி, எங்கும் வாய், எங்கும் முகம்; சகலாண்டசராசரமும் அவருடைய திருவுருவமாம். அதனால் அவர் காணாத காட்சியும்,

அவர் கேளாத கேள்வியும், அவர் பேசாத பேசசும், அவரறியாத விஷயமுமில்லை. அதுபற்றி எவர்களும் அவராணையை மீறிக் குற்றஞ் செய்யவும், செய்த குற்றத்தை மறைக்கவும், ஒரு விதத்திலாவது அவரை வஞ்சிக்கவும் கூடாது. என்றாலும், எக்காலமும் அவர் திருவுளத்திற்குப் பாங்காய் நடக்கின்ற பக்தர் செய்த குற்றத்தை மாத்திரம் அவர் கண்டும் காணாமலும், உணர்ந்தும் உணராமலுமிருப்பார்.

சிலர் தங்களுக்கு வருத்தம் சம்பவித்த காலத்தில், தாம் செய்ததெல்லாம் குறையாயிருக்க நானென்ன குறைசெய்தேனென்றும், தாம்செய்த சதியை நினையாமல் என்னளவில் தெய்வம் சதி செய்ததேயென்றும், அதைவணங்குகிறதுதான் ஏதுக்கு, அதற்கென்ன கண்ணில்லையா வென்றும், சாற்றுக்கில்லாத வாழைக்காய் பந்தலிலே கட்டித் தொங்க இருக்கிறதோ? இப்படிப்பட்ட ஆபத்துக்கு உதவாமல் இனியென்னதான் சாதிக்க இருக்கிறதென்றும், தெய்வத்தை நிந்திப்பார்கள். அது நன்மையேயன்று.

குருட்டுக்கண் தூங்கியென்ன விழித்தென்ன? தெய்வபக்தியில்லாதவர்கள் கங்காஸ்நானஞ் செய்தாலும், வனவாசம் பண்ணினாலும், மலைக் குகைக்குள்ளே கண்ணைத் திறவாமல் யோகத்தி லிருந்தாலும், முத்தியடையமாட்டார்கள். ஆமை, மீன், தவளை முதலானவைகள் கங்காநதியில் உற்பவித்து, அக்கங்கைக்குள்ளேதானேமூழ்கியிருந்தும், யானை, புலி, கரடி முதலியவைகள் காட்டில் உற்பத்தியாகி, அக்காட்டினிடத்திலேயே வாசஞ்செய்தும், பகற்குருடாகிய கோட்டான் மரப்பொந்துகளுள்ளேதானே கண்ணைமூடிக்கொண்டிருந்தும் என்னபிரயோசனம். தத்துவவிசாரணைசெய்து, தாடி சடைவளர்த்துக், தலையைமுண்டித்துக், தண்டகமண்டலமேந்திக், தவவேடம் பூண்டிருந்தும், தெயவத்தியான மிலலாதவர்க்கு என்ன பயனுண்டு? அவர்கொண்ட கோலம அலஙகோலமான பேய்க் கோலம், அல்லது பிணக்கோலமே. தெய்வத்தை அருச்சியாத கை நெற்குற்றும் உலக்கை, அலலது வீட்டு உத்திரக்கை. தெய்வத்தைப் புணியாதமுடி சழனியில் நடும் நாற்றுமுடி, அல்லது கமபள நார்முடி. தெய்வத்தைத் தரிசியாத கண் பனையின் நுங்குக்கண், அல்லது பாம்புப்புற்றுக்கண். தெய்வத்தை வாழ்த்தாத

வாய் மலஜலமோடுங் கால்வாய், அல்லது சுண்ணும்புக்காளவாய். தெய்வஸ்தலத்தைத் தேடிச்செலலாத கால் கொலலைப் பரண் கால், அல்லது பந்தலுக்கு நாட்டுங் கால். தெயவஸ்துதியைக் கேளாத செவித்துளை பருத்த நுகத்துளை, அல்லது பாழான சாரத்துளையாம்.

காற்றுக்கெதிரே ஏற்றிய விளக்கைப்போல் அடிக்கடியலைந்து, ஓயாமலாடும் பம்பரம்போல இடைவிடாது சுழன்று, ஒருவேலையு மில்லாவிட்டாலும் நிற்கநேரமில்லாமல் திரியும் நாய்போல அரைக்கணமுந் தங்காது காடு மலை காறுகளெல்லாங் கடந்து, லோகாலோகமெங்கும் ஓடியுழல்கின்ற பொல்லாத மனமென்னும் குரங்கு, அஞ்ஞானமாகிய வெறிகொண்டு, ஆணவமாகிய மாத்திலேறிப், பலவகையெண்ணமாகிய இலைகள் செறிந்த ஆசையாகிய கிளைகளைத்தாவித், தீவினையாகிய கனிகளைக் கொள்ளைகொண்டு சேஷ்டை செய்யவொட்டாமல், அதனை நிராசையாகியகயிற்றினுற் கட்டி, விடயவாதனையிலலாமல் அடக்கிவைத்தாலும், தெய்வத்தை உணரும் ஞானமில்லாதவர்களுக்கும் மோட்சதிற்கும் வெகுதூரமே.

"ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனும்
மெய்யறி விலாதவர்கள் வீடது பெறுரே"

என்றுஞ சொல்லியிருக்கின்றதே.

தெய்வநிலை இத்தன்மைத்தென்று, அத்தெய்வத்தின் அருளைக் கொண்டறிந்தாலன்றி மற்றொருவிதத்தில் தெளியக்கூடாமையால, யானைகண்ட குருடர் போலவும்,

"தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண் டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னு னுருவுகண் டாரையொத்தார்."

என்றாற்போலவும, உலகத்திலுள்ள பற்பல சமயத்தாரும் பற்பல அவசரமாகத் தாம் தாம் கண்டதையே பொருளென்று மதித்து அதற்குததகக யுக்திசாதனங்களைக்கொண்டு சாதிப்பார்கள். அதை விரிக்கிற் பெருகும்.

# தமிழும் சமஸ்கிருதமும்.

---

தமிழுஞ் சமஸ்கிருதமும் ஈஸ்வரன்பால் உதித்த இரட்டைப் பிள்ளைகளாம். சமஸ்கிருதத்திற்குப் பாணினியுந் தமிழிற்கு அகத்தியருஞ் செவிலித்தாயராயினர். சமஸ்கிருதம் வடபாலில் நைமிசாரணியத்து ரிஷிகள் கோட்டத்திலுந் தமிழ் தென்பாலில் மதுரைப் பாண்டியர் அவைக்களத்திலும் வளர்ந்து முறையே வடமொழி தென்மொழியெனும் நாமம வழங்கப்பெற்றன. இவ்விரண்டு பாஷைகளின் சமத்துவத்தை அவ்விரண்டும் முற்றக் கற்ற சிவஞானயோகீசுவரர்

"இருமொழிக்குங் கண்ணுதலே முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பும்
இருமொழியுந் தழீஇயினா ரான்றவரே யென்றாலிவ்
இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ."

என்று கூறி வற்புறுத்தினார்.

அகத்தியர்க்குத் தமிழிலக்கணம அறிவுறுத்தியவர் சுப்பிரமணியக்கடவுளெனச் சைவர் கூறுவர். சமணர் அதனை மறுத்து அவர்க்கு அவ்வறிவுறுத்தினார் அவலோகிதனென்பர். அகத்தியர் சைவோத்தமராதலின் அது பொருந்தாது. அஃதெவ்வாறாயினும் ஆகுக, தமிழணங்கைப் பரிபாலித்து வளர்த்தவர் அகத்தியரென்பது அனைவருக்கும் உடம்பாடேயாம். வளர்ந்த இடம் மதுரையாயினுந் தமிழின் சனனபூமி கங்காதீரமேயென்பதூஉம், ஆரியர் வடமேற்றிசையினின்று வந்து கங்காதீரத்திற் குடியேறினபோது ஆண்டு இருந்த தமிழர் அவரோடு இணங்கியிராது பிரிந்து பற்பல இடங்களிற் சென்று சிதறுண்டு வதிந்தனரென்பதூஉம், அவர்களில் தென்னாட்டிற்கு வந்தவர்களே ஈண்டுச் சேரசோழ பாண்டிய இராசியங்களை நாட்டினரென்பதூஉம், மதுரைச் சங்கத்தில் வளர்ந்து விருத்தியடைந்து சிறப்புற்ற தமிழோடு அவ்வாறு சிறப்புறாதனவாய்க் காலவேற்றுமை சிறிதடைந்து வழங்குவனவாய்த் தென்மேற்கிற் புக்கு உறைந்த மலையாளரதும் மேற்கிற்புக்கு உறைந்த குடகரதும் உதகமண்டலத்துப் புக்கு உறைந்த தோடரதும் வடக்கில் இமயமலைச்சாரலிற் புக்கு உறைந்த ஒரு

வகைவேடாதும் பாஷைகளுக்குள்ள ஒற்றுமையான் விளங்கும். சமஸ்கிருதம் உசசாரணவன்மையானும் வேதாகம அதிகாரத்தானும் மந்திரோபதேசப் பயிற்சியானும் ஆடூஉலக்ஷணமுடையதாகத், தமிழ் தன் மிருதுத்தன்மையானும் குயில் கிளி பூவைகள் தலைநாணும் ஓசையும் கரும்பு தேன் பாகு பாலென்றிவற்றைவென்று தேவாமிர்தத்தோடொத்த இனிமையும் உடைமையானும் தேவார திருவாசாதிகளினூற் சாக்ஷாத் ஈஸ்வரனையும் மயங்கச்செய்யும் வசிகரணத்திறனும் சங்கீதசாகித்திய செய்யுள்வினோதங்களானும் மகடூஉ லக்ஷணம் மேற்பட்டது. இரண்டும் ஒன்றோடொன்று கலவாது, விந்தகிரிக்கும் வேங்கடமலைக்கும் இடையேகிடந்ததோர் பேராரணியத்தாற் காக்கப்பட்டுவளர்ந்தன. ஆயினும் மங்கைப்பருவமுற்ற கன்னித்தமிழ் பின்னர்த் தன் புராணேதிகாசகாலத்திற் சமஸ்கிருத நாயகனை மாலைசூட்டி மணம்புரிந்தது. ஆதலால் இருஞான்றைத் தமிழில் வழக்கினுஞ் செய்யுளினுஞ் சமஸ்கிருதம் எங்கணும் வியாபித்துக்கொண்டிருக்கின்றது. பண்டைத் தமிழோ அக்கலப்புடையதன்று. இஃது இரண்டு பாஷையின் இலக்கணவிதிகளாலுஞ் சங்கமரீஇய பழைய தனித்தமிழ் நூலகளாலும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெள்ளிதிற்புலப்படும்.

தமிழ் தற்பாஷை என்பதற்குப் பூர்வாசிரியர்கள் கீழவாய்க் கணக்கிற்கும் விரவியல செய்யுட்கும் மணிப்பிரவாளத்திற்கும் வேற்றுமைவகுத்த இலக்கணமே சாட்சிபகராதா? தற்காலத்தில் இங்கிலீஷ் பிராஞ்சியாதி மொழிகள் சேர்ந்த தமிழ்ச செய்யுட்குள்ள ஊனம் அக்காலத்தில வடமொழிச் செறிவுக்குளதாயின் வடமொழி தமிழுக்குத் தாய்மொழியென்றெவ்வாறு பெறப்படும்? கடைசசங்கத்திலுங் கடைக்காலத்துப் பிறந்த நாயனார்குறள் ஔவைபாடல் திரிகடுகம் நான்மணிக்கடிகை பஞ்சமூலம் ஏலாதி பழமொழி முதலியவற்றில் வரும் ஆரியமொழி எத்துணைசிறுபான்மைய?

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
யென்று தருங்கொ லெனவேண்டா—நின்று

சலியா திளந்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தானறருத லால்.

இளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்றா னுழவும்—இளைஞனைக்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையு மிம்மூன்றும
உள்ளன போலக் கெடும்.

நல்லார்க்குந் தம்மூரென் றூரில்லை நன்னெறியிற்
செல்வார்க்குந் தம்மூரென் றூரில்லை—யல்லாக்
கடையார்க்குந் தம்மூரென றூரில்லைத் தங்கைத
துடையார்க்கு மெவ்வூரு மூர்.

சிலம்பிக்குத் தன்சினை கூற்றநெடுங் கோடு
விலங்கிற்குக கூற்ற மயிர்தான்—பலன்படா
மாவிற்குக் கூற்றம் வளைஞண்டிற் குப்பார்ப்பு
நாவிற்கு நல்லார் வசை.

அறுநால்வ ராய்ப்புகழ்ச் சேவடி யாற்றப்
பெறுநால்வர் பேணி வழங்கிப்—பெறுநால்
மறைபுரிந்து வாழுமேன் மண்ணொழிந்து விண்ணோர்க்
கிறைபுரிந்து வாழ்த்த லியல்பு.

பொல்லாத சொல்லி மறைநதொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கு—நல்லாய்
மணலின் முழுகி மறைந்து கிடக்கு
நுணலுந்தன் வாயாற் கெடும்.

இறையனவாகிய குமரகுருபரசுவாமி நூல்களெத்தன்மைய?

நீரிற் குமிழி யிளமை நிறை செல்வ
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரி
லெழுத தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

இவையெல்லாஞ் சமஸ்கிருதத்தினின்று பிறந்தனவாமே!! இவ்வாறு மயங்குவார் கலவியறிவில்லாதார் மாத்திரமன்று. தமிழிலக்கணக்கடன்முழுதுண்டு, இலக்கணக்கொத்து ஏப்பமிட்டு வடிந்து, நிலம் நீர் எனப் பொதுவெழுத்தான் வரினுந் தமிழ் தமிழே என்று வற்புறுத்துவான் "பொதுவெழுத் தானுஞ் சிறப் பெழுத் தானு-மீரெழுத் தானு மிலங்குந் தமிழ்மொழி" என்று

சூத்திரமியற்றிய சுவாமிநாத தேசிகரே, தம்மரபின் முன்னோர் மதத்தையும் மறந்து, "நூலுரை போதகா சிரியர் மூவரு-முக்குண வசத்தான முறைபிறழ்ந் தறைவரே" என்னுந் தன்விதிக்குத் தன்னையே இலக்கியமாக ஒப்பித்தாற் போல, "அன்றியு மைந்தெழுத் தாலொரு பாடையென் - றறையவு நாணுவ ரறிவுடையோரே" யென்று மாழ்கினா. இது வடமொழிப் பயிற்சியே மிக்குடையராய் அதன்மேற் கொண்ட பேரபிமானத்தானும அம்மொழியின மேற தென்மொழியன்றிப் பிறிதுமொழி தெரியாக் குறைவானும நேர்ந்த வழுவன்றோ? உலகத்தில் எப்பாஷைக்குஞ் சிறப்பெழுத்துச சில்லெழுத்தேயாம். உரபபியும் எடுத்துங் கனைத்தும் ஒவ்வொன்றையே வேறுமும்மூன்றாக விகற்பித்துச்சரிக்கும் ஐவர்க்கத்தையுங் கூட்டெழுத்தையும் ஒழித்தால எட்டெழுத்தாலொரு பாஷையின்றேயென்று சமஸ்கிருதத்தையும புரட்டிவிடலாமே. இங்கிலீஷ் பாஷையில வடமொழிக்கில்லாத எழுத்துக்கள் F Z இரண்டாதலால் இரண்டெழுததாலொரு பாஷையின்றேயென அதனையும் மறுபபார் போலும். இரண்டறகுப் பொதுவாயுள்ளனவற்றை ஒன்றறகே உரியனவாகத் தீர்த்து நடுவுநிலைமை குன்றல் இவர்போலியர்ககுப் பெருங்குறறமாம.

அன்றியும் வடமொழியில இல்லாத புணர்ச்சியிலக்கணங்களுங் குறியீடுகளும வினைத்தொகை குறிப்புவினை முதலிய சொலலிலக்கணங்களும் உயர்திணை அஃறிணைக்கூறுபாடும் பால்விகுதிகளும் அகம் புறம் என்னும் பொருட்பேதங்களும ஐந்திணையியலபுகளும் அவற்றின் துறைகளும வெண்பா கலிப்பா கலித்துறை முதலிய செய்யுளிலககணங்களும் இவை போல்வன பிறவுங் காலத்திற்குக் காலம் பிற்றைநாளிற் தோன்றாது ஆதியிலககணமாகிய அகத்தியத்திலே முற்ற உரைக்கப்படடமையால் தமிழ் சமஸ்கிருதத்தினின்று பிறவாத தற்பாஷை என்பது பசுமரத்தாணிபோல நாட்டப்படும்.

அகத்தியர் தமிழ்மொழியை அவலோகித முனிவர்பாற் கற்றுணர்ந்தாரெனவும் அருகர்மதமுஞ் சுவாமியிடந் தமிழ்மொழியையுஞ் சுப்பிரமணியக் கடவுளிடம் அதன் இலக்கணத்தையும் [illegible]தியுணர்ந்தாரெனக்கூறுஞ் சைவமதமும் அகத்தியர்க்குமுன்னுங்

தமிழுண்மைக்குச் *சான்றும். சிலா சுவடி எழுத்து நெடுங் கணக்கு முதலிய சொற்களை ஆதாரமாகக்கொண்டு ஒருவாறு வரிவடிவெழுத்தும் முன்னர் இருத்தல் வேண்டும் எனக் கூறுவர்.

"அகத்தியன் பயந்த செஞ்சொலாரணங்கு" "பொற்பொதிய மாமலையான் மொழி" "பொற்பொதிய மாமுனி புகன்ற தமிழ்" "குறுமுனிவ ஞர்தமிழ்" என விலலிபுத்தூராரா,தியா கூறிய வெல்லாம் உபசார வழக்கென்க. அலலதூஉஞ் சுவிகாரபுத்திர தருமமெனக் கொளளினும் அமையும்.

வியாசா புராணங்கள் செய்தகாலத்தில தமிழ இலலையென்றும் இஃதொன்றே தமிழ்பிற்றைநாளது என்பதறகுச் சான்றுகுமென்றும வாதிபபாருமுளரெனிற், புராண இதிகாசஙகளினகத்துச் சேயஞெஞூா மணலியூா முதலிய சுத்த தமிழ்ப்பெயாகள் கூறபபடடிருப்பதால தமிழ் அவாகாலதததுளளதெனபது தெள்ளிதிற கொளளறகும் என்க.

## பயனிலுழவு.

ஏரிகளில்லாத சிலவிடங்களில மானவாரிபபயிா செய்வதுண்டு. இந்த மானவாரிப் பயிரோ முழுவதும அநியாயம். ஏனெனில அஙகே ஏரிநீர் பாய்வதற்கிடமில்லாமையால வானத்தையே எதிர்பாாகக வேண்டியிருக்கின்றது. இககாரணத்தால் இதை வானம்பார்த்த பயிரென்றுஞ் சொலவார்கள். இதில வானமபெய்

* "விடைகொடு போவா னென்றை வேண்டின னேகுந் தேயந்
தொடைபெறு தமிழ்நா டென்று சொல்லுப வந்த நாட்டி
னிடையயின் மாந்த ரெல்லா மின்றமி ழாய்ந்து கேள்வி
யுடையவ ரென்ப கேட்டார்க் குத்தர முரைத்தல் வேண்டும்.

சித்தமா சகல வந்தச் செந்தமி ழியனூ றன்னை
யுத்தனே யருளிச் செய்தி யென்றன னனையான் றேற
வைத்தனை முதனூ றன்னை மற்றது தெளிந்த பின்னு
நித்தனே யடியே னென்று நின்னடி காண்பே னென்றான்."

என்னும் திருவிளையாடற் புராணச்செய்யுட்கள் இதனை மெய்ப்படுத்தும்.

தால்தான் சிறிது பலனுவது காணலாம். இலலாவிடடால் "வா னஞ் சுருங்கிற்றுனஞ் சுருங்கும்," என்றவாறே சூனியம். ஆத லால் இது 'முதலே துர்ப்பலே அதிலுங்கர்ப்பிணி' என்பதுபோ லாகும. எங்கும் மண்டல வருஷமாய்க் காலத்தில மிதமழை பெய்யவேண்டும். அப்படிப் பெய்யாவிட்டாலும், அகாலத்திற் பெய்தாலும், குறைவாய்ப் பெய்தாலும், அதிகமாகப் பெய்தா லும், தக்கபடி முயற்சி செய்யாவிட்டாலும் நஷ்டமேயன்றி நயம் வராது.

சில கிராமங்களில ஏரிகளிருந்தும் "பேர் கங்காபவானி தா கத்திற்குத் தண்ணீர் கிடையாது" என்பதுபோல அவைகளுக்குத் தண்ணீர் வருவதற்கிடமிலலாமற் புனறகுளமாயிருப்பதனுலும், சில கிராமங்களில் உளளவைகளோ அதிக நீர் கொள்ளாத சிற்றேரி களாகையினுலும் "அம்மையார் நூற்ற நூலுக்கும் பையன் அரை ஞாண் கயிற்றுக்கும் சரி" என்பதாக முதறபோகத்துககேயன்றி, இரண்டாம்போகம் மூன்ரும்போகம் பயரிடுவதற்கு ஏதுவில்லாம லிருக்கின்றது.

சில இடங்களில "ஏருமடைக்கு நீரபாய்ச்சுகிறது," என்கிற பழமொழிக்கிசையப் பள்ள மடையிலிருந்து மேட்டு நிலத்திற்குப் பாய்ச்சவேண்டி ஏரி நீரையேயலலாமல் குளத்துநீர் கிணற்று நீரையும் கவலேபோட்டும் ஏற்றம்போட்டும் மார்பில இரத்தமவிழ இடுப்பொடியக கைசலிக்க இறைத்து வருத்தப்படுகிருர்கள். இது வரவு கொஞசமும் வலிப்பதிகமுமாயிருக்கிறது.

அன்றியும் குடிகளுக்குள் அவரவர் தங்கள் தங்கள் கழனி களுக்கு ஏரித்தண்ணீரை மடைவழியே மாற்றிக்கொண்டு போய்ப் பாய்சசுதற்காக இராத்திரியில் நஞ்சோடு நஞ்சு கலக்கின்ற நடுச் சாமத்தில் விஷ ஜெந்துவாகிய பாம்பு கடித்தாலும் துஷ்டமிருக மாகிய புலியடித்தாலும் ஏனென்று கேட்பாரில்லாமல் தனியே போய் நித்திரையுமிழந்து வருத்தப்படுகிறதுமன்றி இந்த விஷயத் தில் ஒருவருக்கொருவர் மாளாதபகைகொண்டு பிராணசேதமாகி றதையும் பாராமற் பெருஞ்சண்டையிட்டு மண்டையை உடைத் துக்கொண்டு மாண்டுபோகிறதுண்டு. இது "காணிலாபம் கோடி நஷ்டமாய்" இருக்கிறதே. சிலவூர்களிற் காணி பூமியில்லாத சுக

வாசிகள் ஊர்க்காணியாட்சிக்காரராகிய மிராசுதாரருடைய நிலத்திற் பயிரிட்டுச் சர்க்கார் தீர்வையும் கிராமமேரையும் கொடுக்கிறதுண்டு. அப்படியானல் இவர்களுக்கென்ன கிடைக்கும். இது "பெருமைக்குப்பன்றி வளர்க்கிறதாக அல்லவோ" முடியும்.

அநேக கிராமங்களிற் படடி முதலானவைகளாலும் திருடர்களாலு மாத்திரமலலாமல் "பத்துப்பெயா மருத்துவிச்சிகள் கூடிக்கொண்டு குழந்தை கையை ஒடித்தார்கள்" என்பதாக நிலத்தைத் தரவாரி செய்கிறவாகளாலும், சரித்கரம் ஏற்படுத்துகிறவர்களாலும், அடங்கல் பர்க்கிறவர்களாலும், அதிமாஷ் செய்கிறவர்களாலும், தொகம் போடுகிறவர்களாலும் சில காலஙகளில் அதிக நஷ்டம் வருகிறதுண்டு. துரைத்தனத்தைச சார்ந்த உத்தியோகஸ்தர் முதலானவர்கள் இப்படிப பயிர்செய்பவர்களையே யலல, மற்றவர்களையும் மாசசரியத்திஞல வஞ்சிக்கிறது அவர்களுக்குச சுபாவ குணமாயிருக்கிறது. அவாகள் 'தாம் கெட்டாலும பிறர்க்குச் கேடு நினைக்கலாகாது' எனபதை அறியார்களோ ?

கருநாடக துரைததனத்தில் ஓராற்றினிடத்தில் ஆயிரம் பொதிமாட்டு வர்த்தகா வந்திறங்கியிருககையில், இரவிலே ஆற்றில் வெள்ளம் வந்து அங்கு இறங்கியிருந்த பொதிகளையும் மாடுகளையும் வர்த்தகர்களையும் அடித்துக்கொண்டுபோக, விடிந்தபொழுது அவர்களில தப்பிப் பிழைத்தவாகள விசனப்படுவதை ஆற்றுக்கு அடுத்த கிராமத்தில் இருந்த கணக்கன் கண்டு, தனக்குப பகையாளியாகிய குயவன் குடியைக் கெடுபபதறகு இது தான் சமயம் என்று நினைத்து வர்த்தகர்களை அந்தக் கிராமத்தார் இடத்தில போய் முறையிட்டுக்கொள்ளச சொல்லிக், கிராமத்தா இதற்கு நாங்கள் என்ன செய்கிறது என்றால, இந்த நஷ்டம் குயவன் கொடுக்க வேண்டியது, இது சமாசாரத்தை ஊாக் கணக்கனைக் கேட்டால தெரியவருமெனறு வாத்தகர் சொல்லும்படி செய்வித்துக், கிராமத்தார் தன்னைக் கேட்கையில் அப்படித்தான் வழக்கம், கணக்கைப் பார்ககவேண்டும என்று சொலலி, வீட்டில் வந்து பின்வருகிறபடி ஓர் ஏட்டில் எழுதி அது பழையதாகத் தோற்ற நெல்லுப் பானையில் வைத்து வேவித்து, வெகு நாளைக் கணக்குக கட்டின் நடுவிலே கோத்துக்கட்டிக், கட்டோடே எடுத்துவந்து கிராமத்தா

ருக்கு முன் அவிழ்த்து அதற்குள் தேடி எடுப்பதுபோல அந்த ஏட்டை எடுத்துக், "காட்டெருமுட்டை பொறுக்கி, மடகலஞ் சுட்ட புகைபோய், மேற்கே மேகங்கிளம்பி, மின்னிக்குமுறி மழை பொழிய, ஆற்றில வெள்ளம் பெருகி அடித்துப்போன பல சரக்கை, ஊரார் இழுப்பது வழக்கு குயவன் இறுப்பது கணக்கு," என்று வாசித்துக் காட்டச சரிதான் என்று கிராமத்தார ஒப்புக் கொண்டு அந்த நஷ்டத்தை ஊர்க்குயவனைக் கொடுக்கச சொல் லித் தீர்த்தார்கள். குயவன் ஐயையோ தெயவமே இதுவும் தலை விதியா? என்று உப்புசசட்டி வறைமேர்டும் விற்று வர்த்தகருக் குத தொலைத்தான். இதுவே மேற் சொல்லப்பட்டதற்குத் தகு தியான. சாதிருசியம்.

"பூனைக்குக் கொண்டாட்டம் எலிக்குத் திண்டாட்டம்," என் பது போலத் தமக்குச சௌக்கியமும் பிறருக்கு அசௌக்கியமு மாம் என்பதை யோசியாமல சுஜாதி அபிமானமுமில்லாமல தாம தாம் ஜீவனஞ் செய்யும் நிமித்தத்தையே பெரிதாக நினைத்துக் கிரம மான இந்த இங்கிலீஷ் துரைத்தனத்திலும் நெறிதவறி, "குலத்துக் கீனங் கோடாரிக் காம்பு," என்கிறபடி இந்துக்களே கெடுக்கத் தலைப்படுகின்றார்களே! இதைக்குறித்து இராஜாங்கத்தார செவ் வையாய் ஆராய்ந்தறிந்து அத்தவறு வராமல நடத்தவேண்டும் அல்லவோ? அவ்வாறு நடத்தாமல் நமக்கு என்னவென்று கண் சாடையாயிருந்தால அந்தத்தோஷம் "ராஜா ராஷ்டிர கிருதம் பாபம்," என்றவாறாக, மேற்படி இராஜாங்கத்தாரைத்தானே சாரும். அவ்வித தோஷத்திற்குத் துரைத்தனத்தார் இடங்கொடா மல் குடித்தனத்திற்கு க்ஷேமமுண்டாகும்படி செய்வார்களானால் அவர்கள் துரைத்தனம் மேன்மேலும் அபிவிர்த்திக்கும் என்பதற் குச் சந்தேகமில்லை.

குலோத்துங்க சோழராஜனுக்கு மகுடாபிஷேகமானபொழு து வித்வஜனர்களெல்லாம் அவன்மேற் கவிபாடி அவனை வாழ்த்தி னார்கள். அத்தருணத்தில், ஔவையென்பவள் அவ்விடத்திற்கு வந்தாள். அவளை நோக்கி அங்குள்ள பெரியோர்கள், அம்மா! நீர் அரசனை வாழ்த்துதல் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அவள் "வரப்புயர" என்று சொல்லிப் பேசாமலிருக்க, அவர்கள்

அக்கருத்தறியாமல் அவள் வாழ்த்தவில்லையென்றெண்ணி மறு படியும் இருமுறை வினவ, அவள் முதன் முறை சொன்னபடி சொல்லி நான் முக்காலும் வாழ்த்தியும் என்னை நீங்களேன் அலட்டு கிறீர்களென்று கேட்க, அவர்கள் எவ்விதமாக வாழ்த்தினீரென்ன 'வரப்புயர' என்று வாழ்த்தினேனே நீங்கள் அறியவில்லையா வென்ன, அவர்கள் அதன் தாற்பரியமென்னவென்று உசாவ, 'வரப்புயர நீருயரும், நீருயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுய ரும், குடியுயரக் கோலுயரும், கோலுயரக் கோனுயர்வான்' என வாழ்த்தியதாமென்றாள்.* இப்படிப்பட்ட சிறியவாக்கியங்களாலும் குடித்தனஞ் செழித்தால் துரைத்தனஞ் செழிக்குமென்று விளங்கு கின்றதே.

---

## சேரிடமறிந்துசேர் *

முற்காலத்தில் நான் குடியிருந்த ஒரு முதுமரப்பொந்தில் இருந்த கபிஞ்சலனென்னுங் குருவியும் நானும் மாலைக்காலங்களிற் பலபல பேச்சுகள் பேசிக்கொண்டு சுகித்திருந்தோம். ஒருநாள், அவன் வேறொரு பக்ஷியோடு கூடப்போய் மீண்டுவராமையால் நான் 'ஐயோ அவன் வலையிற்பட்டானோ! யாராவது கொன்றார் களோ தெரியவில்லை! எப்போதும் வேறோரிடத்தில் தங்குகிறவ னல்லவே!' என்றிப்படி விசனப்பட்டு வழிபார்த்துக்கொண் டிருக் கும்போது, மூன்றுநாள் அவன் பொந்தில் ஒரு முயல்வந்து, நான் பல பல விதமாய்த் தடுத்துச் சொல்லியுங் கேளாமல் முரட் டுத்தனமாய்க் குடி புகுந்தது. எங்கேயோ சிலநாள் கபிஞ்சலன் மனதின்படியே நெற்கதிரைத் தின்றுகொண்டிருந்து, பிறகு தன் னிடத்துக்கு வந்து பார்க்கையில் தன் வீட்டில் முயலிருக்கக்கண்டு அதைப் பார்த்து 'அடா சசமே! உனக்கென்வீட்டிலிருத்தல் நன் றன்று, பொட்டெனப் புறப்பட்டுப் போ' என, இதைக்கேட்டு முயல் 'அடா பேதாய்! இஃது உன்வீடன்று, என்வீடே; வீணுகப் பொய்சொல்லிப் பயனில்லாமல் நட்பை ஏன் இழக்கிறாய். வாவி, கிணறு, குளம், கோயில், சத்திரம் இவற்றின் சுதந்தரம் அவற்றை

---

* இக்கதை பஞ்சதந்திரத்தினின்றெடுக்கப்பட்டது.

விட்டு நீங்கினபிறகு அந்நீங்கினவனிடத்திலிராது; மற்றும் ஒரு வன் வீட்டைப் பிறனொருவன் பத்தாண்டளவும் யாவருமறிய அநு பவித்தால் அவ்வீடு அவனதே. இந்த விடயத்திற் சாக்ஷியும் எழுத் தும் பிரமாணமாகா. இந்நியாயம் மனிதர்களிடத்திலிருக்கிறது. பறவைகளில் எது வலிதோ அது கைக்கொள்ளுமென்று இப்படித் தர்ம நியாயமிருக்கிறதினால, வீடெனதே' என; ஆந்தை 'நீ தரும சாஸ்திரத்தைக் குறித்துப் பேசுகின்றமையால நீயுநானுஞ் சாஸ் திரிகளிடத்திறபோய் இதைக் குறித்துக் கேட்டு அவர்கள் யாரை இருக்கலாமென்கிறார்களோ அவர்களிருக்க உடன் படுவோம்' என்று சொல்லி நிச்சயித்து இருவரும் விவாதம்பண்ணிக்கொண்டு போகையில இவ்வழக்கு எப்படியாகிறதோ பார்க்கலாம் என்று நானும் அவர்களைத் தொடர்ந்து போனேன். அங்கே கூர்ம்பலல னென்னும் பூனை இவர்கள் பேச்சைக்கேட்டு இவர்கள வழக்குத் தீர்ப்புக்குப் போகிறார்கள்; இவர்களை மோசம பண்ணவேண்டு மென்று நிச்சயித்து அந்த வழியில ஆற்றங்கரையிற கண்ணை மூடிக்கொண்டு சூரியனைப பார்க்கிறதுபோலபிநயித்துக்கொண்டு, "ஆ! ஆ! இந்தஅசாரமான சமுசாரத்திலுண்டாகிற இன்பம கணத் திலழிந்து கனுப்போற் பொய்யாகிறதினால் தருமத்தைவிட வேறே கதியில்லை. அறத்தை விட்டு எவன் நாள்களைக் கழிக்கிறானோ அவன் மரப்பாவையொத்தவன். அவனை மூச்சுவிட்டுக் கொண் டிருக்கையிறாறானே பிணமென்று எண்ணவேண்டும. எப்படித் தயிரிற் சாரம் நெய்யோ, எள்ளில விசேஷம் எண்ணெயோ, அப்ப டிப் பிழைத்திருக்கிறதிற் சாரந் தருமமாம். இதைத்துறந்து மிக வுஞ் சோற்றைத் தின்றுகொண்டே காலங்கழிக்கிறவர்கள் நிலச் சுமையாயிருக்கிறார்களென்று துக்கப்படுகிறேன். ஓ சனங்களே! தருமம் பலபல இடையூறுகளோடு கூடிக்கொண்டிருக்கிறதாகை யாற் சுருக்கமாயச் சிறிது தருமஞ் சொலலுகிறேன். பிறர்க்குதவி செய்வதற்கொத்த புண்ணியமும், பிறரை வருத்துவதையொத்த பாவமுமில்லை. மேலுந் தனக்குத் துன்பந்தருவது பிறருக்குந் தருமென்று இப்படித் தாமரகசியங்களைக்கேட்டு உள்ளத்தில்வைக் கவேண்டும்" என, இப்படி அதன் வாக்கியத்தைக் கேட்டு முயல், கபிஞ்சலா தருமஞ் சொல்லுகிறவன் ஆற்றங்கரையிலுட்கார்ந்திருக்

கிருன் அவனைக் கேட்போமெனக், கபிஞ்சலன் இவன் நமக்கியல்பான பகையாளியாதலால தூரத்திலிருந்தே சொலலவேண்டுமென்று நிருணயித்து அவனைப்பாாத்து, 'ஓ தபோநிதியே! நீ அறமுணர்ந்தவனுகையால எங்களிருவருடைய வழக்கைக் கேட்டுத் தருமநூற்படி நியாயஞ்சொல்லிப் பொய்சொலலுகிறவனைக் கொல்லவேண்டும்' என, இவ் வாாத்தையைக கேட்டுப பூனை காதின்மேற் கையைவைத்து "அரஹரா!! இப்படிப்பட்ட பேச்சை மறுபடியுஞ் சொல்லாதேயுங்கள். நரகத்திற்குக் காரணமாகிய இதை விட்டு நான் அறத்தையே அனுசரித்துக்கொண்டிருக்கின்றேன். மேலும் கொலை செய்கிற புலிமுதலானவற்றைக் கொலலுகிறவர்களும் நரகத்திற்குப போகிருாகளென்று சாதுக்கள் சொல்லுவார்களானல் மறறவர்கள்கொலையினுல் நரகம்வருமென்பதில் ஆச்சரியமென்ன? யாக கருமத்தில பசுவைக கொலலுகிறவாகள் வேதாகமத்திலுள்ள பொருளை யறியாதவாகள். அநத விஷயத்தில ஏழு வருடத்தின் நெல்லைக்கொணடுவந்து ஓமம பண்ணவேண்டுமென்று சொலலியிருக்கிறது. பசுக்களைகொன்று மரஙகளைவெட்டி ஓமம் பண்ணிச சுவாக்கம கிடைக்கிறதாஞல நரகத்திறகேன் போகிருர்கள். ஆதலால் இவையெலலாம வஞ்சகர்களுடைய காரியமென்று அறிந்திருக்கின்றமையால உங்களைச சுத்தமாயத தின்னேன். உங்களுக்கு வழககு மாத்திரம தீாப்பேன். நான கிழவனுனபடியினுல் எனக்குத் தூரத்துச்சொற கேளாது. நீங்கள கிட்டவந்து ஒருவரொருவாக்கு இருக்கின்றவழககு என்னமோ அதைசசொன்னுற் கேட்டு இம்மைக்கு நலந்தருவதாகிய நடுநிலைமையாய்ச் சொல்லுவேன்; ஆசையினுலேனும் கோபத்தாலேனும அநியாயத் தீர்ப்புச் சொல்லுகிறவன் நரகத்திறபோவான், நீங்கள் என் காதினருகே வந்து உங்கள வழககைத தெரிவியுங்கள" என, அவை இப் பசப்பு வார்த்தையினுல் அதனிடத்தில் நம்பிக்கை வைத்துக் கிட்டவர, அவற்றைக் கைகளினுல் ஒருமிக்கச சேர்த்துப் பிடித்து வழக்கற இரண்டையுந் தின்றது. ஆதலால் தீயோரைச் சேர்ந்தால் இப்படிக்கொத்த தீங்கு நேரிடுமென்று அறிந்து செய்யத்தக்கது எதுவோ அதைச செய்யவேண்டும்.

---

# வசந்தருதுவின் நல்வரவு.

---

இப்போது சிசிர ருதுபோய் வசந்தருது துவக்கமாகிற கால மாதலால், இச் சமயத்தில் வசந்த ருதுவின் பெருமைகளை எடுத்துச் சொல்வது மிகவும் ஏற்றதாயிருக்குமென்று கருதி அதை ஒருவாறு கூறுகிறோம். எல்லாச்சிறப்புக்களுக்கும் இருப்பிடமான இப்பூமி பலகண்டங்களாகவும் தேசங்களாகவும் பிரிக்கப்பட்டு, அவற்றுள் நாடுகளென்றும் நகரங்களென்றும் கிராமங்களென்றும் பிரஜைகள் வசிக்கப் பல வாச சாதனங்கள் அமைந்ததாய் மிகவும் மேன்மை பெற்றிருக்கின்றது. அத்தேசங்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்ததெனப் பிரசித்தி பெற்றிருக்கும் இப்பரதகண்டமானது எல்லாவிஷயங்களிலும் மற்றவைகளைப்பார்க்கிலும் மேன்மை வகித்திருக்கின்றதென்பது அனைவர்க்கும் ஐயந்திரிபறத் தெரிந்த விஷயமே. அப்படிப்பட்ட பரதகண்டத்தின் தக்ஷிண பாகமான விந்தியமலையின் தென்புறத்திலே, வடமேற்குத் தேசங்களில் உள்ளதுபோல வருஷத்து ருதுக்கள் நான்காகாமல், இரண்டுமாதத்திற்கு ஒரு ருது விழுக்காடு ஆறு ருதுக்கள் வழங்கி வருகின்றன. அவை வசந்தருது, கிரீஷ்மருது, வருஷருது, சரத்ருது, ஹேமந்தருது, சிசிரருது என்பவைகளாம்.

அவற்றுள் முதலான வசந்தருது சகல குணங்களிலும் முதன்மையாகி எல்லா ஜனங்களுக்கும் மிகுந்த மனவெழுச்சியை உண்டாக்குகின்றது. வசந்தமென்னும் சொல்லைக் காதினால் கேட்டமாத்திரத்திலே நம்முடைய மனதுக்கு ஒருபோதும் இல்லாத அற்புதமான உல்லாசமொன்று தனக்குத்தானே உண்டாகிறதென்றால், அதன் பெருமைகளை அனுபவிக்கும்பொழுது உண்டாகும் உல்லாசத்திற்கு எல்லை இவ்வளவென்று யார்தான் கண்டு சொல்லக்கூடும்? சகல ஜனங்களுக்கும் உள்ள துன்பங்களைப் போக்கிச், சவுக்கியமும் உற்சாகமும் விசேஷமாக விருத்திசெய்விக்கவேண்டுமெனக் கருதி, கொடிய ராஜன்மேல் படையெடுத்து வருகின்ற ஒரு மகாராஜனைப்போல், வசந்தராஜன், மெல்லிய தளிர்களோடு கூடிய பூங்கொடிகளாகிய கவசமணிந்து, வண்டுக

னாகிய கடிவாளம் பூட்டிய குளிர்ந்த வாசனையோடு கூடிய மந்த மாருதமாகிய போர்க்குதிரைமேல் ஏறிக்கொண்டு வருவதுகண்டு, சிசிரனுடைய சேனையெல்லாம் பயந்தோடி அழிவதுபோல, விருக்ஷங்களில நிறைந்துள்ள பழுத்த இலைகள் யாவும் உதிர்ந்துபோய், அழகான மெல்லிய தளிர்கள் தளிர்க்கத் துவங்குகையில், வசந்த ராஜனுடைய ஜய சங்கம் போலக் குயில்களின் மதுரமான மெல்லிய கண்டத்தொனி கேட்கலாகின்றது. மிகக் கொடிய நடக்கையுள்ள துஷ்டராஜனால் அரையிற் கட்டிய கந்தையும்போய்த் திகம்பரர்களாய் விசாரமுற்றிருக்கின்ற குடிகள், நற்குண நற்செய்கை உள்ளவனாய் நாட்டுக்கு நல்லரசன் ஒருவன் வந்ததனால் சகல சம்பத்துக்களோடுகூடச் சிறந்த நூதனமான ஆடையாபரணங்களை அணிந்து, மிகுந்த உற்சாகம்பொருந்திப் பிரகாசிப்பதுபோல, இலைகளெல்லாம் உதிர்ந்துபோய்க் கட்டையாக நிற்கின்ற மரங்களெல்லாம் நிரம்பவும் அரும்பரும்பாக முகிழெடுத்துப் பின்பு அப்பொழுதுதான் குஞ்சு பொரித்த கிளிப்பிள்ளைகளின் இறகு போலத் தோன்றி, நாளளவிலே கொளுசங்கொளுசமாய் அலரி மலர்போல் மலர்ந்து, மிகவும் மனோகரமான செம்மை நிறமுடையனவாகிப், பார்ப்பவர்களுக்கெல்லாம் நேத்திரோற்சவமாயிருக்கின்றன. இப்படி எல்லோர்க்கும் ஆனந்தப்பெருக்கை உண்டாக்குகின்ற வசந்தகாலத்தினது நல்வரவு எவர்க்குத்தான் வருந்திவேண்டத்தக்கதன்று ?

அந்த வசந்தகாலத்தில் உல்லாசத்துடன் உலாவித்திரியாத பிராணி எங்கும் இல்லை. எவரும் தாங்கக்கூடாத மிதமிஞ்சின குளிரினால் உலகத்தை மிகவும் வருத்துகின்ற ஒரு பெருங்கடலை ஓடத்தின் மீதேறி மெல்லக் கடந்து சீதோஷ்ணங்கள் சமபரிமாணமாகித், தேகத்துக்குச் சவுக்கியமும் மனதுக்கு விகாசமும் உண்டாக்குகின்ற ஒரு திவ்வியமான தவீபாந்தரத்தில் சேர்வதுபோலப், பனிகுளிர்களால் உலகத்தை மிகவும் உபத்திரவப்படுத்துகின்ற சிசிரருதுபோய், மனோகரமான தளிர்கள் நன்றாக விகசித்துப் பரிமளம் வீசுகின்ற பலவகைப்புஷ்பங்கள் நிறைந்த செடிகொடிகளடர்ந்த காடுகளாலும் தாமரைத் தடாகங்களாலும் பூமியை அலங்கரிக்கின்ற வசந்தருது சேர்ந்தவுடனே பிராணிகளுக்கு உண்டாகும்

ஆனந்தத்தை நாம் என்னென்று சொல்லலாம். "இம் மாசி பங்குனி மாதங்களாகிய குளிர்காலத்தின் பனியொழிந்து, விளக்குச் சுவாலையின் நுனிப்புகையேறிக் கறுத்துப்போன முத்துச்சரங்கள் போலப் பனியினால் கருகிப்போன மாம் பூங்கொத்துக்களெல்லாம் உதிர்ந்துபோய், சம்பங்கிப் பூக்கள் அழகாய் எங்கும் மலர்ந்திருக்க நாம் எப்போது காணப்போகிறோம்! எந்தப்புறம் பார்த்தாலும் மனதுக்கு ரமணீயமாயும் இன்பந்தருவதாயும் இருக்கிற விநோதங்களைக் கண்டு களிப்படைவதெப்போ! நக்ஷத்திரங்களால் ஆகாயம் அலங்கரிக்கப்பட்டிருப்பதுபோலப் பூமுகிழ்களால் உலகத்திலுள்ள பூஞ்செடிகளெல்லாம் பார்க்க விநோதமாய் அலங்கரிக்கப்படுவதெப்போ! சிவப்புவர்ணங்களை எங்கும் பரவச் செய்துகொண்டு தடாகங்களுக்கு அலங்காரமாய் நிரம்ப விகசித்து எங்கும் பரிமளம் வீசுகின்ற செந்தாமரை மலர்களைப் பார்க்கும்படியான பாக்கியம் நமக்குக் கிடைப்பதெப்போ! பசிலைப் பந்தல்களிற் பட்டுக்குஞ்சுகள் கட்டினதுபோலச் சுகந்தக்கொடி மண்டபங்களில் சுகந்த மலர்கள் மலர்ந்து வாசனை வீசிக்கொண்டு கொத்துக் கொத்தாய்த் தொங்கக் காண்பதெப்போ! குயில்கள் கானம் பண்ணுவதையும், கிளிகள் பாடுவதையும், மாடப்புறாக்கள் கொஞ்சுவதையும், நாகணவாய்ப்புட்கள் பேசுவதையும், இன்னும் இவ்வண்ணமே இதரமான பல பக்ஷிகளும் பூந்தாதுகளையும் பழங்களையும் தின்று கொழுத்துப் பாடகர்கள் போல மதுரமாய்ப் பாடுவதையுங் கேட்டு நாம் களிப்படைவதெப்போ! வசந்தனென்னும் இந்திரஜால வித்தைக்காரன் தான் முதலிற் பரப்பின கெம்புக்கற்களை உடனே பச்சையாக மாற்றினானென்று சங்கிக்கும் விதமாய் மரம் செடிகளில் அப்போதுதான் புதிதாய் அங்குரித்த செம்மை நிறமுள்ள பூந்தளிர்களெல்லாம் பச்சை நிறமுடையவையாக மாறப், புஷ்பங்களின் மகரந்தங்களைக் குடித்து வண்டுகள் விநோதமாய்த் தென்னென்று கூவிப்பாடவும், நீர்ப்பறவைகள் தடாகங்களில் சிறகடித்து விளையாடவும், நாம் கண்டு களிப்படைவதெப்போ! மலைப் பிராந்தங்களிலும் ஆற்றோரங்களிலும் அழகாய் மரம் செடிகள் அடர்ந்துள்ள காடுகளுக்குப்போய் விநோதமாக நாம் விளையாடுவதெப்போ!" என்று இப்படிப் பலவாறு வேண்டிச், சிசிருது பிர

வேசித்தது முதல வசநதருதுவின் நல்வரவை எல்லாரும் எதிர் பார்த்திருப்பார்கள்.

சரம்கோத்ததுபோல வரிசை வரிசையாயக காணப்படுகின்ற பூங்கொத்துக்கள் முத்தாஹாரமாகவும, பலவகைப் பூக்களினின்றும தேன்கலந்து உதிர்கின்றபூந்தாதுபபொடிகளகலவைபபூச்சாகவும, மிகுந்த பரிமளத்துடன் வீசுகின்ற மந்தமாருதமே உசசுவாஸநிசசுவாஸங்களாகவும, பூக்களிலுள்ள தேன்கள் பலவிடஙகளிலும் விழுவதால் உண்டான வியர்வைநீராகவும், தளிர்களோடு கூடிய பூமொக்குக்கள ரத்தினாபரணஙகளாகவும, நன்றாக மலர்ந்த பலவர்ணஙகளுள்ள புஷ்பஙகள் சித்திரப பட்டாடையாகவும், மாடப்புறாககளுடைய கூசசல் ஒருவகை விநோதபபேச்சாகவும் கொண்டு, வசந்த புருஷனுககாக மேனமையாயச சிஙகாரித்துக் கொண்டுவந்த பெண்மணியோவென்று சொலலுமபடியாக வனலக்ஷ்மி விளஙகிசகொண்டிருக்கையில, ஒவவோரிடஙகளில வேர் தொடஙகி நுனிமரம்வரையில வெள்ளை வெளேலென்று நிரம்பப பூத்திருக்கிற மரஙகள் வசந்தராஜனுடைய சேனைபிறஙகும்படி அடித்த கூடாரஙகள்போல விளஙகவும, ஒவ்வோரிடங்களில செம்மைநிறமுள்ள இளந்தளிர்கள செமபட்டு மேற்கட்டுகளபோல மினனித் தோன்றவும், நன்றாக விகசித்த மலர்களின்மேல் உட்கார்ந்திருக்கும் வண்டுகள் அகிற புகைபோலப பிரகாசிககவும், காமபற்று வீழ்நது தரையிலே வரிசைவரிசையாயப படிந்திருககும பூககள முத்துக்கோலஙகள்போல மேன்மை பெற்றிருககவும, நன்றாயப பழுத்த பழஙகளை வயிறாரத்தின்று கொழுத்து அணிஅணியாய் உட்கார்ந்திருக்கும கிளிகள பசசைககல தோரணமபோலப பொலியவும், பூந்தோட்டஙகளெலலாம வெகுவிநோதமாய அலங்கரித்த வசந்தராஜனுடைய சிஙகாரககொலுமண்டபஙகள போன்றிருக்கும. இபபடி அனைவர்க்கும் அளவற்ற ஆனந்தமுண்டாககுகின்ற பலவகைப புதுமைகளால அலங்கரிக்கபபட்ட வசந்தகாலத்தில, தாமரைத்தடாகஙகளிலுள்ள மதுரமான நீர்களின் குளிர்ச்சியோடு பலவிதமான பூககளின் பரிமளஙகளையும் வாரிககொண்டு வீசுகிற மந்தமாருதமானது, எலலாபபொருளகளுககும மிகுதியாய் மெருகுகொடுத்து அவற்றைப பின்னும் பதினமடஙகு அதிகமாகப

பிரகாசிக்கச் செய்வதுபோலத் தோற்றும். இவ்வகைப்பட்ட உல்லாசகுணங்கள் அனைத்திற்கும் இருப்பிடமான வசந்தருதுவின் நல்வரவு எவர்க்குத்தான் விரும்பத்தககதன்று.

---

## கடற்காட்சியின் படிப்பனை.

---

கடற்காட்சி யாவருடைய கவனத்தையும் கவரத்தக்கது. அது சிறந்த விநோதத்தைவிளைக்கும். இச்சாகரம், தனக்குளடங்கிய அளவில்லாத பொருள்களைகொண்டு நமக்குப் பெரும்பயனை அளிப்பதுமன்றிக் கவிவாணர்கள் கூறும் வர்ணனைகளுக்கு இலக்காகவுமிருக்கின்றது. இதோபார், இதன் தோற்றம் கறுத்திருப்பினும் நீர் வெளுத்துள்ளது. கரி கரிதெனினும் குணம் கௌரவமுள்ளது. இந்நீர் வெண்மையும் சுத்தமும் உடையதாயினும் உண்ண உதவாததுபோல, டம்பம் பெருமை முதலிய துர்க்குணமுடையவன் உபயோகியாகான். அறியாமையால் ஆடி ஓடும் சிறுவர்களைப்போலச சிறுமீன்கள் துள்ளித் திரிகின்றன. இதனைக் கண்ட கொக்கு உறங்குவதுபோல அப்படகில் வாளா நிற்கின்றது. "அடக்கமுடையார் அறிவிலரென்றெண்ணிக் கடக்கக் கருதவும் வேண்டா" என்னும் பொருளை இதனால் தெரிகிறோமல்லவோ? கல்லாத கயவர்கள் வெல்லக்கருதி எதிர்ப்பினும், கற்றுவல்ல சான்றோர சற்றும் பேசார். அந் நீர்க்காகம் இரையளிக்கத் தொடர்ந்து தொடர்ந்து சென்றும் அதனை ஏற்காமல் எட்ட ஓடும் துஷ்டப்பார்ப்பு, வலியக் கல்விப் பொருளைப் புகட்ட முயலும் உபாத்தியாயர்களை மதியாது விளையாட்டிலே மனம்வைத்துழலும் மாணுக்கரை ஒத்திருக்கின்றது. அவர்கள் இரைவதுபோல ஒலிக்கும் இவ்வலைகள் அடங்கா மனைவியை அடக்க முயலும் ஆடவர்போலக் கரையை அடித்து மோதுகின்றன. வீணாரவாரம் விளைப்பவர்போன்ற இவ்வொலி, அறஞ்செய்தேன் என ஆடம்பரம் செய்வார் போல என்றும் அடங்காது. இது அடங்கினபின் நீராடுவோமென்பவர்போலச் சிலர் நற்கருமங்களைப் பிற்காலம் செய்வோமென எண்ணி நாள் கழிக்கின்றனர். அந்தோ!

சென்ற நாட்களை எண்ணித் தீர்க்கலாம், இருக்கும் நாட்கள் இவ்வளவினவென எண்ணுதல் கூடாது. வாழ்நாட்களை வீழ்நாட்களாக்கி வறிதே மாண்டவர்கள் மாள்கின்றவர்களை வரையறுக்கக் கூடுமோ? அறநெறி நில்லார்க்கு அறிவு புகட்டுவது அடாது. புகட்டினும் அது மலையில் அறைந்த மர ஆணி கூர்மை மழுங்கி அறைந்தவன் கைக்கு அரியதுன்பம் விளைப்பது போலாம். எவரெவர்கள் சுபாவம் எப்படியோ அப்படியே இயலும். எட்டிப் பழத்தை இனிப்பாக்கலாமா? வாழை மரம் தீபத்தைக் கிரகிக்காதது போலச் சில மந்த மதிகட்கு எந்தவிதமாகப் போதிக்கினும் தம் சொந்தப் புத்தி மாறாது. அவருட் சிலரறிவில் போதிக்கப்பட்டவைகள் அகக்கணம் நிற்கினும் புராணவைராக்கியம்போல நீடித்தது நில்லா. கரும்பொன் கசடறத்துலக்கும் போது மாத்திரமல்லவோ ஒளிவிடும். கண்ட மாத்திரையில் கற்பூரம் தீபவொளியைக் கவர்வதுபோல, மதியூகிகட்குப் போதிக்க வாய்திறக்கு முன் வஸ்து உணர்ச்சி வாய்க்கும். வெண்பொன் செம்பொன்கள் சிறிது துலக்கினும் மிகுச ஒளிதரும். எத்தகைய விவேகிகளாயினும் விதயாபோதனை அவர்கட்கு நித்தியமும் வேண்டும். விலை வரம்பில்லாத மாணிக்கமாயினும் மாசு படியும். அதுபோல அஞ்ஞான இருள் யாவரையும் விடாது. சுடர் விளக்காயினும் தூண்டுகோலொன்று வேண்டுமல்லவோ? சிலர் ஓதாதுணர்ந்தேமென்று உளறுவது உண்மையாமா? பகலும் இரவும் உண்ணுதவன் பருத்திருப்பானோ? நாம குழவிப்பருவத்தில் மழலைசசொற பயின்றது தாய்தந்தைகளிடத்தில அல்லவோ? விவேகபோதினிகளாகிய சாஸ்திர விளக்கு நமது அறிவை விளக்கிக் காட்டும விமலமான கருவி. இதனை இளமையிலே கைபழகி விளையாட வேண்டும்.

# பாரதம்—ஆரணியபருவம்.

---

## துருவாசமுனிச்சருக்கம்.

ஒரு நாள் சாயுங்காலே துருவாச மாமுனிவர் அனேக அருந் தவரோடு வந்து, யுதிட்டிரரைப்பார்த்து, "இன்று பகவதாராதனத் துக்கு நின்னிடம் வந்தேன்" எனத், தர்மபுத்திரர் வணங்கி, நதி சென்று கடன்கழித்து எழுந்தருள்க என்று விடுத்துப், பன்னசாலை யுட் புகுந்து பாஞ்சாலியை நோக்கினர். அவ்வுத்தமி வளேக்கை யை நெரித்து "அக்ஷய பாத்திரத்தைக் கழுவிக் கவிழ்த்துவிட டேன். இனி அது நாளேயன்றி இன்று சொன்றி கொடாதே" என்று ஏங்கினள். தர்மபுத்திரர் தம்பியரை நோக்கி "அதிதியா ராதனம் யாங்ஙனம் செய்யலாம்? செய்யாவிடின் நமது நிலைமை யை நோக்காது முனிவர் சபித்து விடுவாரே" என்று வருத்தமுற, மகா பாகவதோத்தமனாகிய சகாதேவன் "அண்ணா! நமது ஆபத்து பந்து இருக்கும்போது நாம் கலங்குவானேன். எம்பெருமானைத் தியானிப்போம்" என்றான். எல்லாரும் மகிழ்ந்து உலகளந்த திரு வடியைத் தியானித்தலும, ஸ்ரீகிருஷ்ண பரமாத்துமன் எழுந்தரு ளிப் பாஞ்சாலியைப் பார்த்து அலம்பிய பாத்திரத்தில் ஒரு அவிழ் கூட இலதோவெனத், திரௌபதி "அண்ணா! சுத்திசெய்த பாத்தி ரத்தில் அவிழிருக்குமோ?" என்று சொல்லி, "ஆயினும் நின்னருள் எப்படியோ" என்று பாத்திரத்தை எடுத்துப்பார்த்து, அதில ஒரு அவிழ் இருக்கக கண்டு எடுத்துவந்து சமர்ப்பித்தாள். பரமன் அதை நான்மறை கூறியருளிய வாயில வைத்து அண்டாண்டங் களுநையும் திருவயிற்றுட் கொளளுதலும், துருவாசமாமுனிவர மாத்திரமோ எண்பத்துநான்கு லக்ஷம் பிறவிப் பேதங்களாகிய சேதனரெல்லாம் அமுதுண்டாற்போலக் களித்தனர். துருவாச மாமுனிவர் தேக்கெறிந்து வந்து, யுதிட்டிரரைப் பார்த்து, "உண் டோம்! உண்டோம்! ஓதககடலமுதை!" என்று கூறி வாழ்த்தி, "வேந்தே! துரியோதனனிடம் போயினேன். அவன் எனனைச சின் னாள் ஆராதித்துச சாயுங்காலத்தில் உன்னிடம் பிக்ஷைக்குப்போக வேண்டுமென்று வரங்கேட்டான். அவ்வரங் கொடுத்து வந் தேன். சர்வாந்தர்யாமியாகிய பகவான் உமக்குத் துணையாய்

நிற்க, யாா எசசூழ்ச்சி சூழினும் அது உம்மையணுகாது. சாயுங் காலததில பிசைக்ஷக்கு என்னை யேவி உஙகளைச சபிக்கக் கருதிய துரியோதனன் இன்னும் இரண்டு வருடத்தில் மாய்க. நீ அர சாள்க" என்று சாபமொழியும் ஆசிமொழியும் கூறிப்போனார். முகுந்த பிரான் விடை பெறறுத் துவாரகை சார, ஐவரும் தமது ஆயுளெலலாம கண்ணன் கடாக்ஷத்தை நினைந்து அவன் குணக கடலில ஆழந்திருந்தனா.

## பழம் பொருந்து சருக்கம்.

ஒரு நாள சாயுஙகாலத்தில பாாததனும் பாஞசாலியும வனத் தூடு சென்று உலாவும்போது, நெலலி மரததில ஒரு கனி பழுத் திருக்ககண்டு, திரௌபதி விரும்பக், கிரீடி அதனைப பறித்துக்கொ டுத்தான். அவ்வனததிலிருநத முனிவர்கள் பாாத்தனை நோககி, "அரசே! என்செய்தனை? மித்திர மகாமுனிவர் இவ்வனத்தில் மாத வம செயதுகொண் டிருந்தமையால, இதறகு மித்திரமகாமுனிவன மென்று பெயர். அப்பெரியோா தினம் ஒரு காலம் இஙகு வந்து இம்மரததின் கீழிருந்து, சிறிதுநேரம யோகஞ்செயது, எஙகளுக்குச சாஸ்திரபாடம சொல்லிப போவாா. அவாக்கு ஆகாரமாக இம மரம இரண்டுவருடம் பூத்து, இரண்டுவருடம பிஞசாகி, இரண் டாண்டு காயாகி, இரண்டாணடு செஙகாயாகி, இரண்டு வருடம் கனியாகித், தானே அவா கையில வந்து இறஙகும. அம்மாமுனி வா அதனைக் கைலாசபதிக்கு நிவேதனமும அதிதியாராதனமும் செயது, தாமும சுவீகரிதது, மறு பன்னிரண்டாண்டு வரையிலும் காத்திருபபாா. துவாதச வருஷம் முடிந்து அவருண்ணும் காலம் நாளையாதலால, அவா நினைக் குலததோடும் சபிப்பார்" என்றார் கள். அருச்சுனன் அஞசி வநது தர்மபுததிரரை வணங்கித் தெரி விப்ப, அவர் "இவ்விபததுககு என்செயதும்? பன்னிரண்டுவருடத் துககுஒரு தரம உண்ணும் முனிவரது ஆகாரத்தைக் கெடுத்துக குலத்தையு முடிததான் அருச்சுனன்" என்று வருந்தினர். அக்காலே மகா பாகவத சிகாமணியாகிய சகாதேவன நகைதது "ஆதிமூலமே என்ற யானையைக் காத்தருளிய நமது பந்துவாகிய ஆபத்து பந்து நம்மைக் காக்க விரதஙகொண்டு நிற்க இவ்விபத்துச்கு அஞ்சுவா னேன்? அவன் திருவடியைத் தியானிபபோம்" என எல்லாரும

தியாளித்தனா. ஸ்ரீ கண்ணபிரான ஆங்கு எழுந்தருளலும், ஐவரும் எதிர்சென்று, திருவடிதாழ்ந்து, விண்ணபபம செய்து, அபயம் கூறி, இதுபோது காத்தியென்று அழுதாா. கபடநாடக சூத்திர தாரி ஐயோ! இதற்கு நான் என்செய்வேனென்று அபயங்கூறி அழுத பாண்டவரைத் தழுவிககொண்டு தானும் அழத்தொடங்கி ஞன். தாமபுததிரா் கரங்குவித்து "தேவரீா் திருவிளையாட் டாடு தலுக்கு இது சமயமன்று. முனிவா் நாளை என்ன சாபம் இடுவ ரோவென்று வருந்தும எங்களை நீரும் அழுது வருத்தவேண்டாம்" என்று வேண்டித் "துதித்துக காத்தருளக" என்றாா். மாயோன் பாண்டவரையும பாஞ்சாலியையும் அழைத்துச சென்று, அந் நெல்லி மரத்தின்கீழ் நின்று, சககரமேந்தும கரத்தில் கனியை யெடுத்துப் பாண்டவா சொலலும் மனோ நிசசயவாக்கால் இப பழம் மரத்தில பொருந்துக என்று அறமகனுா் கையில் கொடுத தாா். அவா் அதை வாங்கி, "அசசுதா! தருமமும் சத்தியமும கீா்த்தியும் மேகவண்ணனாகிய கண்ணனும எனது மனத்தை விட்டு அகலாமலிருக்கவும, பாபமும கோபமும் பொய்யும நசிக்கவும், விரும்புவதே எனது எண்ணம" என்றாா. அபபோது நெலலிக் கனி இரண்டுமுழம் உயா்ந்து நின்றது. வாயு புததிரன், "அமலா! பிறா் மனையைப பெறறதாயெனவும, பிறா பொருளை எட்டிப்பழம போலவும், புறங்கூறுதல சாதலையொககுமெனவும், பிறா துயரம் என துயரமெனவும், உறுதி கொள்வதே எனது கருத்து" என்றுன். கனி மேலுமிரண்டுமுழம் உயர, அருசசுனன, "முகுந்தா! உயி ரையிழந்தாயினும் ஒழுககததையும் சத்தியத்தையும் புகழையும் பெறவேண்டும. ததததுவஙகளை உணா்ந்து மெய்ஞ்ஞானமடைய வேண்டும் அலலது யுத்தவீரனாகவேண்டும் என்பதும, என்னை யாயினும் எனதுவிலலையாயினும என முனையாயினும் பழித்தவரை ஒழிககவேண்டுமென்பதும், எனது கருத்து" எனலும, கனி பின் னும் இரண்டுமுழம உயாந்தது. நகுலன, "கேசவா! பிறபபாலும செல்வத்தாலும தக்கோராயினும, கலவியும் ஞானமும் இல்லா தாரை மணமற்ற முருக்கம் பூவைபபோல மதிப்பேன்" என்றுன். பழம் இன்னும் இரண்டுமுழம் உயரச், சகாதேவன், "அருமறைப் பொருளே! எனக்குச சத்தியமே தாய். ஞானமே தந்தை. தரு

மமே சகோதரன். கிருபையே தோழன். சாந்தமே தருமபத்தினி. பெருமையே புத்திரன்" எனக் கனி அப்பாலும் இரண்டு முழம் உயர்ந்தது. அருந்ததியையொத்த பாஞ்சாலியும் தனதுள்ளக் கருத்தை யொளியாதுரைக்கக் கனி முன்னிருந்த கிளையில் ஒட்டிக்கொண்டது. அப்போது எம்பெருமான் ஐவரை நோக்கி, "உண்மையுரைக்கின் உண்மைபலிக்கும். நன்மைகூறின் நன்மைவிளையும். உற்றதுரைப்பின் அற்றதுபொருந்தும்" என்றருளித் துவாரகாபுரி சென்றருளினார்.

## நச்சுப்பொய்கை சருக்கம்.

பாண்டவர் அவ்வனம் விட்டு விண்டுசித்த மாமுனிவரது வனம் வந்து வதிந்தார். துரியோதனன் அவையேறிப் "பஞ்சவர்கள் பன்னிரண்டாம் வருடம் வனவாசம் நடக்கின்றது. இன்னும் ஒரு வருடம் அஞ்ஞாதவாசம் செய்து வந்துவிடுவார். அவர் வருமுன்னரே அவரைக்கொன்றுவிட வேண்டும்" என்று துணிந்து, தூளமாமுனியையேவிக் காளமாமுனியையழைத்துப் "பாண்டவரைக் கொல்லுதி" என்று வேண்ட, அம்முனி விதிவயத்தனாகி உடன்பட்டு, மகத்துக்கு வேண்டிய எல்லாம்கொண்டு மயானம் சேர்ந்து, மாரண ஓமம் செய்து, ஆடு மாடு பன்றியென்னும் இவற்றைப் பலிகொடுத்து வேள்வி முடித்தலும், அக்கினி குண்டத்தினின்று ஒரு பூதம் தோன்றிற்று.

ஸ்ரீகண்ணபிரான், பாண்டவரைக் கொல்லக் காளமாமுனி யாகம் செய்ததை அறிந்து, யமனை அழைத்து ஏவலும், அவன் ஒரு சிறுவன்போலப் பஞ்சவரிடம் வந்து, யான் பார்ப்பனச்சிறுவன்; எனது பூணூலில் கட்டிக்கொள்ள ஒரு வேடனிடம் ஒரு மான் தோல் வாங்கிச் செல்லும்போது, ஒரு மான் வந்து அதனைப் பிடுங்கிப்போயிற்று; என்செய்வேன்" என்று அழுதான். ஐவரும் அவனை அஞ்சாதி என்று, மான் போன வழியைத் தொடர்ந்து, கால் தளர்ந்து, ஒரு சந்தனமரத்தடியில் தங்கினார். தர்மபுத்திரர் சகாதேவனைப் பார்த்துச் "சிறிது உண்ணீர் கொணாதி" என அவன் சென்று ஒரு பொய்கையிலிறங்கி நீரள்ளி உண்ணலும், கண்சுழன்று கரையேறி உயிர் துறந்தான். பின்னர் யுதிட்டிரர்

ஏவலால, நகுலன் வந்து, தம்பி களையால படுத்திருக்கின்றுன் என்று நீா பருகி, அவனும் மாயந்தான். பின்பு அருசசுனன வந்து, அங்ஙனமே நினைந்து, புனல்பருகி மாண்டான். தம்பியா மூவரும் மீளாமைகணடு, வீமனவந்து, மூவரும இறந்தமைகண்டு துக்கித்து, யானும் இறப்பேனென்று புனலபருகி மாண்டான். அற மகனுர், சோர்வாலும் தம்பியா மீளாத சோகததாலும, உயிர்நீத் தாாபோல மெயசோாந்து, சந்தனமரததடியிற் கிடந்தாா.

பாண்டவா செய்கை இஙஙனமாகக் காளமாமுனி, பூதத்தை நோக்கி "வனவாசம செயயும பாண்டவனாக கொல்லுதி" என, அப்பூதம "பாண்டவனாக காணுவிடின் மீண்டுவந்து நின்னைக் கொலவேன" எனறு சொலலிபபோந்து, ஐவனாயுஙகண்டு துனுசி ஞொன்று நினைந்துபோய், "உயிாநீததுககிடக்கும ஐவாபாலோ என்னை ஏவினை!" என்று முனிநது, காளமாமுனியைச சவட்டி, ஓமகுண்டததிலிறஙகிப போயிறறு.

யுதிட்டிரா சிறிது சோகம நீஙகி எழுந்து, பொயகைக் கரை வந்து, இறநத நாலவரையும கண்டு, மனம நொநது, யாமும இந்நீருண்டு மாயவோமெனறு புனலைக கையிலேறறலும், "தாம ராசனே இந்நீாைப பருகேல" எனறு அசாரிரி வாககுப பிறந்தது. தாம புததிரா நான்கு திசையும நோக்கி, ஒருவரையுங் காணுமல திகைத்து, "நான் சாவதறகாகவே இததீாததத்தை உண்ணுகின் றேன" என்றுா. அசரீரி "எனது வினுவிறகு விடைதந்து அருந் துதி" யென்று கடாவிறறு. அசரீரி "சாஸ்திரஙகளில சிறந்தது யாது" தர்மபுத்திரர் "வேதம." அறஙகளிற சிறநதது யாது? இல லறம். புஷ்பஙகளிற சிறநதது யாது? ஜாதி. முததிபெறுமமுனிவா தொழும கடவுள யாா? முகுந்தன. கிருகததுககுப பாக்கியம் யாது? குழந்தை. செவிககு இனபம் யாது? மழலைசசொல. நிலை பெறறு நிறபது யாது? சதகீாத்தி. கறகவேண்டியது யாது? கலவி. அறபமென்பது யாது? இரததல. உறுதிகொளவது யாது? சத்தி யம். நீககுவது யாது? பொய. விரதஙகளிற் சிறந்தது யாது? ஐம பொறியடக்குதல. நோனபில உயாநதது யாது? கொலலாமை. கடன் என்பது யாது? பிதிரா கடன். கடவாதது என்பது யாது? தாய் தந்தை சொல. இஙஙனம் தாமராஜன் கடர்வியவற்றுக்கெல

லாம் தர்மராசன் விடை கொடுத்தலும், காலன் தனது சொரூபத்துடன் எதிர்தோன்றித், தன்னைத் திருவடிதாழ்ந்த யுதிட்டிரனை மார்பிலணைத்துக், "குழந்தாய்! துஷ்ட சதுஷ்டாள் உம்மைக் கொல்வதற்குக் காளமாமுனியைக்கொண்டு மாரண ஓமம் செய்தார். எம்பெருமான் அதையுணர்ந்து என்னை ஏவலும், யான் பார்ப்பனச் சிறுவன்போல வந்து, உம்மைப் பன்னசாலையினின்றும் அகற்றித் தாபமுண்டாக்கிக், கங்காமிர்தம் போன்ற இப்பொய்கைப் புனலை விஷஜலமாக்கித் தம்பியரை உண்ணச்செய்து வீட்டி, இறந்தவனைப்போலச் சோகத்தால் உன்னைப் புவியிலிட்டுத்தினேன். பூதம்வந்து உன்னையும் தம்பியரையும் பார்த்துப்போய்க் காளமாமுனியைக் கொன்றது. பின்பு யானே உன்னைச் சோகம் தீர்த்து எழுப்பி, இங்கு வரும்படிசெய்து, புனல் பருகும்போது, அசரீரி வாக்குச்சொல்லித் தாம் சந்தேகங்களைக்கேட்டு, உனக்கு எதிர் வந்தேன்," என்று செப்பி, ஒரு மந்திரம் ஓதி, நால்வரையும் எழுப்பி, "மக்காள்! பன்னிரண்டு வருடம் வனவாசம் செய்து விட்டீர். அஞ்ஞாதவாசம் ஒருநகரத்திலுறைந்து செய்மின். அப்போது உம்மை ஒருவரும் அறியாவண்ணம் ஒரு மந்திரம் உபதேசிக்கின்றேன்" என்று உபதேசித்துப் போயினன். பஞ்சவர், அத்தடாகத்தில் தீர்த்தமாடி, நீருண்டு, விடாய் தவிர்த்துத், தமதாசசிரமம் வந்து, தவுமியாசாரியரைத் தாழ்ந்து, பாஞ்சாலி பங்கய வதனத்தைப் பார்த்து, நிகழ்ந்ததையுரைத்து, அச்சுதன் திருவடியையும் திருவருளையும் நினைந்து, மகிழ்ந்திருந்தனர். வீடுமர் விதுரர் துரோணர் முதலியோர் வந்து நச்சுப்பொய்கை நீருண்டு பிழைத்த ஐவரைக் கண்ணுறக்கண்டு மார்புறத் தழுவி வாழ்த்திச் சென்றனர்.

# விராடபருவம்.

## நாடுகரந்துறை சருக்கம்

பாண்டவர் தம்மைச் சூழ்ந்திருந்த விப்பிரர் பன்னீராயிரவரையும், தாழ்ந்து, அஞ்ஞாதவாசம் செய்ய விடைபெற்று, யாண்டுச் செல்லலாமென்று ஆலோசித்தலும், அருச்சுனன் மச்சதேயத்தைச் சேர்ந்த விராட நகரத்தில் வதியலாமென்றான். தர்மபுத்தி

ரர், "நான் சன்னியாசிவேடம்பூண்டு, எனது பெயர் கஙகாபட்ட னென்றும், இதுகாறும் தர்மபுத்திரரிடம் இருந்து அவர் அஞ்ஞாத வாசம் செய்யப்போனமையால் நின்னிடம் வந்தேனென்றும், அற நூல் பொருணூல் மெய்நூல் சோதிடம் சூது என்னுமிவற் றில வல்லேனென்றும் கூறி, அவற்றால் அவனைக்களிக்கச்செய்து, நன்கு பூசிக்கப்படுவேன்" என, வீமன் "அடியேன் பெயர் வல்ல னென்றும், தாமராசனுககு மடையடுவோர்களுக்குத் தலைவனென் றும் செப்பி, விராடன் உவந்து உண்ணுமாறு சோறட்டு, யானும் வயிறார உண்பேன்" என்றான். தாமபுத்திரர் வீமா! சர்ப்பங்க ளில் வாசுகி போலவும், காந்தியுடையோரில் அக்கினி போல வும், நதிகளில கங்கையெனவும், கடல்களில பாற்கடலெனவும், அமரரில் இந்திரன் போலவும், அசுரரில பலிசசக்கரவாத்தி யெனவும், திக்கயத்தில சுப்பிரதீகம் போலவும், அசுவங்களில் உச்சைசிரவம் போலவும், இயக்கருள் குபேரன் போலவும, மிருகங்களுள் சிங்கம் போலவும், இராககதருள் இராவணன் என வும், மானுடருள் பிராமணர்போலவும், கொடுப்போருள் மேகம் போலவும், ஆயுதஙகளில வசசிராயுதம்போலவும், எருதுகளுள் இடபம் எனவும், யானைகளுள் ஐராவதம்போலவும், நேசருள புத திரன்போலவும, அன்பருள் மனைவிபோலவும், மலைகளுள் மேரு போலவும், கோள்களுள் சந்திரன்போலவும், தடாகத்துள் மான தம்போலவும், தேவருள் ஸ்ரீமந்நாராயணன்போலவும், வில்லாளி களுள் சிறந்த அருசசுனன் யாங்ஙனம் சீவிப்பான்; அவன் எவ் விதம் உருமாறினும் மகாபுருஷனென்று முழந்தாள்வரையிலும் வீழ்ந்த அவன் கரங்களே காட்டிவிடும என்றார். பார்த்தன "அடி யேன் தேவலோகம் சென்றபோது ஊர்வசியிட்ட சாபத்தை இப் போதுகொண்டு அலியாகி, 'நான் பாஞ்சாலிக்கு ஆடல்பாடல் கற் பித்துக்கொண்டிருந்தேன் எனது பெயர் பிருகந்நளை' என்று கூறி அந்தப்புர ஸ்திரீகளுககுக் கானம் கற்பித்து விராடன் உவக்கு மாறு செய்கிறேன்" என, நகுலன் "அடியேன் பெயர் தாமகிரந் தியென்றும், பாண்டவரது குதிரைச்சாலைக்குத் தலைவனென்றும் நவின்று, குதிரைகளைத் தேரில பூட்டவும் ஏறவும் பழக்கி, வினோத மாய் நடாத்தி, விராடன் களிக்கச்செய்வேன்" எனச, சகாதேவன்

"அடியேன்பெயர் தந்திரபாலனென்றும், பாண்டவரது பசுக்களைக் காக்கும் கோபாலர்களுக்குத் தலைவனென்றும் நுவன்று, கறவாத பசுக்களைக் கறந்தும் மலட்டாவுக்குக் கருவுண்டாக்கியும் அரசனுக்கு களிப்புண்டாக்கி உயிர்வாழ்வேன்" எனப், பாஞ்சாலி "எனது பெயர் சைரந்திரியென்றும், நான் திரௌபதிக்கு அலங்காரம் செய்துகொண்டிருந்து அவள் பர்த்தாவோடு அஞ்ஞாதவாசம் செய்யப்போனமையால் நின்னிடம் வந்தேனென்றும் கிளத்தி, இராசபத்தினியாகிய சுதேஷ்ணாதேவிக்குச் சாந்தரைத்தல பூமுடித்தல் திலகம்தீட்டல் ஆடையுடுத்தல என்னும் அலங்காரங்களைசசெய்து சீவிப்பேன்" என்றாள்.

தர்மபுத்திரர் இவற்றையெல்லாம் கேட்டுக், காலத்தைநோக்கி அனுமதித்துத், தவுமியாசிரியரை வணங்கலும், அவர் அறமகனைப் பார்த்து, "அரசரையெல்லாம் ஆண்ட நீர் விதிவசத்தால் உமக்குத் தாழ்ந்த அரசனுக்கு ஆளாகின்றீர். மானத்தையும் நாணத்தையும் விட்டு ஒருவருட காலத்தைக் கழிமின். நீர் எல்லாம் அறிந்தீராயினும் சிறிது சொலலுகின்றேன். அரசனிடத்தில் சேவகம் செய்வது மிக அரிது. வேந்தன் தனது இஷ்டப்படி நடவாதவரைத் தண்டிக்கவே தலைப்படுவான். இழிகுலததவனை அரசன் நன்குமதிக்கின் அவனை மதித்தே நடக்கவேண்டும். அரசன் இழிந்தவனைத் தனது ஆசனத்தில வைத்துக்கொண்டிருப்பினும், சபையில் உன்னத ஆசனங்கள் ஒழிந்திருப்பினும, எபபோதும் தனக்குரிய ஆசனத்திலே இருத்தலவேண்டும். அரசன தன்னை நன்குமதித்து நடத்துங் காலத்தும் தான் தன்னை மதியாமலே நடககவேண்டும். வேந்தன் முனிந்தகாலை முனியாமலே தொழில் செய்யவேண்டும். அரசன் வினையில ஏவுங்கால் பசி, தாகம, நித்திரை, சோர்வு, வெயில், காற்று, பனி, கிருககிருத்தியம் என்னும் இவறறை நோக்காமல் வினைமேலே செல்லவேண்டும். இராசரகசியங்களை வெளியிடலாகாது. அவன் ஊரும் வாகனங்களை ஊரலாகாது. அவனது பகைவரோடு உறவாடலாகாது. இராசதுரோகம் செய்யலாகாது. வேந்தன் வலியனை வலியில்லான் எனினும், வலியிலலானை வலியன் எனினும், அப்போது மறுக்கலாகாது. அவனோடு வாதாடலாகாது. அறம்நோக்கிநீதியையும உண்மையையும் தெரிவிததல்வேண்டும்.

இராசஸ்திரீகளை நேசிக்கலாகாது. அரசன் விழையும் பொருளை விரும்பலாகாது. வேத்தவையில் ஓங்கிப்பேசவும் பிறரோடு பேசவும் சோம்பல் முறிக்கவும் கொட்டாவி விடவும் கூடாது. நீராடித் தூயனாய் ஒளித்த ஆடைபுனைந்து அலங்கிருதனாய் வேத்தவையேறவேண்டும். தர்மபுத்திரரே கேளும். சர்வேசனே உலகபாலர் உருவாயினமையால், அவைசெல்லும்போது பயபக்தி வணக்கம் வேண்டும். அதிகம்விரித்துச்சொல்வதால் என்னை ? இராசசேவை செய்வது கத்திமுனையை நாவால் நக்குவதுபோலும். மனுகுலத்தில் தோன்றிய விராடமகாராசன் அறமும் பொருளும் உடையன். அவனிடத்தில் சேவிப்பதால் குற்றமில்லை. அஞ்ஞாதவாசம் செய்து நாடுபெற்று அரசாளுதிர்'' என்று ஆசிகூறி அவர் நன்மையின்பொருட்டு ஓமம் செய்தார். பஞ்சவா வணங்கி விடைபெற்றுப் பலவனங்களையும் நதிகளையும் மலைகளையும் நாடுநகரங்களையும் கடந்து, விராடநகரத்துக்கு அணித்து வந்து, ஆயுதங்களையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துக் கட்டி ஒருமயானத்தில் ஒரு வன்னி மரத்தில் ஒருவரும் அறியாமல் வைத்துக், கங்கைமாநதி வந்து நீராடினர். தர்மபுத்திரர் இந்திரதிசையை நோக்கி நின்று, தமது பிதாவாகிய தர்மதேவதையைத் துதித்து, நாங்கள் அஞ்ஞாதவாசம் செய்வதற்கு அனுகுணமான ரூபந் தருகவெனப் பிரார்த்தித்தலும், தர்மராசன் பொருக்கெனவந்து திரிதண்டகாஷாய மண்டலுகளை யுதிட்டிரருக்குக் கொடுத்து மற்றவர்க்கும் ஒத்த உருக்கொடுத்தான்.

தர்மபுத்திரர் தம்பியரைப்பார்த்து "நாம் தனித்தனியே செல்லவேண்டும். யான் முன்னடக்கிறேன்'' என்றோதிசென்று விராடனைக்கண்டு முன் ஓதியவண்ணம் ஓதி, அவனால் நன்கு பூசிக்கப்பட்டார். பின்னர் நால்வரும் வெவ்வேறு மார்க்கமாய், வந்து விராடனைக்கண்டு, தாம் முன்கூறியவாறு கூறித் தொழில் பூண்டார். பாஞ்சாலி விராடன் தேவியைக் கண்டு முன் நவின்றவாறு நவில, அச் சுதேட்சணை "நீ மலாமாதினும் அழகு மிக்காளாயிருத்தலால் எனது கணவர் நின்னைக்கண்டு மோகிப்பார். அதனால் யாவர்க்கும் கேடுண்டாகுமென்று என் தோழியர் சொல்லுகின்றனர். நீ வேறு ஏங்காகிலும் போதி'' என்றாள். சைரந்திரி, "அம்மே! திரௌபதி

யைவிட்டு நின்னை நாடிவந்தேன். யான் யாரிடம் செல்வேன்? கந்தர்வர் ஐவர் எனது கணவர். இந்திராதிதேவரிலும் வலிமிக்கவர். அவரையஞ்சி என்னை ஒருவரும் இச்சியார். இச்சித்தவரை அவர் கொன்றுவிடுவார். தர்மாத்துமாவாகிய நினது கணவர்க்கு இதனை மொழியின் அவர் என்னை விரும்பார்" எனச் சுதேஷ்ணு தேவி உடன்பட்டுப் பாஞ்சாலியை ஆதரித்தாள்.

---

## நியாயங்கள்.

---

சிவகுப்தர்.—வாரும்! அரிதாசரே! மழையிலடிபட்டீரோ? நீர் வரும்போதெல்லாம் மழையைக்கொண்டுவருகின்றீரே! நீர் கலைக்கோட்டுமாமுனியோ?

அரிதாசர்.—(உடைதிருத்திக்கொண்டு) என்ன கேலிசெய்கிறீர். மழையைக்கொண்டுவர என்னாலாகுமா? நான்வரும்போதெல்லாம் மழை பெய்வது காகதாளீய நியாயம்.

சிவ.—இதென்ன புதிர்போடுகின்றீர்! நியாயமாவதென்ன? காகதாளீயமென்றாலென்ன?

அரி.—நியாயமென்பதறியீரோ? நியாயமாவது ஜனங்களுக்குள் விஷயங்களைத் தெளிவாய் விளக்குவதற்காகச் சங்கேதமாக ஏற்படுத்தப்பட்ட ஒருமுதுமொழி. காகதாளீயமாவது காக்கை வந்திறங்கவும் பனம்பழம் தற்செயலாய விழுந்தால் காக்கையால் பழம் விழுந்ததென்று சொல்வதுதான்.

சிவ.—இதென்ன? காக்கைவரவாவது பனம்பழம விழவாவது?

அரி.—நான் வரவாவது மழைபெய்யவாவது? இது இருக்கட்டும். பக்கத்திலென்ன பேரிரைச்சல்? மழைமுழக்கத்தையும் அடக்கிவிட்டதே. சந்தையா? அல்லது மாட்டு மந்தையா?

சிவ.—இதுவா மந்தமதிமுதலியார் பள்ளிக்கூடந்தான். இவ்விடத்தில் இரைச்சலுக்குக் குறைச்சலில்லை.

அரி.—கல்விமலிந்த இந்தககாலத்திலும் இந்த மந்த மதியைவிட வேறு கல்வி சிறந்த மதியுள்ள ஒரு உபாததியாயா இந்த ஊருககுக் கிடைக்கவில்லையா ?

சிவ.—இலட்சம்பேர் ! ஆனால் நெடுநாளாயுள்ளவராதலால் இவரைத் தள்ளுகிறார்களில்லை. முன்னோர் போனவழி பின்னோரும் போகிறாாகள்.

அரி.—இது வென்ன " அந்தபரம்பரை" ?

சிவ.—அந்தபரம்பரையென்றாலென்ன ?

அரி.—காரியகாரணங்களுணராது ஒருகுருடன் போனவழியே மற்றைக்குருடரும் ஒருவரையொருவா பறறிசசெலவது தான். குறும்பாடடுச சுவபாவம் தெரியாதா ? ஒருசெம்மறியாடுபோனவழி பிற ஆடுகளும போவதைப்பார்த்திருக்கிறோமே? அதுபோகடடும். உமமுடைய சின்னப் பையன் எங்கே வாசிக்கிறான் ?

சிவ.—அடுத்த தெருவிலிருககிற இலகுபுத்தி சாஸ்திரியாருடைய பள்ளிக்கூடத்தில் வாசித்துக்கொண்டிருக்கிறான்.

அரி.—அவர் இவரிலும் சமாத்தரோ ?

சிவ.—சமர்த்தவென்ன ? ஊமையனுக்கு உளறுவாயன் சண்டப பிரசண்டன்.

அரி.—ஆனால் அசுமலோட்ட நியாயந்தானா ? (கலலாங்கட்டி மண்ணாங்கட்டி நியாயம்.) மண்ணாங்கட்டியிலுங கல்லாங்கட்டியைச சிலாகிப்பது போன்றுளது. பையன் நல்ல புத்திமானா ?

சிவ.—நான் அநேக பையனகளைப பாாத்திருக்கிறேன். இவன் புத்தி நுட்பம் வேறொருவற்குமில்லை.

அரி.—மெய்தானோ அலலது நிருபநாபித நியாயததினாலோ ?

சிவ.—அந்த நியாயமெப்படி ?

அரி.—ஓர் அரசன் தன்னுடைய நாவிதனிடத்தில், சிறந்த ரூப லாவணியமுள்ள ஒரு பிளளையைக் கொண்டுவரும்படி கட்டளையிட அவன் எஙகுந் தேடியும் ஒருபிள்ளையுந் தன்

மனதுக்குப் பொருந்தாமல் குரூபியாகிய தன்னுடைய புத்திரனையே கொணர்ந்து நிறுத்தினான். இதனை நோக்கிய அரசன் காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சல்லவோ என்றெண்ணிக் குறு நகைக் கொண்டான்.

சிவ.—இதென்ன இப்படிப்பேசுகிறீர்! அவன் கைப்பட எழுதியிருக்கிற நீதிசாரப் புத்தகத்தைப் பாருமே. எழுத்து எவ்வளவு நேர்த்தியாயிருக்கிறது!

அரி.—ஆமாம் பார்த்தேன். பார்த்தேன். குற்றமில்லை.

சிவ.—முழுவதும் பாரும்.

அரி.—இவை யெல்லாம் ஸ்தாலீபுலாக நியாயந்தானே? (பானைச சோறறு நியாயம்.) இரண்டுபக்கம் பார்த்தாற் போதாதா? ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கைதானே பதம்பார்க்கிறது. இந்தப்பையன் முன்னுக்கு வருவான். இவனுக்குப் பரீட்சாகாலம் எப்பொழுது?

சிவ.—வருகிற மாசி மாதத்தில்.

அரி.—அதென்ன மாசி மாதம் பரீட்சை?

சிவ.—ஏதாவது ஒரு மாதத்திற்றானே நடக்கவேண்டியது?

அரி.—இது அசோகவநிகா நியாயத்தின்படிக்கோ?

சிவ.—அதென்ன நியாயமையா?.

அரி.—இராவணன் சீதையை அசோகவனத்தில் வைப்பானேன் என்பார்க்கு எனனகாரணஞ் சொல்லுகிறது? ஏதாவது ஒரு வனத்திற்றானே வைக்கவேண்டும். சம்பகவனத்தில் வைத்தால் சம்பகவனத்தில் ஏன் வைத்தானென்பார்கள். இவனிருக்கட்டும். உம்முடைய மூத்தகுமாரனெங்கே?

சிவ.—அதையேன் கேட்கிறீர்? அவன் மதுரைக்குப்போய் ஒரு வாரமாயிற்று. வீட்டில் அவன் தாயாருக்கு உடம்பு மிகவும் அசவுகரியம். என்னால் அலையமுடியவில்லை.

அரி.—இப்படியிருந்தால் அவன் மதுரைக்குப்போவானேன்.

சிவ.—யஜமானன் சொன்னபடி கேட்கவேண்டியதுதானே? சோறுபோடுகிறவனே இல்லையோ?

அரி.—அப்படியானால் ஸ்வாமிபிருத்திய (யஜமானசேவக) நியாயத் திறலென்றொரு வார்த்தையாய்ச சொல்லுமே. யஜமானன் சொல்லுகிறபடி சேவகன் கேட்கவேண்டியதுதான். கஸ்பா மதுரைக்கா போயிருக்கிறான் ?

சிவ.—ஆமாம். மதுரைக்குத்தான். இல்லை. அதற்குச் சமீபத்தில் முள்ளங்குறிச்சிக்கு.

அரி.—அருந்ததிதரிசன நியாயமாய்ப் பேசுகிறீரோ ? அருந்ததியென்பது கண்ணுக்குப் புலப்படாத ஒரு சிறு நட்சத்திரம். கலியாணகாலத்தில அருந்ததியைக் காட்டுகிறார்களே ; அதெப்படி அறிவீரா ? அருந்ததிக்குச சமீபத்துள்ள ஒரு பெரு நட்சத்திரத்தை அருந்ததி என்று காட்டிப் பின்னா அருந்ததி அதன்று. அதற்குச சமீபத்துள்ள வேறு நட்சத்திரமென்பது.

சிவ.—இச்சங்கதிகளிருக்கட்டும. நீரென்ன உடுத்த வேட்டியுடன் வந்திருக்கிறீரே ? அவசரமாய்த் திரும்பிப்போக வேண்டுமா ? என்ன ?

அரி.—அந்தத் துன்பத்தை ஏன் கேட்கிறீர். வஸ்திரங்கள் வைத்திருந்த மடிப் பையை வந்தவழியில் கள்வன் கைப்பற்றிக் கொண்டான்.

சிவ.—ஆனால் வஸ்திரங்களும போயினவோ ?

அரி.—நன்று ! நன்று ! வஸ்திரமடங்கிய பை போனால் வஸ்திரங்களிருக்குமோ ? தண்டாபூப (கோல் அப்பம்) நியாயமறியீரோ ? ஒரு எலி அப்பங்கட்டிவைத்திருந்த கோலைத்தின்றதென்றால் அப்பத்தையுந்தின்றதா என்பாருளரோ ?

சிவ.—இதோ பள்ளிக்கூடத்திலிருந்து வருகிறானே. இவன்றான் எனது புத்திரன்.

அரி.—ஏனிவன் மிகவும் உடல் மெலிந்திருக்கிறான் ?

சிவ.—படிப்பின் மிகுதியினாலும் வீட்டிலுள்ள பார்வைத் தாழ்ச்சியினாலுந்தான்.

அரி.—"வைத்தியனுக்குக் கொடுக்குங் காசை வாணியனுக்குக் கொடு" என்கிறார்களே ? பங்கப்பிரக்ஷாலன (சேறலம்

புதல்) நியாயந்தெரியாதா? வீணிற்சேற்றிலிறங்கிக் கழுவி அலம்பிக்கொண்டிருப்பதைப் பார்க்கிலும் சேற்றிலிறங்கா திருப்பதே நலமன்றோ? ஒரு கட்டு வைக்கோலைத் தண்ணீரிற்போட்டு ஒன்பதுபேர் கூடி இழுக்கிற நியாயமுமது இவ்வூரில் தகுந்த வைத்தியர்களில்லையோ?

சிவ.—அநேக வைத்தியர்களிருக்கிறார்கள். தவிரவும் இப்போது ஒரு யோகி வந்திருக்கிறார். அவர் வைத்தியத்தில் நிபுணராயிருப்பதுமன்றி அசாதாரணமான அற்புதச் செய்கைகளையுஞ் செய்கிறாராம். இடைவிடாத் தெய்வத்தியானத்தினால, அடிக்கடி தன்னைக் கொட்டிக்கொண்டேயிருக்கிற குளவியின் நினைவினாலேயே ஒரு புழுவுக்கு அக்குளவி ரூபமமைவது போன்று தெய்வத்தன்மையை யடைந்திருக்கிறாராம்.

அரி.—ஆசசரியம்! ஆச்சரியம்! உமக்குப் பிரமரகீட நியாயமெப்படித் தெரியவந்தது? அந்தசடக (குருடன்கைக்குருவி) நியாயத்தினாலோ?

சிவ.—அதெப்படி?

அரி.—ஒரு குருடன் தற்செயலாய்க் கையை நீட்டியவிடத்து அவனுக்கு ஒரு குருவியகப்படுவது ஆசசரியமன்றோ? இந்த நியாத்தை துணாட்சர நியாயமென்றும் கூறுவர். அதாவது ஒரு புழு ஊருங்கால் உண்டாகிய இரேகை ஒருகால் எழுத்தாக அமைவதில்லையா? நலலது. இதென்ன கதம்ப கோரக நியாயமாய் ஜனங்கள் ஏககாலத்தில் திரள் திரளாய்ச செலலுகின்றார்களே?

சிவ.—யோகியிடத்திற்குத்தான் போகிறார்கள். கதம்ப கோரக நியாமென்றீரே அதென்ன?

அரி.—கதம்ப (அடப்ப) மரம் ஒரேகாலத்தில ஒருமிக்க மொட்டுக் கட்டுகிறதென்று கேட்டிலேயோ? அந்த யோகீச்சுரர் எங்குத்தங்கியிருக்கிறார்?

சிவ.—இரண்டு மைலுககப்பால் ஒரு தோப்பிலிறங்கியிருக்கிறார்.

அரி.—அவர் இப்பட்டினத்துள்ளுறத்தானே இருந்தால் ஜனங்

களுக்குச் சுகமாயிற்றே. அவ்வளவு தூரத்திற்போயிருப்பானேன்?

சிவ.—அத்தோப்புக்கப்பாலுள்ள சில பெரிய கிராமவாசிகளின் சவுகரியத்தையும் நோக்கி அங்கு வதிந்துவருகின்றார்.

அரி.—இஃது **தேகளீதீப*** (நடைவிளக்கு) நியாயம். நடையில் (இரேழியில்) தொங்கவிட்ட விளக்கு முன்றிலிலும் உட்புறத்திலும் இருள் விளக்கு மன்றோ?

சிவ.—அவ்யோகீசுவரர் இங்கு வந்திருக்கிறதைக் கேள்வியுற்று ஒருநாளும் வந்திராத என் மாப்பிள்ளை வந்திருக்கிறார். அவரை உத்தேசித்தே விலையுயர்ந்த வேட்டி ஜோடி வாங்கி வைத்திருக்கிறேன். ஆனால் அவருக்கும் நமக்கும் கொஞ்சம் மனஸ்தாபமுண்டு. அவரதைப் பெற்றுக்கொள்ளுவாரோ மாட்டாரோ அறியேன். பெற்றுக்கொண்டால் நலம். இன்றேல் என் மகனுக்குக் கொடுத்துவிடுகிறேன்.

அரி.—நீர் சொல்வது **காகாட்சி** நியாயமாயிருக்கின்றது. காக்கைக்கு ஒரேவிழியாதலால் அதைக்கொண்டு எந்தப்பக்கத்தைப் பார்க்கவேண்டுமோ அந்தப்பக்கத்தில் சாய்த்து நோக்கினால் அவ்விழி அந்தப்பக்கஞ் சென்றுபார்க்கும். ஒருவிழி இரண்டுபக்கங்களில ஏதாவது ஒருபக்கத்தைப் பார்க்க உதவுகிறதுபோல, ஒரேவேட்டி இருவரிலயாருக்காவது உபயோகப்படுகிறது. இது நிற்க, உமது மாப்பிள்ளை எவ்வூரார்?

சிவ.—அவரிருப்பது குடிலபுரி.

அரி.—குடிலபுரியா? அது மிகவுந் துன்மார்க்கர்களுக்கு உறைவிடமாயிற்றே? இவரெவ்வாறவ்வூரில வதிந்து வருகின்றார்!

சிவ.—அதையேன் கேட்கிறீர்? பொழுதுவிடிந்தால் வம்பும் வழக்குந்தான். மிக்கவருத்தத்துடன் சமாளித்துக்கொண்டுவருகின்றார்.

---

* **பிராசாததீப** நியாயம் (மாடியிலிட்ட விளக்கு வீதியிலுமிருளணைக்கும்) தேகளீதீபத்தை ஒருவாறு ஒத்தது. அப்படியே **மத்தியமணி** நியாயமும். நடுநாயகம் ஓர் ஆரத்தின் இருபக்கத்தையும் விளக்கும்.

அரி.—அப்படியானால் விஷக்கிருமி நியாயத்தினால் ஜீவிக்கிறாரென்று ஒருவார்த்தையாய்ச சொலலிவிட்டதொலையுமேன். விஷத்துள்ளும் புழு உயிரோடிருக்கவில்லையா? அப்படியாவது அவ்வூரிலிருப்பது என்ன கருதியோ?

சிவ.—பூர்வீக வீடுவாசல நிலங்களின் ஆசாபாசம் அவரைவிடுகிற தில்லை.

அரி.—லோககூம்பக நியாயத்தினாலா? ஊசியைக் காந்தமிழுப்பது போல் அங்குள்ள தாவரபபொருள்கள் இவரை விடுகிற தில்லைப்போலும்.

சிவ.—நான்பேசிமுடிக்கிறதற்குமுன் நியாயமநியாயமென்று கழுத்தறுக்கிறீரே? அவருடைய கட்டமிம்மட்டா? பிள்ளை போலெடுத்து வளாதத அவர் தம்பியொருவன் ஊரிலுள்ள கயவருடன் கலந்து தறுதலையாய்த் திரிகின்றான். அவனை விலக்கிப்போடுகிறதென்றாலும் வளாததவாஞ்சை மேலிட்டு நிற்கின்றது.

அரி.—தான் வளர்த்தமரம் எட்டிமரமானாலும் வெட்டமனமாமா? இதை விஷவிருட்ச நியாயமென்பேன். ஆனால நீர் நியாய விரோதியாய் என்பேரில கோபித்துக்கொள்ளுகிறீர்.

சிவ.—நானப்படி நியாயவிரோதியல்லன். பேசிமுடிக்குமுன்னே தடுத்துப் பேசத்தொடுத்தீரே.

அரி.—அவரெப்போ வந்தாரையா?

சிவ.—அவர் வந்து நாலைந்து நாளாயிற்று. அவா வந்த விநோதம கேளும். ஏதோ ஒரு அவசரத்தால கால் நடையாய் வர நேரிட்டது. எப்போதும் வண்டியில வருகிறவர் இந்தத் தடவை மூட்டையும தூககிககொண்டு வந்தார். வழியிலுள்ள செட்டிசத்திரவாசலின வழியாய் வந்தால அங்குத் தனக்குத் தெரிந்த பலபேர்கள இருப்பார்களென்று சங்கோசப்பட்டு அசசத்திரவாயில் வழியை நீக்கி அதன் பின்புறப்பாதையாகப் போகவெண்ணி ஏதோ ஒரு சந்திற் புகுந்து சென்றார். அங்கு முள்ளும் கல்லும் மற்றுமுள்ள அசுத்தங்களும் அனுபவித்துச சென்றும் கடைசியில் அச

சந்துவழி அசசத்திரவாயிலிலேயே கொணர்ந்து விட்டது. இதனைக் கண்ணுற்று அவ்விடத்திருந்த பலரும் குலுங்க நகைத்தார்கள்.

அரி.—பேஷ்! பேஷ்! நீர் சொல்லுகிறது கட்டகுடிகா (சுங்கச் சாவடி) நியாயத்தை நினைப்பூட்டுகின்றது. அஃதெங்ஙன மெனின், சுங்கங்கொடாமல் தப்பிக்கொள்ள எண்ணிய ஒருவன் கள்ளவழி புக்குச் சென்றும் கடைசியில் சுங்க வாயிலிலேயே வந்து சேர்ந்தானெனப் பிரமித்தான். கிடக்கட்டும். மாப்பிள்ளையெங்கே?

சிவ.—இதோ உள்ளேயிருக்கிறார். கூப்பிடுகிறேன். "ஓய்! மாப்பிள்ளாய்!"

மாப்பிள்ளை.—இதோ வந்தேன். ஏன்? நாழியாயிற்றே. யோகீசுவரரிடத்துக்குப் போகவேண்டாமா? இந்தக் குன்மத்தால எவ்வளவுகாலம் வருத்தப்படுவேன்?

சிவ.—அது இருக்கட்டும். சத்திரவாயிலில கூடியிருந்தவர்கள் எப்படிச சிரித்தார்கள்?

மாப்.—உங்களுக்கு இதுதானே வேலை? பிஷ்டபேஷண நியாயமாயிருக்கிறதே. அடிக்கடி சொன்னதையே எத்தனை தடவை சொல்லுவீர?

அரி.—மாப்பிள்ளைக்கும் நியாயந்தெரிகின்றதே! பிஷ்டபேஷணமென்றால பிசைந்ததைப பிசைதலல்லவா?

சிவ.—நல்லது, மாப்பிள்ளை, யோகீசுவரரிடத்துக்குப் போகவேண்டியதுதான். ஆனால் அடுத்த தெருவில் ஒருவருக்குக் கட்டாயமாய் இன்றைக்கு ரூபா நூறு கொடுக்கவேண்டியதாயிருக்கிறது. நேரமுமாகவில்லை. போய்க்கொடுத்துவிட்டுவரலாமா?

மாப்.—சந்தேகமென்ன? சூசிகடாக (ஊசி எண்ணெய்க்கொப்பரை) நியாயந் தங்களுக்குத் தெரியாதா? ஒரு கருமான், ஓர் ஊசியையும் எண்ணெய்க் கொப்பரையையும் செய்துமுடிக்க வேண்டியதிருந்தால் இலகுவாய்ச செய்யக்கூடிய ஊசி

யைத்தானே முதலில் செய்வன்? நீர் போய் ரூபாவைக் கொடுத்துவிட்டுச் சீக்கிரம் வாரும்.

சிவ.—பணத்தைக்கொடுத்துவிட்டு இதோ வந்துவிடுகிறேன். என்னுடைய நண்பர் அரிதாசருடன் பேசிக்கொண்டிரும்.

மாப்.—எங்களூரிலுள்ள ஒரு வைத்தியன் தங்காலசாந்தியாய் ஒரு சூரணம் கொடுத்திருக்கிறான். அதைச சாப்பிடுகிறேன். இதென்ன! மருந்து முழுதும் எறும்பாயிருக்கின்றதே! இம்மருந்தில் சருக்கரை சேர்ந்திருக்கிறதுபோலும்.

அரிதாசர்.—வன்னிதூம நியாயந்தான் உமக்குத்தெரிந்திருககுமே?

சிவ.—(திரும்பிவந்து) அதென்ன வன்னிதூம நியாயமென்றீரே?

அரி.—புகையுள்ள இடமெல்லாம் நெருபபுண்மையை யூகிப்பது போல, எறும்பிருத்தலால இவா மருந்தில தித்திப்புச சேர்ந்திருத்தல்வேண்டுமென்று அநுமானஞ் செய்யலாயிற்று.

சிவ.—அடுத்த கிராமத்தில் நெருப்புப்பற்றியெரிகிறதாம். வெகு ஜனங்கள் திரண்டோடுகின்றனா. அதோ, புகைதோன்றுகிறது பாருங்கள்.

அரி.—எங்கே, ஐயா, புகை? எனககுத்தெரியவில்லையே.

சிவ.—இதோ தெரிகிற சிவன் கோவில் கோபுரத்தின் பக்கத்தில் பாரும்.

அரி.—ஆமையா, அடுத்த ஊரில் நெருப்புப் பிடித்ததாகச் சொலலுகிறீர். கோபுரத்துக்கு சமீபததில தோற்றுகிறதே! இது தான் சாகாசந்திர நியாயம். அதாவது வெகுதூரத்திலிருக்குஞ் சந்திரனை ஒரு மரத்தின் பக்கத்திலிருப்பதாகச் சொல்வது. பெரிய திருவிழாக்கூட்டம்போல ஜனங்கள் இந்த வீதியிலும் திரண்டு நெருஙகித், திரும்பிவர எண்ணமுள்ளவர்கள்கூடத் திரும்ப முடியாமல், வீசிதரங்க நியாயமாய் (ஒரு அலையை மற்றொரு அலை தள்ளிக்கொண்டு போவதுபோல்) முன்னோக்கியே தளளிக்கொண்டு போகப்படுகிறார்கள். சேதம் மிகுதியாயிருக்குமோ?

சிவ.—ஆமாம, கிராம முழுமையும போயவிட்டதென்று சொல

விக்கொண்டு போகிறார்களே. நமக்கும் பொழுதாகி விட்டது. மெல்லத்தள்ளியடித்துககொண்டு நாமும் யோகீசுவரரிடத்துக்குப் போவோம். ஏன்? அரிதாசரே, எழுந்திருமே?

(மூவரும் யோகீசுவரரிடத்துக்குப் போய்சசேர்ந்தாகள்.)

யோகீசுவரர்.—வாருங்கள். உடகாருங்கள. வந்தகாரியம் யாதோ?

சிவ.—இவர் என் மாப்பிள்ளை. சிலசாலமாயக் குன்மநோயினால் வருந்துகின்றார். பலவைத்தியர்களிடத்தும் இவர் நோய்க்குததக்க மருந்திலலாமற போயிற்று.

மாப்பிள்ளை.—அவாகள் சொலலுகிறது உண்மையே. இந்நோய்க்குததக்க ஔடதம் இந்நாடடு வைத்தியர்கள் பலரிடத்தும் சசவிஷாண மாயிறறு.

சிவ.—சசவிஷாணமென்றால அதென்ன ஔடதம்?

மாப்.—இல்லை, மாமா! சசவிஷாணமென்பது ஔடதமன்று. அது ஒரு நியாயம். முயறகோடு கிடையாதென்பதியாவரு மறிநத விஷயமே.

யோகீசுவரா.—நலலது. உமககு இப்போழ்து ஆகவேண்டியதென்ன?

மாப்.—நானிறக்கும் வரையில் மருந்து விரும்பாமலிருக்கும்படி அனுக்கிரகிக்கக் கேடடுக்கொள்ளுகிறேன். இந்த வரம ஒன்றே எனக்குப்போதும.

யோகீசுவரர்.—அப்படியே ஆகட்டும். ஆனால், உம்முடைய வரம் எனக்கு விருத்தகுமாரி நியாயததை நினைப்பூட்டுகின்றது. அறுபது வயதுள்ள விவாகமாகாத ஒரு மாது ஒரு யோகீசுவரரிடத்தில் ஒரே வரம் கேட்கிறதாகச் சொல்லித் தன்னுடைய பேரனுக்குப்பேரன் தன்னுடைய வீட்டு ஏழாவது மாடியில் பொற்கிண்ணத்தில் பாலன்னம் புசிக்கிறதைத் தன்கண்ணாற் பார்க்கவேண்டுமென்று கேடடாளாம். அதுபோலவே நீரும் கேட்டீர். தருவிநியாயமாகவே என்னால் உமக்குச் சர்வேசுவரன் கிருபையால் ஏதாவது செய்தல கூடும். ஓர் யஜமானன் ஒரு சமாராதனையில் சகலவித உணவுப் பொருள்களையும் ஒரு கருவியினால் (கரண்டியி

னல்) பரிமாறினபோதிலும், புகழ் யஜமானனதாகுமன்றித் தருவிக காகாது. அதுபோல் என் முகமாக உம்மைப்போன்ற பலருக்கும் உண்டாகும் நன்மை கடவுளுடைய மகிமையையே விளக்கும். இவ்வுண்மை உணராமலே இவ்வுலகத்தோர் பலர் நிலையிலாசசெல் வத்தாலிறுமாந்து தமக்குட்பட்ட கிழோர்களை மச்ச நியாயமாக (அதாவது, கடலிடைச சிறுமீன்களைப் பெருமீன்கள் விழுங்கு மாறு) துன்புறுத்துகின்றனர். உண்மையை உணருங்கால் 'உடை மையும் வறுமையுமொருவழிநில்லா' என்பதுபோல் கூபயந்திர கடிகா (ஏற்றசசால்) நியாயத்தையொத்து வறியர் செல்வராகவும செல்வாகள் வறியர்களாகவும் நிலை தடுமாறுகிறார்களாதலால, கல்வியறிவுடை யோர் ஒருவரையும் விரோதிக்காமல் நட்புப்பா ராட்டி க்ஷீர நீர நியாயமாக (பாலும் நீரும்போல) ஒற்றுமையாக எல்லாரோடும் இருத்தலினுங்காதேனும், கொம்பில் ஒட்டிய அரக் கைப்போலவாவது (ஜதுகாட்ட நியாயமாக) அல்லது எளிதிற் பிரி படக்கூடிய எள்ளுமரிசியும்போலவாவது (திலதண்டுல நியாயமாய்) இருந்தேவரல் தகுதி. நிலையிலாச செல்வமென்றியான் சொன்னது, பொருளை லௌகிகர்கள் தேடவேண்டாமென்பதற்காகவல்ல. எங் களைப்போன்ற யோகிகளுக்குப் பொருள் தேடுதல் காகதந்தகவே ஷண நியாயம் (காக்கைபபல்லுத் தேடுதல) போலப் பயனற்றது. ஆனால் லௌகிகர்கள் பொருள் தேடுவதோடு கடவுள் முதலா, காலமுதலா வென்பதுபோன்ற பீஜாங்குர நியாயத்தையொத்த விசாரணைகளில் காலத்தை வீணாய்க்கழிக்காமல மெய்ப்பொருள் விசாரஞ்செய்து நிஜமார்க்கத்திலேயே நிற்கவேண்டியது.

மாப்.—(மருந்து வாங்கிக்கொண்டு) என்பேரில் தயவுவைத்து என் கோரிக்கையை நிறைவேற்றியதற்காக அனேக வந் தனம். நாங்கள் போய்வருகிறோம்.*

---

* இந்தச் சம்பாஷணையிற் சொல்லப்பட்ட நியாயங்களைத் தவிர, சிம் மாவலோகனம் (சிங்கநோக்கு), மண்டூகப்லுதம், ஜாமாதிருசுபம், கர்ணவ தமிசம், கைமுதிகம், தூணநிகாநம், தீபகமிருகம், ஏகதேசவிகிருதம, ஏகநாளா வலம்பிபலத்துவயம், அர்த்தஜரதீ, சமுத்திரதரங்கம், கோமயபாயசி, மர்க் கடம், மார்ஜாரம் முதலிய பல நியாயங்கள் உண்டு.

## கம்பர் சரித்திரம்.

தமிழ்நாட்டுப் புலவருள் அதுல்லியரான இவர் கம்பநாடு என்னும் ஒரூரிலிருந்து அரசாண்ட ஓர் அரசன் புதல்வர். இவருடைய அன்னை இவரைக் கருத்தரித்திருந்தபோது, கம்பநாட்டிலே கலகமொன்று கிளம்ப, அரசன் கலகக்காரர் கையால் மாண்டனன். ஆகவே இராணி தனது பிராணரக்ஷையின் பொருட்டுத் திருவழுந்தூர்க்கு ஓடி, அங்ஙனமொரு ஓச்சன்வீட்டில் அடைக்கலம் புக்கிருந்து அவ்வீட்டிற்றானே இவரைப் பிரசவித்தனள். இவ்வோச்சன் ஒரு பிடாரி பூசகனுயிருந்தான். இவர் இராச பிறவியல்லர், சாதியில் ஓச்சன் என்று சாதிப்பாருமுளர். ஏழுபிராயம் வரைக்கும் இப்பிள்ளையார் இந்த இடத்திற்றானே வாசஞ்செய்து வளர்ந்தனர். பலவளங்களிலுஞ் சிறப்புற்றோங்கிய வெண்ணெய்நல்லூரில் இருந்த வேளாளர் குலதிலகரும், மகாகுபேரரும், கிராமாதிபதியுமாகிய சடையப்பவள்ளல் என்பவர் இவரது வரலாற்றைப்பற்றிக் கேள்வியுற்றபோது, இவர்மீதும் இவருடைய அன்னையின்மீதுங் கருணைகூர்ந்து, தாம் இருக்குமிடத்துக்கு இவ்விருவரையும் அழைப்பித்து, இவர்கட்கென்று திட்டஞ் செய்த வீட்டில் இவர்களை இருத்தி, அன்னவஸ்திராதிகள் கொடுத்துச் சவரக்ஷணை செய்துவந்தார்.

இளமைப்பிராயத்திற்றானே கம்பரது விவேகங் கொழுந்துவிட்டு எரிவதைக் கண்ட சடையப்பவள்ளல், இவரது கல்வியிற் கருத்துச் செலுத்திப் பள்ளியில்வைத்து இவரைப்பயிற்றுவித்தனர். நாமகள் கடாட்சம் இவர்க்குக் கிடைத்ததனுல் இவர் தமக்கு முன்னுவது பின்னுவது இருந்த புலவர் எவரினும் மகாபுகழ் படைத்தனர். இவ்வாறன்றி, இவர்தாய் சடையப்பமுதலியார் வீட்டிற் குற்றேவல் செய்துகொண்டிருக்குங் காலத்தில், தனது புத்திரனுகிய கம்பன் மாடு மேய்க்கிற பிள்ளைகளுடன் தோழமை பூண்டு விளையாடிக்கொண்டு திரிவதைக்கண்டு, இவனைப் பிடித்து சடையப்பரது வீட்டுப் பிள்ளைகளினது ஏடுகளைச் சுமந்துகொண்டு பள்ளிக்குப் போகவிட்டாள் என்றும், ஒருநாள் உபாத்தியாயர் வயிரபுரம் என்னும் கிராமத்தில் விதைத்திருந்த கம்பங்கொல்லைக்

குக் காவலாயிருக்க இப்பையனை அனுப்பினார் என்றும், இவன் போய்க் காவல்பண்ணும்போது தூக்கங்கொண்டு காளிகோயில் ஒன்றிற் படித்து உறங்கினனென்றும், உறங்கும்போது கொல்லையைக் குதிரை ஒன்று தின்று அழிக்கிறதாகக் கனாக்கண்டு விழித்துக் கொல்லைக்கு ஓடிப்போய், மெய்யாகவே குதிரைமேய்கிறதைக் கண்டு கூக்குரலிட்டு அதட்டியும் அது போகாது நிற்கக் கண்டு, ஐயோ! உபாத்தியாயருக்கு என்ன சொல்வேன் என்று அழக், காளிவந்து "அழாதே" என்று இவனைத்தேற்றி உன் நாவை நீட்டென்று சொல்லிப் பீஜாக்ஷரத்தைப் பதித்துப்போயினள் என்றும், உடனே வாணிவரப்பிரசாதத்தால்

"வாய்த்தவயிரபுர மாகாளியம்மேகேள்
காய்த்த தினைப்புனத்திற் கால்வைத்து—சாய்த்துக்
கதிரைமாளத்தின்ற காளிங்கராயன்
குதிரைமாளக் கொண்டுபோ."

என்று பாடக், குதிரை இறந்ததென்றும், அதனை உபாத்தியாயர் கேள்விப்பட்டு "ஐயையோ! ஊர் அதிகாரியாகிய காளிங்கராயன் குதிரையல்லவா? அவன் இச்சங்கதியை அறிந்தால் யாது மோசம் வருமோ? அறிகிலேன்" எனக் கலக்கமுறலும், கம்பன் முந்திப்பாடின வெண்பாவின் முதன் மூன்று அடியையும் மீளவும் படித்துக் "குதிரை மீளக்கொண்டுவா" என நான்காம அடியை மாற்றிவிடக் குதிரை பிழைத்து எழுந்தது என்றும், இக்கதை எங்கும்பரம்பித் துங்கனெனுஞ் சோழராசன் காதிலும்விழ, அவன் இவனை அழைப்பிக்க, இப்பையன் கிளிகடி கோலோடு போய்நிற்க, "இக்கம்பனா அப்பையன்" என்று வினவினன் என்றும், இவ்வினவாலும் கம்பங்கொல்லை காத்ததாலும கம்பன் என்னுநாமம் உண்டாயது என்றும், "நீ எவ்வூரினின்று வந்தனை? அவ்வூர் எத்தன்மையது" என்று அரசன்கேட்க,

"மோட்டெருமை வாவிபுக முட்டவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டம்
அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடையன்ற னூர்."

எனவிடை சொன்னார் என்றும் கதையுளது. இஃதெது எவ்வாறாயினும் ஆகுக. சடையப்பர் இவரது பூர்வோத்தரத்தை அரசனுக்குச்

சொல்லி, இவரைக் கூட்டிப்போய முன்னிலும் பன்மடங்கு அபி மானித்து ஆதரித்துத், தருந்த பிராயம் வந்துழி விவாகமுஞ் செய்து வைத்தார். துங்கராசனைப் பார்க்கிலும் அவன் மகன் இவரை மிகமரியாதை பண்ணித தனது ராஜதானியாகிய உறை யூர்க்கு அழைப்பித்துத், தன் வித்துவான்களுட சிரேட்டராகிய ஒட்டக்கூத்தர்சகு ஒப்ப இவரையுந்தன் வாசல் வித்துவான் ஆக் கிக்கொண்டான். இவரை அடுத்தவருங் கவிபாடுந்திறமையை யிட்டே "கம்பாவீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்" என்றும், இவ ரது புக்தி நுட்பத்தையிட்டே "இதென்ன கமபசூத்திரமா" என் றும் முதுமொழிகள் வழங்கலுற்றன. இத்தகைய மகாபுலவரைக் கொண்டு, இராமாயணததைத் தமிழிற் பெருங்காப்பியமாகத் திருப் புவிக்கவேண்டும் என்று இவரது அன்னதாதாவாகிய சடையப்ப முதலியார் நினைந்து, தாம் கொண்டிருக்கும் அபிப்பிராயத்தை இவருக்கு அறிவிக்க, இவர் நலலது அப்படியாகட்டும் என்று உரைத்துங் காலதாமதம் பண்ணி வருவதைப் பொறுராகிய வள்ள லானவர் தமது பிரயத்தனத்தைச சோழனுக்கறிவித்து, அவன் மூலமாய் இவரை அருட்டுவித்தனர். கம்பரை மாத்திரம் பாடும்படி தனியே விட்டாற் பராக்காக இருந்துவிடுவாரென்ற யோசனை கொண்டாராய், ஒட்டக்கூத்தரையும் அக்காவியத்தைத் தமிழிற் பாடும்படிக்குக் கேட்டனா. ஒட்டக்கூத்தர் ஆறுகாண்டம் பாடி யும் கம்பர் தெய்வ வணக்கந்தானுஞ் செய்யாதிருக்க, அரசன் ஒரு நாள் இருகவிகளையும் அழைத்து "எவ்வளவு பாடினீர்?" என்று வினவ, ஒட்டக்கூத்தர் உத்தரமாக: "ஐந்து காண்டமும் பாடி ஆறுவது காண்டததிற் கடல்காண்படலம் வரையும் பாடினேன்" என்றனர். கம்பா அது கேட்டுத் தாங் கூத்தரிலும் அதிகம்பாடின தாகக் காண்பிக்க விரும்பிச "சேதுபந்தனப்படலம் பாடுகின் றேன்" என்றனர். அதுகேட்ட சோழன் "நீபாடிய பாடலைச் சற்றே பிரசங்கியும்! கேட்போம்" என்ன, இவர் உடனே அப் படலத்தைப்பாடி உபந்நியாசித்தார்.

"குமுத னிட்ட குலவரை கூத்தரிற்
திமித மிட்டுத் திரியுந் திரைகடற்
தமித மூர்புக வானவர் துள்ளினர்
அமுத மின்னு மெழுமெனு மாசையால்"

என்னும் விருத்தத்தை இவர் சொல்லி உபந்நியாசஞ் செய்த காலத், "துமி" என்னும் பதத்திற்குப் பொருள் "துளி" எனக் கம்பர் கூறியதற்கு, ஒட்டக்கூத்தர் ஆக்ஷேபணஞ் செய்து, துமி துளிக் காதலை மெய்ப்பிக்கவேண்டும் என்றுகேட்க, மற்றைநாட் கம்பர் அவரையும் குலோத்துங்க சோழனையும் பிறரையும் ஆயர் வீதிக்குக் கூட்டிப்போய்ச், சரஸ்வதியின் அனுக்கிரகத்தால் ஆச்சரியமான விதமாக அதை மெய்ப்படுத்தினராம். இதினாற் கம்பர் பாடலுக்கு அதிமேன்மை பிறந்தது. இதையும், தமது பாடலில் இவரது பாடல் நயமெனப் பிறர் புகழுவதையும், ஒட்டக்கூத்தர் கண்டும் கேட்டும் அதன் உண்மையைத்தாமே அறிந்தும், ஒருநாள் தாம் ஆறேழுமாசமாகப் பாடிவைத்திருந்த ஆறுகாண்டங்களையும் கிழித்தெறிந்து, ஏழாவதான உத்தரகாண்டத்தைக் கிழிக்கத் தொடங்கும்போது, தற்செயலாய் அவரது வீட்டுவீதி மார்க்கமாய்ப்போன கம்பர் உள்ளே சென்று, "உமது பாடல் ஏட்டை ஏன் கிழிக்கிறீர்" என்ன, அவர், "வரகவியேகவி மற்றைக்கவி என்னகவி" என்று ஏழாங்காண்டத்தையும் கிழிக்கத் துணிகையில், இவர் தமது பாடலோடு அவரது பாடலையும் உலகம் அறிய நிலைநிறுத்தவேண்டுமென்று பாராட்டி, "நீர் பாடிய உத்தரகாண்டத்தை நாம் பாடிய மற்றைய ஆறுகாண்டங்களுடன் அமைத்துக்கொள்ளும்படி தருக" என்று கூறி, அக்காண்டத்தைத் தப்புவித்துத் தம்பாடலுடனே சேர்த்தனர். இராக்காலத்திற் சொற்பநேரம் தவிர மற்றும்படி விழித்திருந்து வான்மீகம், வாசிஷ்டம், போதாயனம், முதலிய இராம சரித்திரங்களை வைதீகப் பிராமணர்களைக்கொண்டு ஆராய்வு செய்வித்துக் கதைகளைக் கேட்டிருந்து, பகலிலே கற்றுச சொல்லிகளை வைத்துக்கொண்டு, ஒவ்வொருவருக்கு ஐம்பதறுபது வீதமாகக் கவிசொல்லி, நாளொன்றுக்கு எழுநூறு விருத்தங்களாக ஆறுகாண்டங்களையும் ஒருபக்ஷத்துட் பாடி முடித்தனராம். சரஸ்வதி இவர்கண்ணுக்கு மாத்திரந் தோற்றிப் "பொழுது முடிந்தது கம்பா" என்ன, "எழுதி முடிந்தது அம்பா" எனக்கம்பர் சொல்லுவார் எனவுங் கதையுளது.

தாம் இராமாயணம் பாடி முடித்த சங்கதியைக் கம்பர் குலோத்துங்க சோழனுக்குஞ் சடையப்ப வள்ளலுக்குந் தெரிவித்து,

அவர்கள் அனுமதிபெற்று, ஸ்ரீரங்கத்தில அதை அரங்கேற்றப் போக, அங்குள்ள வைஷ்ணவப் பிராமணர் அழுக்காறுற்றுச "சிதம்பரவாசிகளாகும் தில்லைமூவாயிரரே தமிழ் சிரேஷ்டராதலால் நீர் முதல் அவரிடத்திற்சென்று உமது நூலை அரங்கேற்றல் கடன்" என்று போக்குக் கூறினர். கம்பரும் அப்படி ஆகட்டுமென்று சொல்லித் தில்லைக்குச சென்று, அவர்களுட் சிலரைக்கண்டு, தாம் வந்த கருத்தைப பேச, அவர்களோ: "நாங்கள மூவாயிரரும ஒருங்கு கூடினன்றி யாதொரு கருமமேனுஞ் செய்தல்கூடாது" என்று தனித்தனி ஒவ்வொருவருஞ் சொல்லப், புலவர் பெருமானும் இவர் விசாரமாய் இருகக, மறறை நாளோ அப்பிராமணர் அத்தனைபேரும் ஓரிடங்கூடும்படியான சமபவம் நேரிட்டது. அவர்களுள் ஒருவரது பிள்ளையை அரவந்தீண்டியதால் அப்பிள்ளை இறந்துவிடத தில்லைமூவாயிரர் யாவரும் அவ்வீட்டிலே ஏககாலத்திற் கூடக் கம்பர் தமது கையிலிருந்த இராமாயணம் நாகபாசப்படலத்திற் சில பாட்டுக்கள் தெரிந்து படிக்க உடனே, உறங்கி விழித்தார்போல இறந்தபிள்ளை உயிர் கொண்டு எழுந்த தென்று ஓர் ஐதீகம் உளது. இந்த ஆச்சரியங் கண்ட அப்பிராமணர் இவரை மெத்தவும் பாராட்டி உபசரணை செய்து தொலகாப்பியரிடஞ் சில வினாக்கேட்ட அதங்கோட்டாசிரியர்போலக் கடமைக்காக இவரிடஞ் சில கேட்டு அப்பால் இவர் திறமையை மெய்ச்சித் துதிகவியுங் கையொப்பமுங் கொடுத்து அனுப்பினார்கள்.

இவர் ஸ்ரீரங்கத்திற் திரும்பி மறுபடி அங்குள்ள பிராமணர்கள் கேட்டுக்கொண்டபடி திருநறுங்குண்டத்தில தமிழ் வல்லராய் இருந்த சைனர்களிடத்தும் மாவண்டூரில் உள்ள சிரேஷ்டபண்டிதனான ஒரு கருமானிடத்தும், தஞ்சாவூரிற் பிரபல வித்துவாமிசையான அஞ்சனாக்ஷி என்ற தாசியினிடத்தும், வேறு சிலரிடத்தும், ஈற்றில் அவரது புதலவர் அம்பிகாபதியினிடத்தும் கையொப்பமுந் துதிகவியும் வாங்கிவந்தார்.

விசாலமும உன்னதமுமான ஆயிரக்கால் மண்டபத்தின் கண்ணே, வேதாகம சாஸ்திர பண்டிதர்கள் வடமொழிப்புலவர்கள், தென்மொழிப்புலவர்கள், அரசர்கள், பிரசைகள் ஆகிய பலர

சமூகத்திலே கம்பர் இராமாயணத்தைப் பிரசங்கித்து அரங்கேற்றுஞ் சமயத்திலே வைஷ்ணவர்கள் இடைக்கிடை சிற்சில கவிகளில் வினவி ஆக்ஷேபங்கள் தொடுக்க, அவர்களுக்குத் திருத்தி வருமாறு இவர் சமாதானஞ் செய்தனர்.

வைஷ்ணவ சிரேஷ்டரான ஸ்ரீமந் நாதமுனிகள் இவர் அரங்கேற்றத்துக்கு அதி உச்சாகமாய்ச் சகாயஞ்செய்து, அரங்கேற்றஞ் சமாப்தியானவுடனே வித்துவசிரோமணியாகிய இவரை நோக்கி: "இத்தகைய மகா காவியத்திலே நீர் நரஸ்துதி பண்ணிய காரணம் யாது?" என்று கேட்க, இவர் பிரதியுத்தரமாகச்: "சுவாமிகளே! சடையப்பமுதலியார் எனது அன்னதாதாவாய் இக்காவியத்தைப் பாடும்படி என்னை ஏவினார் ஆதலாலும்; என்மகன் அம்பிகாபதியின் விவாகத்திற் பாதபூசை நடக்கும்போது அரசர்கள் பிரபுக்கள் நிறைந்திருந்த கலியாணமண்டபத்தின் வாசலில் மேற்படிவள்ளலானவர் வந்து தாமிருக்க இடங்காணாது நிற்கச், சிலர் எழுந்து 'இங்கேவருக' என்று அவரை அழைக்கச், சிலர் 'அங்கேவருக' என்று அழைக்க, அவர் யாவர்க்குங் கையமைத்து அங்கணத்தின் வரம்பிலே நிற்க, அதை என்பாரி கண்டு பொருளாகி வியசனமுற்று 'இத்தனை ஜனங்கட்கும் இடமிருக்க எமது அண்ணா அவர்கட்கு மாத்திரமா அந்த அங்கணங்கிடைத்தது' என்று என்னைக்கேட்க, யான் உத்தரமாக: 'உன் அண்ணனை இந்தவிடத்திலா வைப்பது? யான் வைக்குமிடத்தில் வைக்கிறேன்' என்று சொன்னேன் ஆதலாலும்; அவர் பெயரைப் பலவிடங்களிலும், அவர் தம்பியார் கண்ணமுதலியார் சாராமமுதலியார் என்பவர்கள் பெயர்களை இரண்டோர் இடத்திலும் வைத்தேன்" என்றார்.

ஸ்ரீமந்நாதமுனிகள் அதைக்கேட்டு மகிழ்ந்து, அப்படியேல், அவர் நாமத்தை நூற்றுக்கொரு முறை வையாது ஆயிரத்திற்கொருமுறை வைத்தாற்போதுமே என்றனர். கம்பரோ அவ்வாக்கைச் சிந்தை வருந்தாது கேட்டு, "மகாபாக்கியம் ஐயா! நான் அந்த வள்ளலின் குணாதிசயங்களை விளங்காது நூற்றுக்கொன்றாக மதித்தேன். தாங்களோ ஆயிரத்துக்கொன்றாக மதித்தீர்களே" என்று சமாளித்து "அவ்வாறு செய்கின்றோம்" என்றனர்.

அப்பொழுதே அம்முனிவா இவர்க்குக் கவிச்சக்கரவர்த்தி, தெய் வக்கவிஞர், ஆழ்வார் என்னும் திருநாமங்களையிட்டுச, சங்கத்திருந் தார் பலரைக்கொண்டு சாத்துகவிகள் சாற்றுவித்து, வைஷ்ண வரைக்கொண்டு தக்க மரியாதையுஞ் செய்வித்தார்.

இத்துணைய உபசரணை பெற்ற இப்புலவர்பெருமானுக்கும் இவரை உயர்த்திவைத்த சோழராசனுக்கும் பிற்காலத்தில ஒவ் வாமை உண்டுபட்டது. இவர் "இந்த இராசசியம் உமக்கைக் கியம், நீரெமக்கைக்கியம்" என்று ஒருமுறை இராசாவோடு தம்மைச் சரிகாட்டி ஒப்பிட்டுபபேசியதால், அவன் யாதும் பேசா து கோபங்கொண்டு வீட்டிற்போய் அங்கே ஆகாரம் உண்ணாது பட்டினியாய் இருந்தனன். அரசி முகாந்தரத்தை அறிந்து அவ ளது தாசியாகிய பொன்னிக்கு உணர்த்த, அவள் "ஓ! யான் இந் தக்கணமே கம்பரிடஞ் சென்று அவரது அகம்பிரமத்தை அடக்கி அவரை எனக்கு அடிமையுமாக்கி வருகிறேன் பாரீர்" என்று சப தஞ்சொல்லிப்போய் உபாய மாயமொன்றாற் "தாசிபொன்னிக் குக் கம்பன் அடிமை" என்று ஒரு நறுக்கில் எழுதுவித்துக் கை யொப்பமும்வாங்கி அரசனிடங்கொடுக்க, அரசன் மிகமகிழ்ந்து, மற்றை நாள் வித்துவான்கள் கூடியிருந்த சபையில் அந்நறுக் கை வாசித்துப் பகிடிபண்ணிக் கம்பரை நோக்கி "ஓ! புல வரே! இதை நீர்தானா எழுதினீர்?" என்றான். இவர் அதற்கு உத் தரமாய் "நாம் எழுதியது மெய்யே; அதன் பொருள் அறியா தாரக்கு அது நகைப்பாய் இருக்கும்; அல்லாதார்க்கு அப்படி யிராது" எனச் சொல்லித் "தாய்" கடை குறைந்து "தா" என்றா யது; "சீ" குறுகிச் "சி" என்றாயது; "பொன்" "பொன்னி" என இகரவிகுதி பெறறுள்ளது; மொத்தம் பார்க்கில் உலகமாதா வான சிறீலக்குமிக்குக் கம்பனடிமை என்பது பொருள் என்று தாற்பரிக்க அரசன் கேட்டு வெட்கி அம்மம்ம! புலவர்களை ஒரு நாளும் நம்பொணாது என்று சினந்து

"போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடிற்
தூற்றினுந் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினு மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே."

என்னும் பாட்டைக்கூறிக் கோபதிரனாய் "நான் கொடுத்தவிருதுகளை வைத்து நீ எங்கேனும் போகலாம்" என்றான். அதுகேட்ட கம்பர் நின்போலரசன் என் அடைப்பைக்காரனோ என்றும்

"காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மேதினியிற்
கொல்லிமலைத் தேனசொரியும் கொற்றவா நீ முனிந்தால்
இல்லையோ வெங்கட் கிடம்." என்றும்,

"மன்னவனு நீயோ வளநாடு முன்னதோ
உன்னையறிந்தோ தமிழை யோதினேன்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ வுண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு."

என்றும் பாடி, வீட்டுக்குத்தானும் போகாது, மனைவிக்கும் அறிவியாது, செலவுக்குப் பணமும் எடாது, இருபத்து நாலு காததூர மாத்திரம் விஸ்தாரமுற்ற அரசன் சீமையை விட்டுப்போயினர். வழியிலே செலவுக்குமுட்டுப்பட்டு ஓரிடத்திலே ஓர்வீட்டுக்குச் சுவர் வைக்க ஏற்பட்டு, அதற்குச சம்பளமாக வேலி என்பாளிடம் நெல்வாங்குமுன், அது முன்னரே பலருங் கட்டியபோது விழுந்தாற்போல அப்போதும் விழுந்துபோக (இதை ஒரு பேயின் விளையாட்டு என்பர்) கம்பர் மிக்க விசனம் உற்றவராய்,

"மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவையறிவா ரிங்கில்லை
விற்கொண்ட பிறைநுதலாள் வேலி தருங்கூலி
நெற்கொண்டு போமளவு நில்லாய் நெடுஞ்சுவரே."

என்று சுவரை விளித்து நிற்கச்செய்து, வேலி என்னும் அரசியிடங் கூலிநெற்பெற்று அப்புறம் போனார். வழியிலே பசி அதிகரித்தபோது கோமுட்டி கடையிலே அவல் கேட்டுப் பெறாமலும், செக்காட்டியிடம் பிண்ணாக்குக் கேட்டு அகப்படாமலும், பிராமணனிடத்திலே தாகந்திர நீர் கேட்டு வாயாமலும், பின்னும் முன்னடந்து களைப்புற்று அப்பாற் போம்போது, உழுகிற வேளாளன் ஒருவனுக்குப் பழஞ்சோறு வரக்கண்டார். அவன் அதைக் குடிக்சப் போகிறபோது இவர் முந்தி ஓடித் தம் கையை நீட்ட, அவன்தான் உண்ணாது இவர்க்கு முன் கொடுத்து, மீந்ததை உண்

டனன். இவர் பசியாறி இளைப்புத் தீர்ந்தபின் இச்சம்பவங்களைச் சுட்டிச,

"செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
பார்ப்பா ரகத்தையெட்டிப் பாரோமே யெந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்."

"மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்கை
ஆழி தரித்தே யருளுங்கை—சூழ்வினையை
நீக்குங்கை யென்று நிலைக்குங்கை நீடூழி
காக்குங்கை காராளர் கை" என்றுபாடினர்.

மேற்குறித்த வேளாளன போசனம் உண்டு பசியாறிப்போய் மறு படியுங் கொலலையில் உழவே, அவ்வுழவுசாலிற தபலை ஒன்றேடு புதையல்தோன்ற, அவன் மண்வெட்டிகொண்டு அதை வெட்டியெடுத்து, இப்புலவரது மங்களவாழ்த்தினுல் எனககிது அகப்பட்டதென்று கூறிக, கம்பரைத் தன் வீட்டுக்குக் கூட்டிபபோய், இரண்டு மூன்று நாள வைத்து உபசரித்து, நீர எங்கேயாயினும போகாது இங்கிரும் என்று மறிக்க, இவா சம்மதியாமையால், அவன் "இத்திரவியத்திலாயினும் பாதி கொடுபோம்" என, இவர் "நந்நான்கு முழச சீலைமாத்திரம் இரண்டு கொடு" என்று வாங்கிப்போய் ஒரு சிமானையடுத்து அவன் உதவியாற் சேரராசனுக்கு அடைப்பைக்காரனுயினர். இவர் அவ் இராசனுடன் இருக்கும்போது ஒருநாள் இராச சபையிற் புலவர்கள் இராமாயணப் பிரசங்கஞ் செய்ய, இவரதிற் சற்றே கருத்துந் திருத்தமுங் காட்டினதால் அரசன் இவரை நோக்கி, உனககு இப்பிரசங்கம் வருமா என்று கேட்க, இவர் உத்தரமாய் "என் அரசனே! நான் கம்பருக்கு அடைப்பைககாரனுய் இருந்தபோது இதனைக் கேட்டிருந்தேன்; ஆதலாற் சற்றே எனக்கு வரும்" என, அரசன் அவ்வார்த்தையைக் கேட்டு, "அப்படியானல் நல்லது, நீ சற்றே பிரசங்கி, கேடபோம்" என, இவர் நவரசாலங்காரத்தோடு பிரசங்கததைப் படித்து முழக்கிவிட்டனர். அரசன் இதைக்கண்டு சபையாருடன் அவருடைய வித்தாண்மையை மெய்ச்சினனுய், அதுமுதல் இவரைத் தனது வித்துவான்களுட் சிரேட்டராக்கினதுமனறித் தன் பந்திபோசனத்திலுஞ் சேர்த்துக்கொண்டனன்.

இதைக்கண்டு மாறப் புலவர்கள் நிரநிமித்தமாய் இவருடன் வெறுப்பாகி இவரை இழிகுலத்தானென அபவாதஞ் சொல்லி, இராசனின் நாவிதனுக்கு ஈராயிரம் வராகன் கொடுத்து, அப் புலவரை உன் சகோதரன் என்று சொல்லெனத் தூண்டிவிட் டார்கள். ஒருநாள் இவர் இராசாவுடன் சரியாசனத்தில் இருந்து இறங்கி வாசல அண்டையிற் போக, நாவிதன் இவர் வரவைக் காத்து நின்று "என் அண்ணு" என்று யாவருங்காண இவரைக் கட்டி அழ, இவரும் நடந்த சற்பனையை அறிந்து வருவது வருக என்று நினைநது, அவனைக்கட்டிக்கொண்டு சாலமாய் அழுது, "அடா! தம்பி! நீ குடி இருப்பதெங்ஙன்? உன் பிள்ளைகளைக்காண வாஞ்சிக்கிறேன்" என்று சொல்லிச சும்மா செல்லப்படாது, 'தூக்குண்டானுல் நோக்குண்டு' என்றுறபோலக கொஞசங் கடலை வாங்கிககொண்டு அவனுடன் போயினர். மைத்துனர் வந்தார் என்று அமபடைச்சி களித்துச சாதங்கறி சமைத்து, "மைத்து னரே! உண்ணவாரும்" என்றழைக்க, இவரோ "நலலது, நான் உண்ணுமுன் என் தம்பி இடம் விசாரிககவேண்டிய சில உள" என்று கூறி, அம்பட்டனை நோக்கித் "தம்பீ! நீயும் நானும் பிரிந்து இருபது வருடமாயிற்றே, நாங்கள் தாயபாகம் பிரிவிட்டதில் லையே; நீ இவ்வளவு நாளாக உழைத்ததிற் பாதியை எனக்குக் கொடு" என்றுர். அவனே வித்துவான்களிடம் தான் வாங்கி வைத்திருந்த ஈராயிரம் வராகனையும் கொண்டுவந்து கொடுக்க; இவரோ "நல்லது தம்பி, நீ சௌரஞ் செய்த நாளளவு நானும் இராசாவுக்குச் சௌரஞ் செய்யவேண்டுமே; அதற்கு நீ சம்மதிக் கிருயா?" என: "ஆமாம், அண்ணு" என, இவரோ "அப்படி யேல்: அரசனுக்கு இது காரியம சம்மதமாகுமா? வா, கேட் போம்" என்று கூறி, உபாயமாய அவனை இராச சபைக்கு அ ழைத்துச சென்றுர்.

இதற்கிடையில் நடந்த சங்கதிகளைத் தூதரால் அரசன் அறிந்து விசனக்கடலில் மூழ்க, எதிர்ப்பாவலர் குதுகுலித்து, நம் எதிரி இன்று விழுந்தான் என்று மகிழ்ந்தார்கள். நாணத் தால் முகரூபமாறிய அரசன் கம்பரை நோக்கிச சமாசாரம் ஏது என்று கேட்க, இவர் இராசனை நோககி, "சுவாமீ! தஙகளுககு

என்தம்பி சௌரஞ் செய்த காலமளவு யானுஞ் செய்தற் பொருட்டுத் தங்கள் சம்மதங் கேட்கவந்தேன்" என்றார். இச்சொல் லுடனே தங்காரியஞ் சித்தியாயிற்று என்று பகைவர் கண்டு, நாவிதனைக்கூவி : "விடாதே! எச்சங்கடம் வரினும் யாந் துணை செய்தும்" என்று அவனைக் கிளப்பிவிட்டனர். அந்தச் சமையம் வாணி கடாக்ஷத்தாற் சம்பரது கையிலோர் சிலம்பு வந்தது. அதை இவர் அரசன் கையிற் கொடுத்து "இராச கெம்பீரரே! யானும் என் கனிட்டனும் எம் முன்னோர் தேடிவைத்துப் போன வீட்டுத் தட்டு முட்டுகளைப் பங்கிட்டபோது இச் சிலம்பு என் பங்குக்கு வந்தது. இதுபோன்றது ஒன்று எனது தம்பி கையிலும் உண்டு, அதையும் வாங்கினாற் தங்கள் நாயகியாருக்கு உதவும்" என, இதைக்கேட்ட நாவிதன் திடுக்குற்றான். யானையானது தன்னைக்கட்டச் சங்கிலி தானே எடுத்துக் கொடுத்தாற்போல அம்பட்டன் எடுத்த துருவம் அவனுக்கே அநர்த்தம் ஆயிற்று.

அப்போது அந்த ஏழை அம்பட்டன் திகிலடைந்து அரசனைப் பார்த்து "எனது ஆண்டவனே! என் வசஞ் சிலம்பு இல்லை" என்று கூறக், கம்பர் "அடா தம்பி! உனக்கேன் அச்சிலமபு? என்போல் நீயும் அரசற்கு அதைக்கொடுத்துவிடு" என்றார். காரியம் வரவரத் தடித்தது. மயிர் வினைஞனோ பின்னும் அரசனை நோக்கி "என்வேந்தனே! அப்படியோர் பொருள் என்வசமில்லை" என, அரசனுஞ் சபையாரும் அவன் பேசசை நம்பாது அவனைக் கட்டிப் புளியமிலாற்றாற் சார்த்தும்படி ஏவற்காரரை ஏவ, அவர்கள் அவ்வாறுசெய்ய, அவன் "ஆண்டவனே! உள்ளன எல்லாஞ் சொல்லுகிறேன், கட்டவிழ்த்து விடுங்கள்" என்றான். அரசன் அவ்வாறு செய்வித்தபின், தோரணிப் பொதியை அவிழ்த்துவிட்டான். உடனே சேரமகாராசன் கண்கள் சிவப்பேறத் தலையாரிகளைக் கூவி "அகோ! தலையாரிகாள்! இந்தத்திருட்டுப் புலவர்களைப் பிடித்துக் கழுவில் ஏற்றுங்கள்" என்றான். இச்சங்கதி காதில் விழப்பெற்ற அவர்கள் பாரிகள் கம்பரிடம் ஓடிவந்து முன்றானையை நீட்டி, "நீரே எமக்கு மங்கிலியப்பிச்சை இடுமையா" என்று கேட்க, இவர் மனதுருகி அரசனிடம் மனுப்பேசித் தம்பகைஞர் உயிரைப் பாதுகாத்தனர்.

பின்பு அரசன் கம்பரை நோக்கி "நீர் யாவர்? உமது பூர்வோத்தரங்கள்யாவை? யதார்த்தமாய்க் கூறும்" என்று கேட்கக், கவி சக்கரவர்த்தி தமது வரலாற்றில் எதையும் மறையாது கிரமமாய்க் கூறினார். கூறவே அரசன் தான் இவரை அடைப்பக்காரனாய் வைத்திருந்ததைப் பற்றித் துக்கித்துப், பண்டையிலும் பதின்மடங்கு கனம் பண்ணித் தன் வாசல் வித்துவானாக்கிக்கொண்டான்.

இது காரியம் இவ்வாறு நிற்க, முன் இவரோடு வெறுப்படைந்த சோழராசன், இவர் தன் சபையில் இல்லாததைப்பற்றித் துன்புற்றுக், கம்பரில்லாச சபை, சந்திரனில்லா வானம், தாமரையில்லாத்தடாகமே என்று உன்னிக், கன்றை நினைந்து உருகும் பசுப்போற கரைந்து, இவர் உறைபதியைத் தூதரால் உணர்ந்து, இவர் திரும்பும்படிக்கும் இவரை அனுப்பும்படிக்கும் முறையே இவர்க்கும் அரசனுக்கும் நிருபம போக்கினன். சோழராசன் விருப்பப்படி கம்பர் தன்னைவிட்டுப் பிரியப்போகிறார் என்று சேரராசன்கண்டு துக்கமுற்றிருந்தபோது, இவர் அவனை நோக்கி: என்வேந்தனே.

"பாலுக்குச் சர்க்கரை யில்லையென் பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப் போடவுப் பில்லையென் பார்க்குங் குறைதைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்குங் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென் பார்க்கும் விதனமொன்றே."

என்று பாட்டிற்சொல்லி, அவனையாற்றி, இராசபவனியோடு அவனால் அனுப்பப்பட்டுச் சோணாடு சேர்ந்தனர். சேரனால் அனுப்பப்பட்டு யானைமேற் சென்ற கம்பரைச் சோழன் எதிர்வந்து அழைத்துப்போய்ச் சிங்காசனத்தில் இருத்தித், தன்னைவிட்டுப்பிரிந்த நாள் தொடங்கி இதுகாறு நடந்தவைகளைக் கேட்டுக் களித்து ஈற்றிற் பரிகாசமாய்: "எல்லாஞ்சரியே புலவரே! ஆயினும் இராசன் ஒருவன் அடைப்பைக்காரனாய் உம்முடன் வரத்தக்க ஸ்திதியிற் திரும்புவேன் என்று நீர் முன்சொன்ன பிரதிக்கினை ஒன்று தவறினது" எனக், கம்பர் அரசனைநோக்கி: "அரசோத்தம! அதுவும் ஒரு நாள் நிறைவேற்றுகிறேன் பாரும்" என்று சொல்லி, முன்கருதிப் பண்ணிய யோசனைப்படி சேரனுக்கோர் திருமுகம் வரைந்து, அவனும் ஓர் அடைப்பைக்காரன் வேடம் பூண்டு தூரகா

ருடனுய இராசசபையின்கண்ணே வந்திருந்து, கம்பநாட்டாழ் வார்க்கு வெற்றிலே மடித்துக்கொடுத்து, மறுபடியும் இவரது சயிக் கிளேயின்படி சோழன் உணராதவண்ணம் விரைவிலே தன் நாட் டுக்கு ஓடினன். வந்த சேரன் திரும்பியபின்பே, வந்து போனவன் இன்னுன் என்று சோழனுக்குத் தெரியவந்தது.

இவ்வாறு பிரஸ்தாபம் பெற்றிருந்த இபபுலவருக்குப் பிற் கால வாழ்நாள் நிம்பக்கனிபோற் கசப்பாயிற்று. இவரது புத் திரரும் வித்துவாமிசருமாகிய அம்பிகாபதி சோழனுடைய மகள் மீது கொண்ட மோக காரணத்தாற் கழுவிலே ஏற்றப்பட்டிறக்க, இவரும் அரசன் மன்றுக்குச் செலலாதுவிட்டனர். இவர் ஒரு நாள் தம் வீட்டிலிருக்கும்போது வித்தியாசாலேயினின்று வீடு நோக்கிச் சென்ற இராசகுமாரன் தெருவீதியிலே யாஃனயொன்று செல்லக்கண்டு, அதற்குப்பயந்து இவரது அகத்துள் அடைக்கலம் புகத், தம்புத்திரனுடைய மரணத்தாற் சோகித்து மதிமயங்கி இருந்த இவர், எழுத்தாணியிஞல அப்பிள்ளேயைக் குற்றிக்கொன் ருர். இஃது அரசன் அறிந்து இவரை அழைப்பித்து இவர் மீதில் அம்பை எய்விக்க, இவர்,

"வில்லம்பு சொல்லம் பிரண்டம்பு மேதினியில்
வில்லம்பு சொல்லம்பை வெல்லாதாம்—வில்லம்பு
பட்டுதடா வென்மார்பிற் பார்வேந்தே யுன்குலத்தைச்
சுட்டுதடா வென்வாயிற் சொல்."

என்று பாடி, எவ்வாறே உயிர் தப்பிப் பாண்டிவளநாடு சென்று வறுமையால் நொந்திருந்தார் என்றும், இராமநாதபுரச சீமை யிலே நாட்டரசன்கோட்டையிலே அறுபது வயசில இறந்து, வைஷ்ணவ மதாசாரப்படி சமாதிவைக்கப்பட்டார் என்றுஞ் சரித் திரமுளது. இச் சமாதிஸ்தானத்தைக் கண்ணுரக் கண்டேன் என்றுஞ், சுக்கிரவாரந்தோறும் அதில் விளக்கு ஏற்றுகிறார்கள் என்றும், ஆண்பிள்ளேகளேப் பள்ளிக்கு வைக்கும்போது இவ் விடத்திற் கூட்டிப்போய்க் கொஞ்சம் மண் கிள்ளிக் க[illegible] கல்வி வரும்படி அவர்களுக்குப் பருக்குவார்கள் என[illegible] படி மண்ணள்ளும் இடம் இந்நாளிலும் பதிவாயிருக்கிறன[illegible] றும், இராமநாதபுரஞ் சென்ற எம் சிநேகிதர் ஒருவர் [illegible]

கேட்டோம். இவர் இறந்தார் என்ற சங்கதி காதில் விழுந்த போது, ஒட்டக்கூத்தர் துன்புற்று,

"இன்றைக்கோ கம்ப னிறந்தநா ளிப்புவியில்
இன்றைக்கோ வென்கவிதை யேறுநாள்—இன்றைக்கோ
பூமடந்தை வாழப் பொறைமடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூலிழந்த நாள்."

என்று பாடினர்.

---

## மனுதர்ம சாஸ்திரம்.

### அரசியல்.

1. உலகத்தில் அரசனில்லானேல், வலியிலார், வலியோர் வசப்பட்டு, இடுக்கணுற்றழிவார்களாகையால், உலகம் அராஜகமாகி அழியாமற் காக்க அரசனைக் கடவுள் உண்டாக்கினார்.

உழுமகன் தனது கழனிவாயுள்ள களைகளைக் களைந்து பைங்கூழை வளர்க்குமாறு வேந்தனுந் தன்னாட்டின்கண்ணுள்ள துன்மார்க்கர்களை அகலவோட்டிச் சன்மார்க்கர்களைப் பாதுகாப்பான்.

தன்னாட்டிலுள்ளார் யாவரையும், நீதிநெறிவழுவாது செங்கோலோச்சிக் காக்கும் புரவலன், தன் குடிகள் செய்யும் நல்வினைப்பேற்றின் ஆறிலொருகூறு பெறுவான். இவ்வாறு நீதியால் ஆளாத காவலனேவென்றால் தன்றேயத்தார் இயற்றுந் தீவினைப் பயனில் ஆறிலொரு பகுதியடைவான்.

பெருத்த புயவலியையுடைய பூபதியால் செம்மையிற் காக்கப்பட்டு அச்சமற்றிருக்கின்ற நாடு, தண்ணீர் தட்டின்றி வளரும் மரம்போல் தழைத்தோங்கும்.

---

2. இந்திரன், சந்திரன், சூரியன், வாயு, இயமன், வருணன், அங்கி, பிருதிவி, இவர்களைப்போல் பூமியாள்பவனும் ஒழுகல் வேண்டும்.

இந்திரன் ஆவணிதொட்டு நான்குமாதம் வரை மழைபொழி வித்து மனிதர்களை மகிழ்விக்கின்றான். அரசனும் தன் குடிகளின் வேட்கையை நிறைவேற்றுகின்றான். இஃதிந்திரன் விரதம்.

உவாமதியை நோக்கி உலகத்தார் உவக்குமாறு தம்மரசனைக் கண்ணாரக்கண்ட அமைச்சன் முதலிய பிரசைகள் களிப்பெய்து வார்கள். இது சந்திரன் விரதம்.

சூரியன் மார்கழிமுதல் எட்டுமாதகாலம், தன்னுடைய வெங் கதிர்களால், மிகவும் தபிக்காமல் பூமியிலுள்ளுள்ள ஜலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக இழுக்கிறதுபோல அரசன் தன் குடிகளை இடுக்கட்படுத்தாமல் மாதந்தோறும் சிறுகச சிறுகத் தீர்வை வாங்கவேண்டும். இது சூரிய விரதம்.

வாயு ஜந்துக்களினிடத்துப் பிராணரூபமாய் உட்புகுந்து சஞ் சரிக்கின்றான். அரசனும் வேவுகாரர்கள் மூலமாய பகைவர் பட்டினத்தில் பிரவேசிக்கிறான். இது வாயு விரதம்.

இயமன் பாபிகளைத் தண்டிக்குங் காலத்தில் நட்டாரென்றும் மாற்றாரென்றும வேற்றுமையின்றி யாவரையும் ஒருமாதிரியாய்க் குற்றத்துக்குத் தக்கவாறு சிக்ஷிப்பதுபோல அரசனும் குறறஞ் செய்தோரைப் பக்ஷபாதமின்றித தண்டிக்கவேண்டும். இஃது இயமனது விரதம்.

வருணன் தான் தண்டிக்கவேண்டியவர்களைத தனது பாசங்க ளால் சற்றும் யோசனையின்றிக் கட்டுகிறதுபோல அரசனும் அப ராதிகளைக் கருணையினறிக கண்டிக்கின்றான். இது வருணன் விரதம்.

அரசன் அக்கினியைப்போல், அநவரதம் சோம்பலிலலாமற் சொலித்துக்கொண்டு, துன்மார்க்கர்களையும் தனக்கு அபராதம செய்த அமைசசன் முதலினோரையும் சிக்ஷித்துக்கொண்டிருப் பான். இஃது அங்கியின்விரதம்.

பூமியானது சராசரரூபமான அனைத்துப்பொருளையும், உயர் வுதாழ்வின்றி ஒருமாதிரியாய் ஏந்தும. ஏந்தலும் பண்டித பாமரசாதாரணருய்ப் பேதமின்றி, அனைவரையும் போற்றுவான். இது பிருதிவிவிரதம்.

3. தாதைமூதாதைநாண்முதல் தலைமுறை தலைமுறையாய் மந்திரித்தனம் செய்தவமிசத்தார்களாயும், நீதிநூல் தத்துவநூல் வில்வித்தை முதலிய நூறகளை நன்குணர்ந்தோராயும், ஊக்கமும் உடல்வலியுமுற்றவர்களாயும், உயர்குடிப்பிறப்பாளர்களாயும் உள்ளவமைச்சர்கள், எழுவர் அல்லது எண்மரைச செம்மையாய்ப் பரிசோதித்துத் தெரிந்துகொண்டு, ஆலோசனை சொல்லுவதற்காக அரசன் வைத்துக்கொள்ளவேண்டியது.

மிக்க எளியோர் குடும்பகாரியத்தைக கூடத் தனியே ஒருவனுக நடத்த முடியவில்லையே. அங்ஙனமாயின் சாலவும் சங்கடம்விளைக்கும் இராச்சியதந்திரம் எங்ஙனே துணைவலியின்றி நடத்தற் பாலதாகும்?

பலவித நூலுணர்ச்சி சொற்குறி கண்சிமிட்டுதல முதலிய சமிக்கினையறிதல, சிட்டிகைபோடுதல் முதலிய செய்கை, இவையெல்லாம் பொருந்தியவனும், பொருள்விழைவில்லானும், மிகக ஆற்றலுடையோனும், நற்குடிப் பிறந்தோனும், இருக்கின்ற ஒரு சாரனை அரசன் வைத்துக்கொள்ளல் தகுதி.

அச சாரன் வேடமுதலியவற்ருல் உருககரந்து பகைவருறைவிடஞ்சென்று அவரது எண்ணம் செய்கை அவர் சேனையின் றன்மை இசசை என்றிவற்றையறிந்து வரவேண்டியது.

ஒவ்வொரு கிராமத்திற்கும் தனித்தனியாய் ஒரோரியஜமானனையும் பப்பத்துக் கிராமத்தலைவர்கட்குமேல் வேறொரு இயஜமானனையும், இருபதிருபது தசக்கிராமாதிபதிகளுக்கு மேலாக வேறொரு இயஜமானனையும், இந்தத்தலைவர்களில நூறு நூறு பேருக்குமேல் மற்றொரு இயஜமானனையும், சதாதிபதிகள் ஆயிரவாயிரவர்க்கு மேல வேறொரு விசாரணைக்காரனையும் நியமித்தல் வேண்டும்.

---

4. போர்க்களத்தில் ஒருவரையொருவா வென்றிகொள்ள விரும்பி எதிர்ககுங்காலைப் புறந்தராமற் சண்டை முகத்திற சாவோன் வீரசுவர்க்கம் புகுவான்.

ஓர் ஆயுதத்தை வேறேயோராயுதமாகக் காட்டியாவது, கர்ணிகாரபாணம் (சல்லடைபோன்று மேற்புறத்தில் நெருக்கமான முட்

களுள்ளதாயிருப்பது) நுனியில் விடந்தடவியபாணம் நெருப்பில் காய்ச்சியபாணம் என்னும் இவைகளைப் பகைஞர்மேல் ஏவிக் கொலலுதல் கூடாது.

தேரினின்றிழிந்து தரைமீது நிற்பவன் பேடி கைகூப்பிக் கும்பிட்டவன் தலைமயிரை அவிழ்த்துக்கொண்டு நிற்கின்றவன் அபயமென்றிரந்தவன் என்ற இவர்களைக்கோறலாகாது.

ஆயுதமொடிந்தவன் பிள்ளைமுதலானவரிறந்ததனால் அல்லலுற்றிருக்கின்றவன் என்னப்பட்ட இவர்களைப் பெரியோர் தருமநினைந்து அடிக்கலாகாது.

போரில் முதுகுகாட்டி ஓடிச சத்துருவால் கொல்லப்படுகிற போர்வீரன் தனக்குச சம்பளமளித்த யஜமானன்பாவத்தை யேற்றுக்கொள்ளுகிறான்.

மேலும, அவ்வாறு புறங்கொடுத்த வீரன் பரலோகம் பெற வேண்டிச செய்திருக்கும் புண்ணியம் அவன் எஜமானனைச் சேருகின்றது.

குருக்ஷேத்திரம் மசசதேயம் பாஞ்சால தேசம சூரசேன தேசம் என்ற இத்தேசத்தவர்களையாவது, வேறு பலமுள்ளவர்களையாவது, ஆகிருதியில் உயர்ந்தவர்களையாவது, தூலதேகத்தினரன்றிச் சிறந்த உருவுள்ளவர்களையாவது சேனைக்கு முற்பட வைத்துககொண்டு போர் தொடுத்தல் வேண்டும்.

வெற்றியும் தோல்வியும இருதிறத்துக்கும் பொதுவாகலான், பிற வுபாயங்களாற் காரியங் கைகூடுமாயின் தண்டோபாயமாகிய சண்டை நீக்கற்பாலதே.

---

5. வணிகர்களிடத்தில், அவர்களிடத்துள்ள விலைப்பொருள்களின் கொள்முதல், அவைகளைக் கொண்டுவந்த செலவு, அவர்களின் சரீர முயற்சி, அவர்களுக்குக் கிடைக்கின்ற மொத்த லாப முதலியவற்றையெல்லாம் ஆராய்ந்தறிந்து தீர்வை வாங்கவேண்டும்.

அரசனால் வாங்கப்படுகின்ற தீர்வை அரசனுக்கும் குடிகளுக்கும் நன்மை பயக்கததக்கதாய் இருக்கவேண்டும்.

உதிரம் பால் தேன் இம்மூன்றையும் முறையே அட்டை கன்று வண்டு இவை மூன்றும் ஒருங்கே கொள்ளாது, சிறுகச் சிறுகப்பெறுகின்றன. அங்ஙனமே அரசனும் தனக்குக் குடிகள் தரவேண்டிய இறைப்பணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக வாங்கிக் கொள்ளுவான்.

எப்படியெனில் பொருள், பசு இவைகளால் வரும் இலாபத்தில் ஐம்பதிலொன்று இறுக்கவேண்டியது, தானியத்திற்கு அந்தந்த நிலத்தின் குணாகுணங்களுக்கேற்ப எட்டிலொன்று, ஆறிலொன்று அல்லது பன்னிரண்டிலொன்றுமாக வரிவாங்குக.

மரம் கொடி மாமிசம் தேன் நெய் வாசனைத் திரவியம் இரசம் புட்பம கிழங்கு பழம் இரத்தினங்கள் என்னும் இவைகளின் ஊதியத்தில் ஆறிலொருபாகம் அரசன் இறை கொள்ளல் வேண்டும்.

வறியவனாயினும் அரசன் வேதமோதிய வேதியச் சிரேட்டனிடம் ஒருபொழுதும் தீர்வை பெறலாகாது. அவ்வந்தணனும் பசியால் அரசனுடைய நாட்டில் வருந்தலாகாது. வேந்தர்களால காக்கப்பட்ட மறையோர் அந்நாட்டின்கண் இருந்து நிகழ்த்துகின்ற அறச்செயல்களால் அவ்வேந்தர்களுக்கு ஆயுள் பொருள் தேசம் முதலிய மேன்மேலும் பெருகி வளருகின்றன.

மிட்டாய் விற்கின்றவர் சிற்பவேலைக்காரர் கொல் வேலைக்காரர் மூட்டை சுமபபோர் என்ற இவர்களிடத்தில மாதம் ஒரு நாள் வேலை வாங்கிக் கொள்ளவேண்டியது.

குடிகளிடத்து மிகுந்த தயவினுல் இவ்விதமான தீர்வை கூட வாங்கானாயின், அரசன் துன்பமடைவான். அதிகமான தீர்வை வாங்கினாலும் குடிகள் துன்பமடைவார்கள். ஆதலால இருவருக்குந் தீங்கின்றிக் கிரமமாய் வரிவாங்கவேண்டியது.

---

6. வழக்குகளைத் தீர்த்துவைக்க எண்ணங்கொண்ட இறைவன் மந்திராலோசனை தெரிந்த அமைச்சரோடும் அந்தணரோடும் நியாய விசாரணைத்தலத்துக்குச் செல்லவேண்டியது.

அச்சபையில் வணக்கமுள்ள வேடத்தையே அணிந்து கொண்டவனாய், உட்கார்ந்தாவது, சொற்பகாரியமாக விருந்தால்

நின்றுகொண்டாவது, வலக்கையைத்தூக்கிக்கொண்டு வழக்காளி களின் வழக்கை விசாரிக்கவேண்டும்.

பதினெட்டு விதங்களாலும் கொண்டுவரப்பட்டிருக்கின்ற வழக்கைச, சாத்திரவழி உலகவனுபவம் சாட்சியங்கள முதலிய காரணங்களைக்கொண்டு நாடோறும தனித்தனியாய் நன்கு விசாரிக்கவேண்டும்.

மேற்கூறிய பதினெட்டுவித வழக்குகளாவன, கடன் கொள்ளுதல், அடைக்கலமாக வைத்தபொருள், உடையவனலலாதவன் விற்றல், கூட்டுக்கூடி லாபம் சம்பாதித்தல், தானப்பொருளைக் கொடாமை, சம்பளங் கொடாமை, கட்டுபபாட்டை மீறுதல், ஒரு பொருளை விற்று அலலது வாங்கிப் பின்பு சந்தேகித்தல், மாட்டை உடையவனுக்கும் மேய்பபவனுக்கும் வரும் வழக்கு, எல்லைத்தகரார், அடித்தல், திட்டல, திருடுதல், பலவந்தச் செய்கை, ஒருவன் பெண்டிரை அபகரித்தல, மாதராடவர்தருமம், விபாகம், சூதாடல் என்னும் இவைகளே வழககுகட்கெல்லாம் மூலமாம்.

---

7. பொருளில சம்பந்த முடையோர் நடபாளர் வேலைகாரர்கள் பகைஞர் பிரசித்தி பெற்ற குற்றமுள்ளோர் வியாதிகாரர் கள், பஞசமகாபாதகர் என்ற இவர்கள் சாக்ஷிகளாகக் கோரத் தகார்.

சாட்சிக்காராகள் தங்கள் கண்களால் காணப்பட்டதையும் காதிறை் கேடகப்பட்டதையும் பொய்யில்லாமல் உண்மையாயுரைப்பாராயின் தருமார்த்தங்களால் குறைவுபடார்.

மேற்கூறியவாறன்றித் தான் பார்த்தும் கேட்டுமிராத விஷயததைப் புகலுவோன் இறந்த பின்னர்ச் சுவர்க்கம் புகாது எரி நரகெய்துவான்.

மெய்மையைக்கூறினல், சான்றினன் பரிசுத்தனுவதுமன்றி, அவனது தருமந் தழைக்கும். ஆகையால சகல வருணத்தார் விஷயத்திலும் சாக்ஷியஞ் சொல்வோர் சத்தியமே சொல்லவேண்டியது.

மனிதர்களுக்கெல்லாம் அவ்வவர் அந்தராத்மாவே சான்றாக வும், கதியாகவுமிருக்கிறது. ஆனபடியினால் எல்லாருக்கும் மேலா னசாக்ஷியாகிய அவ்வந்தராத்மாவைப், நீ பொய்ச்சான்றுரைத்து அவமதிக்காதே.

பாபஞ்செய்கிறவர்கள் தாங்கள் பாபஞ் செய்வதை ஒருவ ருங்காணவில்லையென்று எண்ணுகிறார்கள். அவ்வாறு எண்ணு வது அறியாமை. தேவர்களும் அப்பாபிகளின் அந்தரான்மாவும் காண்கிறார்களே.

மன்றிற் பொய்ச்சான்று புகல்கிறவன், மித்திரத் துரோகம், பிரமகத்தி, ஸ்திரீகத்தி, சிசுகத்தி, செய்ந்நன்றிகோறல் முதலிய பாபங்களை ஏற்றுக்கொள்ளுகிறான்.

இதுவுமன்றிப், பொய்ச்சாக்ஷியஞ் சொல்வோன், உண்ண உண வும் உடுக்க உடையுமின்றி மொட்டையாகிக், குருடனாய்ப் பசிதா கத்தால் வருந்தித் தன்னெதிரிகளின் இல்லத்தில் இரக்கப் புகு வான்.

எவன் சொற்ப லாபம் பெறக்கருதி நீதிசபையில் தான் கண் ணினால் காணாத்தைப் பொய்யாக்ச் சொல்லுகிறானோ, அவன் இறைச்சியாசையினால் மீன்களை முள்ளுடன் உண்கின்றவனைப் போலத் துன்பத்துழலவான்.

எவன் சாக்ஷியஞ் சொல்லுகையில், எல்லாமுணர்ந்த அவன் அந்தரான்மா நடுக்கமுறவில்லையோ, அவனைவிட ஒருவனையும் இவ்வுலகில மேலாகத் தேவர்கள் மதிப்பதில்லை.

---

8. சாக்ஷிகளில்லாதிருந்தால் வாதி பிரதிவாதிகளின் உண் மையை அறியாத நியாயாதிபதி சத்தியத்தினாலாவது அதனைத் தெளியவேண்டும்.

சத்தியம் பண்ணுகிறவனை மழுவையெடுக்கச் செய்யவேண் டியது; தண்ணீரில் அமிழ்த்த வேண்டியது; அல்லது பிள்ளை பெண்டாட்டி தலையிலடிக்கவாவது சொல்லவேண்டியது.

மழுவெடுத்தவன் கைவேகாமலும், ஜலத்தில் ஆழ்ந்தவன் மித வாமலும், பெண்டிர் பிள்ளை தலையிலடித்தவன் உடனே துன்ப

மடையாமலும் இருந்தால் அவர்களைக் குற்றமற்றவர்களென்று தெளியவேண்டும்.

---

9. ஒருவனிடமிருந்து தப்பி அரசனிடமகப்பட்ட பொருளை அவ்வரசன் மூன்றுவருடம் வைத்துக்காத்து, உரியவன் வந்து பெருனாயின், தானே எடுத்துக்கொளளலாம்.

எவனாவது அப்பொருளைத் தன்னதென்றால், அப்பொருளினது உருவம், படிவம், தொகை, தப்பிவிட்டவிடம், முதலானவைகளைக குறித்துத் தர்க்கித்துக் கேட்கையில், சரியான உத்தரம கொடுப்பானாயின், அப்பொருளை அவனதென்று தேர்ந்து அவனிடம் கொடுக்கவேண்டியது. அவ்வாறு சரியான உத்தரம் சொல்லாவிட்டால் அவனைப் பொய்யனென்று எண்ணி அவனுக்கு அப்பொருளினது தொகைககுசசரியான தண்டம் விதிக்கவேண்டும.

அத தப்பிப்போன பொருளைக் காப்பாற்றிவைத்திருந்ததற்காக, அப்பொருளில் ஆறிலொன்று, பத்திலொன்று, அல்லது பன்னிரண்டிலொன்றாவது அப்பொருளுக்கு உடையவனுடைய குணகுணங்களுக்குத் தக்கவாறு பெரியோர்களின தருமத்தை நினைந்து, எடுத்துக்கொண்டு மற்றதை உடையவனுக்குக் கொடுத்துவிடவேண்டியது.

ஒருவனிடததினின்று தப்பிபபோன பொருளை அரசனுடைய மனிதர்கள கண்டெடுத்தால் அதைத் தன் காவலில் வைத்துக் காக்கவேண்டியது. அதைக் காவற்காராகள் யாராவது திருடினால் அவர்களை யானையின் காலால் இடறுவிக்க வேண்டியது.

---

10. எவனாவது புதையல்கண்டு தோண்டியெடுத்துத் தன்னதென நிரூபித்தால், அதிலும் ஆறிலொன்றாவது பன்னிரண்டிலொன்றாவது அரசன் எடுத்துக்கொண்டு, மற்றதை அவனுக்குக் கொடுத்துவிடவேண்டியது.

தன்னுடையதல்லாத புதையலைத் தன்னுடையதென்று பொய்யாகச சாதித்தால், அவனுக்கு அப்புதையற் பொருளில் பதினாறிலொருபங்கு அல்லது எட்டிலொரு பங்கு தண்டம் விதிக்கவேண்டியது.

---

11. சூதாடுவோன், கூத்தாடுவோன், பாடகன், துட்டநடையுள்ளோன், வேதம் ஸ்மிருதி சாத்திரங்களாகிய இவற்றை நிந்திப்போன், விரதமுதலிய அனுட்டானமில்லாதவன், ஆபத்தில்லாதகாலத்தும் தனக்குரிய சாதிமதவொழுக்கந் துறந்து அந்நிய சாதி மதவொழுக்கத்தைத் தழுவுவோன், குடிகாரன் என்னும் இவர்களை அரசன் ஊரைவிட்டோட்டல தகுதி.

மரண தண்டனையடையத் தகாதவனை அத் தண்டனைக்குட்படுத்தினால் எவ்வளவு பாபம் அரசனுக்கு நேருமோ அத்தன்மையான பாபம் கொலைத்தீர்ப்புக்குரியவனை விடுவதனாலும் அரசனைச சாரும். தண்டநீதியிற் கண்டபடி கண்டித்தால தருமமே உண்டாகும்.

விதைக்கு உபயோகப்படக்கூடாத நெல் முதலிய தானியங்களை நன்றாய் முளைக்கத்தக்க விதையென்று விற்கின்றவனையும், நன்றாயுள்ள விதையில் தானியத்தைக் கலந்து விற்கின்றவனையும், எல்லையறியுமாறு ஏற்படுத்தியிருக்கிற அடையாளங்களைக் கெடுக்கின்றவனையும், காது முதலிய உறுப்புக்களை அரிந்து விகாரப்படுத்திக் கொலைசெய்வதே தண்டனையாகும்.

நிறை குறைவாயும், உரைகுறைவாயும், மாற்றுயர்ந்த பொன்னோடு மட்டப் பொன்னைக் கலந்தும், மாறுபாடாய் விற்கின்ற பொற்கொல்லன் எவ்வகைத் திருடரினும் மிக்க பாவியாதலின், அவனியற்றிய குற்றத்துக்குத் தக்கவாறு அவனைக்கொஞ்சமாவது, முழுமையுமாவது கண்டங்கண்டமாக அவனை அரசன் வெட்ட வேண்டியது.

---

## சிலப்பதிகாரக் கதைச்சுருக்கம்.

---

### புகார் காண்டம்.

சோழவளநாட்டிற், காவிரிநதி கடலொடு கலக்கும் சங்கமுகமென்னுந் துறையையுடையதும், சோழர்களுடைய பழைய இராசதானியாயுள்ளதும், பெரியோர்களாற் சிறப்பித்துப் பாராட்டி மிகப்புகழப்படுவதுமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில், சோழன் கரிகாலன் அரசாட்சிசெய்துவருகையில், இப்பர் கவிப்பர் பெருங்

குடியரென்னும் மூவகை வணிகருட் பெருங்குடியர் குலத்திலுதித் தோனாகிய மாசாத்துவானென்பான், தன்மகன் கோவலனுக்கு அந்நகரில் அம்மரபிலுதித்த மாநாய்கன் மகள் கண்ணகியை மிக்க சிறப்புடன் மணம்புரிவிக்கக், கோவலன் கண்ணகிபால் மிகவும் அன்புவைத்து நலம்பாராட்டி இன்புற்றுத் தருக்கி மகிழ்ந்து நடக்கு நாட்களில், ஒருநாள் அக்கோவலன்றாயாகிய பெருமனைக் கிழத்தியென்பவள், கோவலனும் கண்ணகியும் இல்வாழ்க்கையைச் செவ்விதாக நடத்திக் கைதேர்ந்து உயர்ச்சிபெற்றுவிளங்குதலைக் காணவேண்டி, வேறொரு மாளிகையில் இல்லறம்நடத்துதற்கு வேண்டும் பொருள்களை நிரப்பி வேலைசெய்பவர்களையும் நியோகித்து அவ்விருவரையும் அதிலிருத்த, அவர்கள் மனவொருமையோடு அதிலிருந்து, அறவோர்க்களித்தல் அந்தணரோம்பல் துறவோர்க்கெதிர்தல் முதலியவற்றைச் செய்து இல்வாழ்க்கையை ஒழுங்காக நடத்திவருவாராயினர். இவ்வாறு சிலவருடங் கழிந்தன.

இப்படியிருக்கையில், கோவலன், மிக்க அழகுடையவளும் ஆடல் பாடல்முதலியவற்றில் மிகத்தேர்ச்சி பெற்றவளுமாகிய மாதவி யென்னும் நாடகக்கணிகையை விரும்பித் தன்பாலுள்ள பலவகைப்பொருள்களையும் நாள்தோறுங் கொடுத்து அவளோடு இடைவிடாது மகிழ்வானாயினன். கண்ணகி பிரிவாற்றாது வருந்தி அவ்வருத்தத்தைச் சற்றும் வெளிப்படுத்தாமல் அவன்பாற் சிறிதேனும் வெறுப்பின்றி இல்லறவொழுக்கத்தை வழுவாது நடத்திவந்தாள்; அக்காலத்திலே, வழக்கப்படி அந்நகரத்தில இந்திரனுக்குத் திருவிழா நடத்தப்பட்டது. அதன் முடிவில் அந்நகரத்தார் தத்தம் பரிவாரங்களோடு கடலாடுதற்குச் சென்றார்கள். கோவலனும் மாதவியுடன் கடற்கரையை அடைந்து ஓரிடத்திலிருந்து அவள்கையிலிருந்த வீணையை வாங்கிப் பலவகைப்பட்ட வரிப்பாட்டுகளைப் பாடிக்கொண்டு அவ்வீணையை வாசித்தான். அவன் பாடிய பாட்டுக்கள் பலவகைப்பட்ட அகப்பொருட் சுவையைத் தழுவியிருந்தமையின், மாதவி 'இவன் வேறு மகளிர்மால் விருப்புடையன்' என்றெண்ணிப் புலந்து அவன்கையிலுள்ள வீணையை வாங்கித், தான் வேறுகுறிப்பில்லாதவளாக இருப்பினும்,

அவன் வேறுகுறிப்புள்ளவனாகத் தனக்குத் தோற்றினமையின், தானும் வேறு குறிப்புடையாள்போலவே அகப்பொருட் சுவையைத் தழுவிய பலவகைப்பட்ட வரிப்பாட்டுக்களைப் பாடிக்கொண்டு அவ்வீணையை வாசித்தாள். அதனைக்கேட்ட கோவலன், வேறொருவர்மேல் மனம்வைத்து இவள் பாடினாளென்றெண்ணி, ஊழ்வினையின் முயற்சியால் வெறுப்புற்று, அவளோடு அளவளாவாமல் தன்வீட்டையடைந்து, தேவந்தியென்னும் பார்ப்பனத்தோழியோடு சல்லாபஞ்செய்துகொண்டிருந்த கண்ணகியைக் கண்டு, அவளுடன் பள்ளியறையிற் புகுந்து அவள் மேனிவாட்டத்தையும் மனவருத்தத்தையுந் தெரிந்து, 'பொய்யை மெய்யாகக் காட்டியொழுகும் பரத்தையர் சகவாசத்தால் முன்னோர் தேடிவைத்த பொருட் குவியல்களையெல்லாம் தொலைத்து வறுமையடைந்தேன்; அஃது எனக்கு மிகவும் நாணத்தைத் தருகின்றது' என்று சொன்னான். கண்ணகி, மாதவிக்குக் கொடுத்தற்குப் பொருளில்லாமையால் தளர்ந்து சொன்னானென்று கருதி, 'அடியேனிடத்து இரண்டு சிலம்புள்ளன; அவற்றைக் கைக்கொண்டருளக' என்று சொன்னாள். அவன் 'மதுரையையடைந்து இச்சிலம்பை வாணிகமுதலாகக்கொண்டு வியாபாரஞ்செய்து மிக்கபொருள்தேடுதற்கு எண்ணினேன்; நீயும் வரல்வேண்டும்' என்றான். அவளும் சம்மதிக்க, கோவலன் அன்றிரவின் கடையாமத்திற் கண்ணகியை அழைத்துக்கொண்டு ஒருவருமறியாதபடி புறப்பட்டுக் காவிரியின் வடகரைவழியாக மேற்கே சென்று ஒரு பூஞ்சோலையை அடைந்து, அதில் தவஞ்செய்துகொண்டிருந்த ஆருகத சமயத் தவமுதியோளாகிய கவுந்தியைக் கண்டு வணங்கி, 'மதுரையிலுள்ள பெரியோர்கள்பால் அறநூற்கேள்விகளைக் கேட்டற்கு உடன் வருவேன்' என்று சொல்லிய அவளோடும் வழிக்கொண்டு அரங்கமடைந்து, அங்குவந்த சாரணர்களைத் தரிசித்து, ஓடமேறிக் காவிரியின் தென்கரைசேர்ந்து ஒருபொழிலிலிருந்தான். அப்பொழுது அங்குவந்து கண்ணகியையும் கோவலனையும் அவமதித்துப் பேசிய ஒரு பரத்தையையும் ஒரு தூர்த்தனையும் கவுந்தி நரிவடிவங்கொள்ளும்படி சபித்து, அவர்கள் அவ்வாறுனதை அறிந்து இரங்கிய கோவலன் கண்ணகி இவர்கள் வேண்டு

கோளால் அவர்களுக்கு அவ்வடிவு ஒருவருடத்தில் நீங்கும்படி சாபவிடை செய்தாள். பின்பு மூவரும் உறையூரை அடைந்தார்கள்.

### மதுரைக் காண்டம்.

அடைந்தவர்கள் அன்று அந்நகரிற்றங்கி, மறுநாட் காலையிற் புறப்பட்டுச், சிறிது தூரஞ்சென்று, ஓரிடத்திருந்து இளைப்பாறி, அங்கு வந்த ஓரந்தணனால வழி தெரிந்து கொண்டு அப்பாற்சென்றார்கள். செல்லும்பொழுது ஒரு நாட் காலையிற் கோவலன் கவுந்தியையும் கண்ணகியையும் ஓரிடத்தில் வைத்துவிட்டுக் காலைக் கடன் கழித்தற்பொருட்டு ஒரு பொய்கையை அடைந்து நிற்கையில், தன் பிரிவாற்றாது வருந்திய மாதவியால் அனுப்பப் பட்டு அவளோலையுடன் காவிரிப்பூம் பட்டினத்தினின்றும் அங்கு வந்த கௌசிகனென்னும் அந்தணனைக்கண்டு, தன் பிரிவால் தன் தந்தை தாய் முதலியோர்களும் மாதவியும் படுகிற வருத்தங்களை அவனால் தெரிந்து மிக வருத்த முற்றுத், தான் புறப்பட்டதற்குக் காரணத்தையும் தன் வணக்கத்தையும் தன்னுடைய தந்தைக்குச் சொலலிப் பாதுகாத்துக் கொண்டிருக்கும்படி அவனை அனுப்பி விட்டுக், கவுந்தியையும் கண்ணகியையுமடைந்து அவர்களுடன் புறப்பட்டு, இடையிற் சந்தித்த பாணர்களுடன் அளவாளாவி, அவர்களால் வழியினளவு தெரிந்துசொண்டுபோய, வையை யாற்றை அடைந்து, அதனைத் தொழுது, புணை ஏறி அக்கரைசென்று, மதுரையின் மதிற்புறத்ததாகிய முனிவர் இருக்கையில் தங்கினான்.

மற்றைநாட் காலையில் எழுந்து, கவுந்தியை வணங்கித் தநக ளுக்கு முன்பு நேர்ந்த துன்பங்களைச சொல்லி வருந்திப், பின்பு அவள் தேற்றத் தேறிக், கண்ணகியை அவள்பால வைத்துவிட்டுத், தான் வாணிகஞ் செய்தற்குரிய இடமறிதற்பொருட்டு மதுரா நகரத்தின் உள்ளே சென்று, அதன் வளங்களையெல்லாங் கண்டு, மீண்டு கவுந்தியை அடைந்து, அந்நகர்ச சிறப்பு முதலியவற்றைச் சொல்லிப், பின்பு அங்கே வந்த தனது நட்பாளனாகிய மாடலனென்னும் அந்தணனோடு சலலாபஞ் செய்துகொண்டிருந்தான். அப்பொழுது, கவுந்தி அங்குவந்த இடைச்சியர் தலைவியாகிய

மாதரியைக் கண்டு அவளது நல்லொழுக்கத்தை நோக்கி, 'இவளிடத்திற் கண்ணகியை அடைக்கலமாகக் கொடுக்கலாம்' என்று நிச்சயித்து, அவளை அழைத்துக், கண்ணகியின் கற்பு மேம்பாட்டையும் அவள் மென்மைத் தன்மையையும் உயர்ந்தோர்களாற் கொடுக்கப்படும் அடைக்கலப் பொருளைப் பாதுகாத்தோர் அடைந்த பயனையும் அவட்கு விளங்கச் சொல்லி, கண்ணகியை அவளிடம் ஒப்பிக்க, அவள் மகிழ்ச்சியுடன் ஏற்று விடைபெற்றுக், கண்ணகியைக் கோவலனுடன் அழைத்துக்கொண்டு ஆயர்பாடியிலிருக்கும் தன் வீட்டை அடைந்து, அவ்விருவரையும் புதிய மனை ஒன்றில் அடைவித்து மிக உபசரித்துத், தன் மகள் ஐயை என்பவளைக் கண்ணகிக்குத் துணையாக வைத்துச், சமைத்தற்குரிய பொருள்கள் பலவற்றையும் கொணர்ந்து கொடுப்பக், கண்ணகி அவற்றைச் செவ்விதாகச் சமைத்து முறைப்படி உண்பிக்கக், கோவலன் இனிதாக உண்டு கண்ணகியை அருகழைத்து 'நீ இந்தப் பாலை வழியில் வந்ததை எண்ணி நம் தாய்தந்தையர் என்ன துன்பமுற்றார்களோ? மிக்க செல்வத்தை அனுபவித்துக் கொண்டிருந்த நாம் இந்தக் கொடிய துன்பத்தை அனுபவித்தது கனவோ? நனவாயின், இதற்குக் காரணமாக முன்பு செய்த தீவினை யாதோ? யான் ஒன்றும் அறிந்திலேன். வீணரோடும் விடரோடுங் கூடிப் பிறரைப் புறங்கூறுங் கூட்டத்திற் புகுந்து நல்ல ஒழுக்கத்தைத் துறந்த மகா பாவியாகிய எனக்கு இனித் தீக்கதியன்றி நற்கதியுண்டாமோ? இருமுது குரவர்க்கும் ஏவல் செய்தலை ஒழிந்தேன்; உனக்கும் துன்பஞ் செய்தேன்; இக் கூடா ஒழுக்கம் தீதென்று சிறிதுமெண்ணிலேன்' என்று பலவாறிரங்கிச், 'சுற்ற முதலியவற்றை நீங்கி, நாண முதலியவற்றையும் கற்பையும் பெருந்துணையாகக் கொண்டு, என்னோடு வந்து எனது தனிமையைத் தீர்த்த "பொன்னே கொடியே புனைபூங் கோதாய், நாணின் பாவாய் நீணில விளக்கே, கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வீ!" இனி, உன்னுடைய சிலம்புகளுள் ஒன்றைக் கொண்டுபோய் விரைவில் விற்று வருவேன்; வருமளவும் தனிமையால் வருந்துதலை ஒழிவாயாக' என்று சொல்லி, ஒரு சிலம்பை வாங்கிக் கொண்டு, அவள் தனியே இருத்தலைக் கண்டு மனம் வெதும்

புதலாலே பெருகிய தன் கண்ணீரை அவள் கண்டால் வருந்துவாள் என்று மறைத்தவனாகி, அவ்விடத்தை நீங்கிப் பிரிதற்குத் துணிவில்லாத மனமுடையவனாய்ச் சென்று, எதிர்ப்பட்ட துர் நிமித்தங்களை அறியாமற் கடைத்தெருவிற் புகுந்து, எதிரே நூறு பொற்கொல்லர் பின்னேவர முன் வந்த ஒரு பொற்கொல்லனைக் கண்டு, இவன் அரசனாற் பெயர் பெற்றோன் என்று எண்ணி அவனருகிற்சென்று, 'அரசன்தேவி அணிதற்குத் தகுதியான சிலம்பினை விலை மதிக்கும் வன்மையுடையாயோ' என்று வினவி, அவன் மிக்க பணிவுடன் தான் வல்லனாதலைக் குறிப்பிக்கக், கோவலன் தான் கொணர்ந்த சிலம்பைக் காட்டினன். அவன் பார்த்து, 'இதனை அரசனுக்கு யான் தெரிவித்து வருமளவும் என் வீட்டிற்கு அயலதாகிய இவ்விடத்தே நீரிரும்' என்று ஓரிடத்தைக் காட்டிச் செல்லக், கோவலன் அவ்விடத்தே இருந்தான். சென்ற பொற்கொல்லன் முன்பு அரசன் மனைவியின் சிலம்புள் ஒன்றை வஞ்சித்துத் திருடிக்கொண்டவனாதலால், யான் முன்பு வஞ்சித்துக் கவர்ந்துகொண்ட சிலம்பு என்னிடத்தேயுள்ளதென்று இராசாவுக்கு வெளிப்படுவதற்கு முன்னமே அதனோடு ஒத்த சிலம்பைக் கொணர்ந்த இப்புதியவனால் என்மீதுண்டாகும் ஐயத்தைப்போக்கலாம்' என்று தன்னுள்ளே நிச்சயித்துக்கொண்டு, தன் மனைவியின் ஊடல் தீர்தற்பொருட்டுத் தன்கோயிலை நீங்கி அவள் கோயிலை நோக்கிக் காமபரவசனாய்ச் செல்லும் பாண்டியன் **நெடுஞ்செழியனைக்** கண்டு வணங்கித் துதித்துக், 'கன்னக்கோல் முதலியன இல்லாமலே கோயிற்கண்ணிருந்த சிலம்பைத் திருடியவன் அடியேனுடைய சிறியகுடிலில் அச்சிலம்போடு வந்திருக்கிறான்' என்று சொல்லப், பாண்டியன் உடனே காவலாளர்களை யழைத்து, 'என் மனைவியின் சிலம்பு இவன் கூறியகள்வன் கையிடத்ததாயிருப்பின், அவனைக் கொல்லுதற்கு அச்சிலம்போடு கொண்டுவருக' என்று சொல்லக்கருதியவன், வினைபலிக்குங் காலமாதலால் மயங்கி, 'அவனைக்கொன்று அச்சிலம்பைக்கொண்டு வாரும்' என்று கட்டளையிட்டான். பொற்கொல்லன் தன் எண்ணம் பலித்ததென்று தன்னுள்ளே மகிழ்ந்து அக்காவலாளருடன் சென்று கோவலனை யடைந்து அவனைநோக்கி, 'இவர்கள் அரசன் கட்டளையாற்

சிலமபு காணவந்தவர்கள்' என்று சொல்லிக் கோவலனுடைய
முகக்குறி முதலியவற்றைக் கண்டு இவன் கள்வனல்லனென்று
சொல்லும காவலாளர்களை இகழ்ந்துரைத்து அவனைக கள்வ
னென்று வறபுறுத்துதறகுக் களவு நூலிலுள்ள ஏதுக்களையெல்
லாம் அவாகளுக் கெடுததுக்காட்டினன்; அப்பொழுது அவர்க
ளுள அறிவின்மையினுற் கொலையஞ்சாதொருவன் விரைந்து
சென்று கோவலனைத் தன கைவாளால வெட்டி வீழ்த்தினுன்.

இப்பாற கண்ணகியிருந்த இடைசசேரியில் பலவகையான
உறபாதஙகளுண்டாயின; அதுகண்ட மாதரிமுதலியோரால உற்
பாதசாந்தியாகத் திருமாலைக்குறித்துக குரவைககூதது ஆடப்பட
டது; அதன முடிவில மாதரி நீராடுதறபொருட்டு வையையாற
றிறகுச சென்றுள்; அபபொழுது, சிலமபு திருடியவனென்று
துணிந்து கோவலனை அரசனேவலாளர் கொன்ற செய்தியை
மதுரையிலிருந்துவந்த ஒருத்தி சொலலககேட்டுக் கண்ணகி பதை
பதைத்து மூர்ச்சித்துப பலவாறு புலமபித் தானும் அவனுட
னிறத்தற்குத துணிந்து இடைசசியா மததியில நின்று சூரியனை
நோக்கிக், 'கதிரசசெலவனே! நீயறிய என்கணவன் கள்வனே'
என்றுள்; அவன், 'நின்கணவன கள்வனல்லன்; அவனைக் கள்வ
னென்ற இவ்வூரை விரைவில தீயுண்ணும' என்று அசரீரியாகக்
கூறினன். அதைககேட்ட கண்ணகி மிகுந்த கோபத்தோடு தன்
னிடமிருந்த மறறொரு சிலமபுடனே புறப்பட்டுக கண்டாா நடுங்
கும்படி வீதிவழியே சென்று ஆஙகுள்ள மகளிரை நோககிப் பல
வாறு புலம்பி, 'என் கணவனை முன்போலக கண்டு அவன சொல்
லும் நலவுரையைக் கேடபேன்; அஙஙனங்கேனுயின், என்னை
இகழுமின்' என்று சபதஞ்செயதுகொண்டு சென்று வெட்டுண்டு
கிடந்த கோவலனைச சிலா காட்டககண்டு அளவிலலாத துயரத்தை
அடைநது அவனை முன்னிலைபபடுததிப் பலவிதமாகப பிரலா
பித்து அவனுடம்பைத தழுவிககொள்ள, அவ்வளவில அவன்
உயிர்பெற்றெழுந்து நின்று மதிபோன்ற முகம்வாடியதே என்று
சொலலிக் கையாலே அவள கண்ணீரை மாறற, அவள அவனு
டைய பாதங்களை இரண்டு கையாலும் பூண்டுகொண்டு பணிந்
தாள்; உடனே அவன் நீ இங்கிருககவென்று சொல்லி அவ்

வுடம்பையொழித்துவிட்டுச சுவர்க்கம் புகுதற்குத் தேவர்களோடு கூடிச்சென்றான்.

இஃது இங்கே இப்படியிருக்கப் பாண்டியன் நெடுஞ்செழியன் மனைவி, தீக்கனாக்கள் பலவற்றைக்கண்டு சென்று அவற்றைத் தன் கணவனோடு சொல்லிக்கொண்டிருந்தாள்; அப்பொழுது கண்ணகி கோபந்தணியாதவளாய் அரண்மனை வாயிலை அடைந்து வாயிலோனால் தன் வரவை அரசனுக்கறிவித்து அவனனுமதிப்படி அவன்முன் சென்று, அவன் கேட்பத் தன் ஊர் பேர் முதலியவற்றையும், ஆராயாது கோவலனைக் கொல்வித்த கொடுங்கோன்மையையும் வெகு துணிவாகசசொல்லிக் கோவலன் கள்வனல்லனென்று தெளிவித்தற் பொருட்டுத், தன் சிலம்பினுள்ளேயுள்ள பரல் மாணிக்கம் என்றாள்; அவன் தன் தேவி சிலம்பின் பரல் முததென்று சொல்லிக், கொல்லப்பட்ட கோவலனிடமிருந்து கிடைத்த சிலமபை வருவித்துவைப்பக், கண்ணகி அதை உடைத்தாள்; உடைக்கவே அதனின்றும் மாணிக்கப பரல் தெறித்தது; அது கண்டு அரசன் நடுநடுங்கி, 'இழிந்த பொற்கொல்லன் சொல்லைக் கேட்ட கொடுங்கோன்மையையுடைய நானோ அரசன்! நானோ அரசன்! ஐயோ! மிகப்புகழ் பெற்ற இந்த அருமந்த குலம் என்னால் பழி அடைந்ததே! என் ஆயுள் இன்றே அழியக்கடவது' என்று சொல்லி மிகவுந்துக்கித்து மயங்கித் தானிருந்த ஆசனத்திலவீழ்ந்து இறந்தான்; அதனை அறியாத அவன் மனைவி பாதுகாத்தருளவேண்டுமென்று கண்ணகி பாததகதில வீழ்ந்தாள்; வீழவே கண்ணகி, 'நான் பத்தினியாயிருத்தல் உண்மையாயின், இவ்வூரை அழித்துவிடுவேன் பார' என்று சபதம் செய்து தனது இடக்கொங்கையை வலக்கையால் திருகி எடுத்து அதை அந்நகரத்தின் மீதெறிந்தாள்; எறியவே, அக்கினிதேவன் பார்ப்பனக் கோலத்தோடு வந்து, 'மகா பத்தினி! உனக்குப் பிழை செய்த நாளில் இவ்வூரை எரித்துவிடும்படி முன்னமே ஓரேவல் பெற்றுளேன்; இப்பொழுது யாரை அழித்தல் வேண்டும்' என்று கேட்ப, அவள், "பார்ப்பாரறவோர பசுப்பத் தினிப்பெண்டிர், மூத்தோர் குழவியெனுமிவரைக்—கைவிட்டுத், தீத்திறத்தார் பக்கமேசேர்க" என்று சொல்ல, அப்பொழுதே அந்நகரில் அவள் சொலலிய வண்ணம்

தீப்பற்றிக்கொண்டது. உடனே அந்நகரைக் காக்கும் வருணப் பூதங்கள் நான்கும் பெயர்ந்து சென்றன; அந்நகரத்துள்ள இடங்கள் பலவும் எரியத்தொடங்கவே அவ்வெம்மையை ஆற்ருதவளாகி மதுரையின் அதிதேவதை கண்ணகிபால வந்து நின்று அவளை நோக்கி, 'யான் இந்நகரின் தெயவம்; உனக்குச் சில வற்றைச சொல்லவந்தேன்; அவற்றை நீ கேடபாயாக; இந் நகரத்து முன்பிருந்த பாண்டியர்களுள் ஒருவரேனும் சிறிதும் கொடுங்கோன்மை உடையாரலலர்; இந்நெடுஞ்செழியனும் அத்தன்மையனே; ஆயினும் இது வந்த வரலாற்றைச சொல்லுவேன்; முன்பு கலிங்க நாட்டிலுள்ள சிங்கபுரத்தரசனுகிய வசுவென்பவனும் கபிலபுரத்தரசனுகிய குமரனென்பவனும் தம்முட் பகைகொண்டு ஒருவரையொருவா வெலலக் கருதி இருந்தனர்; அப்பொழுது சிங்கபுரத்துக கடைவீதியிற் சென்று இயல்பாகப் பண்டம் விற்றுக்கொண்டிருந்த சங்கமனென்னும் வணிகனை அந்நகரத்து அரசனிடம் தொழில செய்துகொண்டிருக்கும் பரதனென்பவன் இவன் பகைவனுடைய ஒறறனென்று பிடித்து அரசனுக்குக் காட்டிக் கொலைசெயது விட்டான்; அபபொழுது அந்தச் சங்கமன் மனைவியாகிய நீலி என்பவள் மிகுந்த துயரமுறறுப் பதினன்கு நாள் பலவிடத்தும் அலைந்து பின்பு ஒரு மலையின்மேலேறிக் கணவனைச சோதறபொருட்டுத தன்னுடைய உயிரை விடுதற்கு நினைத்தவள், 'எமக்குத் துன்பஞ் செயதோர் மறுபிறப்பில் இத் துன்பத்தையே அடைவார்களாக' எனறு சாபமிட்டிறந்தாள; அப்பரதன் இக்கோவலனுகப் பிறந்தான; ஆதலால் நீங்கள் இத் துன்பமடைந்தீர்கள; நீ இன்றைதகுப பதினுலாவது தினத்தின் பகல சென்ற பின்பு உன்னுடைய கணவனைக கண்டு சேர்வை' என்று சொல்லி அவளைத தேற்றிச செலலப், பின்பு கண்ணகி மதுரையை நீஙகி வையைக் கரைவழியே மேறறிசை நோக்கிச சென்று மலை நாடடைந்து அதிலுள்ள திருசசெங்குன்றென்னும் மலைமேலேறி ஒரு வேஙகை மரததினிழலினின்று பதினுலாவது தினத்தின் பகலசென்றபின்பு அங்கே தெய்வவடிவத்தோடு வந்த கோவலனைக் கண்டு களித்து அவனுடன் விமானத்தின்மேலேறித் தேவர்கள் போற்றும்படி சுவர்ககம் அடைந்தாள்.

## வஞ்சிக் காண்டம்.

கண்ணகி இவ்வாறு கணவனோடு விமானமேறிச சுவர்க்கம் போகககண்ட வேட்டுவமகளிரும் வேடர்களும் மிகுந்த ஆச்சரியமடைந்து தமது குறிச்சியிற் கண்ணகி பொருட்டு ஒரு குரவைக் கூத்துச் செய்வித்தார்கள். பின்பு அவ்வேடர்கள், இந்த அதிசயத்தைத் தங் நாட்டு அரசனாகிய செங்குட்டுவனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று எண்ணிப் பலவகையான காணிக்கைப பொருள்களையுங் கைக்கொண்டு சென்று, மலைவளங காண்டற்குத் தனது தேவி வேண்மாளோடும் தம்பி இளங்கோவடிகளோடும் புறப்பட்டு நால்வகைத்தானையும் சூழவந்து பேராற்றங்கரையிலுள்ள மணற் குவியலில் இருக்கும் சேரன் செங்குடடுவனைக் கண்டு வணங்கிச சொன்னார்கள்; அதுகேடடு அவ்வரசன் அதிசயிக்க, அங்கு வந்திருந்த மதுரைத் தமிழாசிரியராகிய சாத்தனார், மதுரையிற் கோவலன் கொலையுண்டதையும் அஙகே கண்ணகியால் நடந்தவற்றையும் மதுராநகர்த் தெய்வம் அவளுக்கு முன்வந்து சொல்லியதையும் விரித்துச சொன்னார்; செங்குட்டுவன் பாண்டியன் இறந்ததறகிரஙகித தன் தேவியின் வேண்டுசோளால் கண்ணகியாகிய பத்தினிக் கடவுளைப் பிரதிஷ்டித்து வழிபடுதற்கெண்ணி, அவளுருவஞ் செய்தறகுச சிலை கொணர்தற்பொருடடு மந்திரிகளோடும ஆலோசித்து, முன்னம் இமயமலையினின்றும் வந்த முனிவர்கள 'ஆரிய மன்னராகிய கனகனும் விசயனும் தமிழ்நாடடரசரை இகழ்நதனா' என்று சொலலக்கேட்டவனாதலால், அவ்வரசர்களை வென்று அவாகள் முடியில அச்சிலையை ஏற்றிக்கொண்டு வருவேனெனறு சபதம்செய்து, உடனே சேனைகளுடன் புறப்பட்டு நீலகிரியை அடைந்து அங்குத் தங்கி இமயமலையினின்றும வந்த முனிவர்கள் கூறிய ஆசியைப் பெற்று அப்பாற் சென்று கங்காநதியை அடைந்து தனது நட்பரசர்களாகிய கன்னர்கள் கொணர்ந்து வைததிருந்த ஓடமேறி அக்கரை சென்று அவ்விடத்தில் தஙகி அங்கே போர்செய்தற்கு வந்த கனக விசயரையும் அவருக்குத் துணையாகவந்த உத்தரன் முதலிய அரசர்களையும் வென்று தாபதவேடமுதலியவற்றைக் கொண்டோடிய அவ்வரசர்களைப் பிடிதது அகபபடுததிக கொண்டு தன் மந்

திரியாகிய வில்லவன் கோதையையும் சேனையையும் அனுப்பி இமயமலையினின்றும் சிலை வருவித்து அதைக் கனகவிசயர் முடிமி லேற்றி விதிப்படி கங்கையில நீர்ப்படைசெய்து இப்பால்வந்து அதன் தென்கரையிற் சேனையோடுந் தங்கி அங்குக் கங்கையாடி வந்த மாடலனுற் கோவலன் வரலாறு முதலியவற்றையும் நெடுஞ் செழியனுக்குப் பின்பு இளங்கோவேந்தன் அரசாட்சி செய்து வருதலையுமறிந்து அம்மாடலனுக்குத் தன் நிறையாகிய ஐம்பது துலாம் பொன் தானஞ் செய்து தன்னுல் வெலலப்பட்ட கனக விசயரைச் சோழனுக்கும் பாண்டியனுக்கும் காட்டி வரும்படி நீலன் முதலிய ஒறறர்களை அனுப்பிவிட்டுச சேனையுடன் புறப் பட்டு இடையிலுள்ள வளங்களை எலலாம் பார்த்துக்கொண்டு வஞசி நகரமடைந்து ஆங்குள்ளவர்களோடும் அளவளாவி மகிழ் வுற்றிருந்தான். அபபடியிருக்கையில ஒருநாள், முன்பு அனுப் பப்பட்ட நீலன் முதலிய ஒற்றர்கள் வந்து, 'தோலவி அடைந்து மாறுவேடமபூண்டு சென்ற கனகவிசயர் முதலியோரைப் பிடித் துக்கொண்டு வந்ததைச சோழனும் பாண்டியனும இகழ்ந்து சொன்னுர்கள்' என்று சொலலக்கேட்டு மிகுந்த கோபங்கொண்டு, அங்கு வந்திருந்த மாடலன், 'நீ கோபந் தணிக; இளமை யாக்கை செல்வமுதலியவைகள் நிலையா; நலல பதத்தை அடைவிக்கும் யாகத்தை இனிச்செய்தல் வேண்டும்' என்று பல ஏதுக்கள் முக மாக எடுத்துச் சொல்லக்கேட்டு அக்கோபந்தணிந்து, அம்மாட லன் சொலலிய வண்ணம் யாகத்திற்குரியவறறை அமைக்கும்படி சிலரை அனுப்பி, ஆரிய அரசா முதலியோரைச சிறையினின்று நீக்கி அவர்களுக்கு வேண்டியவற்றை உபகரிக்கும்படி வில்லவன் கோதைக்குச சொல்லி ஆன்றோா பலருடன் சென்று சிறந்த கம் மியர்களாற் செய்யபபட்ட ஓராலயத்தில இமயசிலையால இயற் றப்பட்டுள்ள வடிவததிற பத்தினிக கடவுளாகிய கண்ணகியைப் பிரதிஷ்டை பண்ணி விதிப்படி நித்திய பூசை முதலியவற்றை நடத்தும்படி கட்டளையிட்டு அங்கே இருந்தான். அப்படி யிருக் கும்பொழுது, முன்னம், கோவலன் கொலையுண்டது முதலிய வற்றை மாடலனுற கேட்ட தேவந்தியும் கண்ணகியின் செவிலித் தாயும் அவளடித்தோழியும் காவிரிப்பூம்பட்டினத்தினின்று நீங்கி

மதுரையை அடைந்து அங்கே கண்ணகியைக்காணுமல் மாதரி மகள் ஐயையைக்கண்டு அவளை அழைத்துக்கொண்டு வையைக் கரைவழியே சென்று மலைநாடுபுகுந்து கண்ணகிகோயிலையடைந்து அங்கிருந்த செங்குட்டுவனைக்கண்டு தங்களை இன்னுரென்று அறிவித்துக் கண்ணகியின் பிரிவாற்றுமையால் வருந்திப் புலம்பினுர்கள்; அப்பொழுது கண்ணகி தெய்வவடிவத்தோடு வெளிப்பட்டுச் செங்குட்டுவனுக்குக் காட்சிகொடுத்து வாழ்த்திஞள். பின்பு செங்குட்டுவன் மாதவிமகளாகிய மணிமேகலையின் துறவைத் தேவந்தி சொல்லக்கேட்டு, அவள்மேல் ஆவேசித்த சாத்தனென்னுந் தெய்வத்தின் கட்டளையால் மாடலன் தன்கையிலுள்ள கமண்டல நீரை அங்கு வந்திருந்த மூன்று இளம்பெண்கள்மீது தெளிப்ப உடனே கண்ணகியைக் குறித்துப் புலம்பிய அம்மூவரையும் கண்ணகிநற்றுய் கோவலன்நற்றுய் மாதரி என்னும் இம்மூவருடைய பிறப்பினராக அறிந்து, அவர்கள் அவ்வாறு பிறத்தற்குக் காரணத்தை மாடலன் சொல்லக்கேட்டுப் பத்தினிக்கடவுளுக்கு நித்திய பூசை செய்யும்படி தேவந்திக்குச் சொல்லித் தான் அக்கடவுளை மூன்றுமுறை வலம்வந்து வணங்கி நின்முன். அப்பொழுது ஆரியமன்னரும் மாளவவேந்தரும் இலங்காபுரத்தரசனுகிய கயவாகுவும் அங்குவந்து அக்கடவுளைநோக்கி ' இசசெங்குட்டுவனைப் போல எங்களுடைய நாட்டில் யாங்கள் உனக்குசசெய்யும் பூசையில் நீ எழுந்தருளி எங்களுக்கு அருள் செய்யவேண்டும்' என்று பிரார்த்திப்ப, நீங்கள் விரும்பியபடியே வரந்தந்தேனென்று அப்பொழுது ஒரு குரல உண்டாயிற்று. அதனைக்கேட்ட செங்குட்டுவனும் மற்றையரசர்களும் மிகுந்த சந்தோஷமடைந்தார்கள். பின்பு செங்குடடுவன் மாடலனேடு யாகசாலைக்குச் சென்முன். அப்பால் இளங்கோவடிகள பத்தினிக்கடவுள் கோயிலுக்குச சென்முா. அவருக்குமுன்பு பத்தினிக்கடவுள் தேவந்திமேற்றேன்றி அவருடைய வரலாறுகளைச் சொல்லி உவப்பித்தாள்.

கோவலன் வெட்டுண்டு விழுந்தகாலந்தொடங்கிப் பாண்டிய நாட்டில் மழையில்லாது போயிற்று; வறுமையும் நோயும் அதிகரித்தன; அது தெரிந்து கொற்கைநகரத்திலிருந்த அரசனுகிய **இளஞ்செழியன்** பத்தினிக்கடவுளுக்கு ஆயிரம்பொற்கொல்லரைப்

பலியிட்டுக் களவேள்வியாற் சாந்திசெய்து விழாவெடுத்தலால், அந்நாட்டில மிகவும் மழைபெய்தது; முற்கூறிய வறுமையும் நோயும் நீங்கின. அதனைக் கேள்வியுற்றுக் கொங்குமண்டிலத் தரசரும், இலங்காபுரத்தரசனாகிய கயவாகுவும், சோழநாட்டில் உறையூரிலிருந்த அரசனாகிய பெருநற்கிள்ளியும் கண்ணகிக்குக் கோயில் கட்டுவித்து நித்தியபூசை விழாமுதலியவற்றைச்செய்து வழிபட அவா நாடுகள் மிகுந்த வளமுற்றன.

———————

# திராவிட பாஷைகள்.

இத்தேசத்துப் பாஷைகள் இரு பெருவருக்கங்களாகப் பிரிவுற்றிருக்கின்றன. அவை வடதேயத்தின் கண்ணுள்ள ஆரிய* வருக்கமும் தென்றேயத்தின் கண்ணுள்ள திராவிட வருக்கமுமாம்.

தமிழ், தெலுங்கு, மஹாராஷ்டிரம், கன்னடம், கூர்ச்சரம் என்பன பஞ்சதிராவிட மெனப்படும்.

மலேயாளமுங் குடகமுந் தமிழின் பாஷிதபேதம்.

**தமிழ்** :—தமிழ் வழங்கு நிலம வடகின்கண் வேங்கடமலேயும் தெறகின்கண் குமரியும், கிழக்கின்கண்ணும் மேற்கின் கண்ணும் கடல்களுமே எலலேயாக உடைய தென்னுடு. கி. மு. ஏழாவது நூறறுண்டில இவ்விடம் வந்ததாகச சொல்லப்படுகிற அகத்தியர் காலத்திற்கு முன் இப்பாஷைக்கு இலக்கணம் எழுதப் படடிருந்ததிலலே. “இவா தமிழ்க்குழந்தைக்குத் தந்தையார் ஆகாத போதும் அதை எடுத்துத் தாராட்டிப பாராட்டிப் பாலூட்டி வளர்த்த கைததாயா இவரே.” இவா செய்த இலக்கண நூலே முதனூலாகக் கொண்டு, இவா மாணுக்கரில ஒருவரான தொல்காப்பிய முனிவா செய்த இலககணமே இப்பாஷையில், மிகச்சிறந்தது.

தமிழ்ப் பாஷையை ஆதியில் அன்போடு பரிபாலித்தவர்கள் பாண்டியர்கள். அவர்கள், தமிழ ஆராய்சசியின் பொருட்டுத் தலேச் சங்கம் இடைசசங்கம் கடைசசங்கமென்று மூன்று சங்கங்களேத் தாபித்தார்கள். இசசங்க நூற்களில் பேர்பெற்றவை, மதுரைக் காஞ்சி முதலிய பத்துப்பாடடும், புறநானூறு கலித்தொகை முதலிய எட்டுத்தொகையும், திரிகடுகம் நான்மணிக்கடிகை சிறுபஞ்சமூலம ஏலாதி பழமொழி நாலடியார் முதலிய பதினெண் கீழ்க்கணக்குமே. கடைசசங்கம், நக்கீரா கபிலர் பரணா முதலிய நாற்பத்தொன்பது வித்வான்களால கீர்த்திபெற்றுப், பலகாலம் தழைத்தோங்கி நின்றது. பிறகு அவாகள் அகந்தைகொண்டு

---

* ஆரியவர்க்கத்தைச சேர்ந்த பாஷைகள் சிந்தி, பஞ்சாபி, ஹிந்தி, பங்காளி, ஊரியா என்பவை.

புலவர்களை அவமதிக்கத், தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர் திருக்குறள் என்னும் உத்தரவேதத்தைசசெய்து அச்சங்கத்தில் அரங்கேற்றப்போகவே, குலைதலுற்றது. அறம் பொருள் இன்ப மென்ற முப்பாலையும விரித்துக் கூறும இந்நூல் மிகச சிறந்த தென்பது

"பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுளள,
நூலெல்லாம் வள்ளுவர் செய்நூலாமோ"

என்றதனல் விளங்கும். இத்திருவள்ளுவர் காலத்தில் ஔவையா ரென்ற அவா சகோதரியார் ஆத்திசூடி கொன்றைவேந்தன் மூதுரை முதலிய நூற்களை இயற்றினர். இவர்கள் காலம் ஏறக் குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது.

இவர்கள் காலத்துக்குக் கொஞ்சம் முற்பட்டும் பலகாலம் பிற்பட்டும் சமணர்கள் மிகவும் ஆதரவுடன் தமிழை ஆதரித்து வந்தார்கள். இவர்கள் சிறுவாகள் படிக்கும் நிகண்டு நன்னூல காரிகைமுதலிய நூற்களன்றிச சிந்தாமணி, வளையாபதி குண்டல கேசிமுதலிய பெருங்காப்பியங்களையும் செய்தாாகள.

சைவசமய குரவர்கள் நால்வருள் ஒருவரான மாணிக்கவாச கர், சங்கத்தார் காலத்தில் திருவாசகம் என்ற ஒரு திவ்விய நூலை இயற்றினர். அது உருக்கமாக எழுதப்பட்டிருத்தலின், "திருவாசகத்திற்குருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார்" எனப்பழமொழியும உண்டு.

கி. பி. நான்காவது நூற்றுண்டு முதல ஒன்பதாவது நூற்றுண்டுக்குள் அப்பர், சுந்தரர், சம்பந்தர் என்ற சைவசமய குரவர் மூவா தேவாரப்பதிகங்களையும், நம்மாழ்வார் முதலிய வைஷ்ணவசமய குரவர்கள் திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களையும இயற்றித் தத்தம் சமயநெறியைப் பரவசசெய்தனர்.

இப்பால கம்பர் கச்சியப்பர் சேக்கிழார் அதிவீரராம பாண்டியன் வில்லிபுத்தூரர் பரஞ்சோதிமுனிவர் ஆரியப்பர் அரசகேசரி என்றவர்கள் முறையே இராமாயணம் கந்தப்புராணம் பெரியபுராணம் நைடதம் பாரதம் திருவிளையாடற்புராணம் பாகவதம் இரகுவம்கிசம் ஆகிய நூற்களைச் செய்தார்கள். உத்

தராமாயணம் பாடிய ஒட்டக்கூத்தரும் நளவெண்பா பாடிய புகழேந்தியும் ஒளவையென்று பெயருடைய வேறோர் வித்துவா மிசையும் கம்பர்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது. கம்பர்காலத் துக்குச சற்று முன்பின்னாக நச்சினார்க்கினியர்முதலிய பெரிய உரையாசிரியர்கள் இருந்திருத்தலவேண்டும். ஞானார்த்தம் நிறைந்த பலபாடலகளைப்பாடிய பட்டினத்துப்பிள்ளையாரும் இக் காலத்தினரென்றே துணியலாம்.

இவர்களுக்குப்பின் சந்தான குரவா என்ற நால்வர் சைவ சித்தாந்த சாத்திரங்களை இயறறினார்கள். அவற்றில் அருணந்தி சிவாசாரியாரது சிவஞான சித்தியார் மிகவும் பாராட்டப்பட்டு வருகிறதென்பது, "சிவஞான சித்திக்குமேற் சாத்திரமில்லை." "பாரிலுள்ள நூலெலலாம் பாாத்தறியச சித்தியிலே—ஓர் விருத் தப்பாதிபோதும்," என்பவைகளால் வெளியாகும். இச்சந்தான குரவர் சீடர்களில ஒருவராகிய நமசசிவாய தேசிகர் திருவாவடு துறை ஆதினத்துப பிரதமாசாரியர். இவ்வாதீனத்து ஆசாரிய ருள் ஒருவரான சாமிநாத குரவரால் இலக்கணக்கொத்தும், அவர் மாணககா சஙகர நமசசிவாய தேசிகரால் நன்னூல் விருத் தியும், இம்மடத்து மறறோர் ஆசாரியரான வேலப்ப தேசிகரால் பறியலூர்ப் புராணமுமு, அவர் மாணக்கர் சிவஞான யோகீச்சுர ரால தொல்காப்பியச சூத்திர விருத்தியும் காஞ்சிப் புராணத்தின் ஒரு பாகமும், அவர் மாணக்கரான கச்சியப்பமுனிவரால் காஞசிப் புராணத்தின பிறபாகமும் திருத்தணிகைப் புராணமும் செய் யப்பட்டுள்ளன. இக்காலத்திலேயே தருமபுராதீனத்து வைத்தி யநாத நாவலர் இலக்கணவிளக்கமென்ற ஒரு சிறந்த நூலை இயற்றி னார். இககாலத்திய மற்றைப்புலவர்களில், நன்னெறி பிரபுலிங்க லீலை முதலியவைகளின் நூலாசிரியரான சிவப்பிரகாசச்சுவாமி யும், நீதிநெறிவிளக்கம் காசிக்கலம்பகம் முதலிய செய்த குமரகுரு பர சுவாமியும், தத்துவ விஷயமான பல உருக்கமான பாட்டுகள் பாடிய தாயுமானசுவாமிகளும் சிறந்தவர்கள். காளமேகப்புலவர் படிக்காசுப் புலவர் இரட்டையர்* ஆகிய இவர்கள் வல்ல புலவர்க

* இரட்டையர் பாடிய கலம்பகம் இறந்துபோயிற்றுப்போலும்.

ளேனும தனிப்பாடலகளன்றிச சிறந்த நூல்களஏதும் இயறறிலர். பின்வரும் செய்யுள் தமிழில் சிறந்த புலவாகளிற் சிலரையும் அவர் திறனையுமுணர்த்தும.

வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ சயங்கொண்டான் விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன் கோவையுலா வநதாதிக் கொட்டக்கூத்தன்
கண்பாயகலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிககாசலாலொருவர் பகரொணுதே.

**தெலுங்கு:**—கண்ணுவா என்ற ஒரு முனிவர் இப்பாஷைககு ஆதி இலககண நூலாசிரியர் என்று சொல்வதுண்டு. இவரைப பற்றி ஒன்றும் தெளிவாய் அறியககூடவில்லை. அவர் இலக்கணமும் மறைந்துபோயிற்று. இக்காலங்களில் வழங்கிவரும் தெலுங்கு இலக்கணங்களில் முந்தியது நன்னயப்பட்டரது. அவர்காலம் கி.பி. பன்னிரண்டாவது நூற்ருண்டு. தெலுங்குப் பாரதமும் இவரையே நூலாசிரியராகக கொண்டிருககின்றது. பதினுன்காவது நூற்ருண்டிற்குப் பிற்படடுத்தான் இப்பாஷையில கிரந்தங்கள் பலகின. சுமாா இருநூறு வருஷஙகளுக்குமுன் இருந்த வேமன என்ற கவி அநேக நீதிபத்தியஙகள் செயதிருக்கிருர். தென்னுவிராமன் கதை இப்பாஷையினின்றே தமிழில் மொழிபெயர்க்கபபட்டது.

**கன்னடம்:**—முதன் முதல இப்பாஷையில கிரந்தஙகள் எழுதத்தொடஙகினவா சமணாகள் (Jains). இவாகள் சோழபாலசரிதம் முதலிய சிலசரித்திரங்களையும், பிரபோத சந்திரோதயம் முதலியதத்துவ நூற்களையும, ஜினமுனிதனயம முதலிய சமணக்கொள்கைகளை விளக்கும் சில நூற்களையும் எழுதியிருககிருர்கள. சப்தமணிதாப்பணம் என்ற இபபாஷையின் முககிய இலக்கணநூல இவர்களில ஒருவரான கேசிராஜாவாலியற்றப்பட்டது. பிறகு இலிங்கஙகடடி மதத்தோரால வசவபுராணம் பிரபுலிங்கலீலை இராஜசேகரவிலாசம்முதலிய அனேக காவியஙகளும் சரித்திரங்களும் இப்பாஷையிலெழுதப்பட்டன. இவற்றுள் இராஜசேகரவிலாசம் எனபது இராஜசேகரனென்ற ஒரு சோழராசன் சரித்திரம். இஃது இப்பாஷையின் கவிசிரேட்டரான ஷடக்ஷரிதேவராலியற்றப்படடது. பலசைவ வைஷ்ணவ கிரந்தங்களும் இப்பாஷையில் உண்டு.

**மலையாளம்** :—இது தமிழின் ஒரு பாஷித பேதமெனப்படினும், சமஸ்கிருத சார்பு பெற்றுத் தனிப்பாஷையாய் இப்பொழுது நடைபெறுகின்றது. இப்பாஷையிலுள்ள விசேஷ காவியங்களும் பாடல்களும் இராமாயண பாரத பாகவத கதைகளைப்பற்றியவை. புராணகாவியங்கள் விசேஷமாய்ச் செய்தவர் துஞ்சத்த எழுத்தச்சன். கிளிப்பாட்டென்றும் துள்ளல் என்றும் இருவகைப் பாட்டுகள் இப்பாஷையில் வழங்கிவருகின்றன. இவைகளெல்லாம் புராணகதைகள் சம்பந்தமானவை. கிளிப்பாட்டென்பது சாதாரணமாய் யாவரும் பாடவும் துள்ளலென்பது சிலசமயங்களில் குதித்துப்பாடவும் ஏற்பட்டவை. இப்பாட்டுக்களை விசேஷமாய்ச்செய்தவர் குஞ்சநம்பியார். சென்ற நூற்றாண்டின் கடைசியில் வாழ்ந்த அநந்தசயனம் ராமவர்மா மகாராஜாவினால் சில நாடகங்களியற்றப்பட்டிருக்கின்றன. இப்பாஷையில் மணிப்பிரவாள சுலோகங்கள் அநேகம்.

---

## ஆதிசங்கராசாரியர்.

---

இவ்வுலகின் நன்மையின் பொருட்டு எல்லாம் வல்ல பரமபொருளினது பேரருளால் ஒவ்வோர் காலத்தில் ஓரோர் மகாபுருஷர்கள் ஜனிப்பதுண்டு. அன்னோரை அவதார புருஷர்களென்று கொண்டாடுவது நமது தேசத்தாருக்குள் நெடுங்காலமாகவுள்ள வழக்கம். அப்படிப்பட்ட மகாபுருஷர்களில் ஒருவரான சங்கராசாரியார் ஏழாம் நூற்றாண்டினிடையில்* மலையாள நாட்டில் காலாட்டி என்ற

---

* சங்கரரின் சரித்திரம் வெவ்வேறு நூல்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பண்டிதர்களால் வெவ்வேறாக எழுதப்பட்டிருக்கின்றமையாலும், இக்காலத்திலுள்ளோர் எளிதில் நம்பவொண்ணாதபடி ஐதிகங்கள் பல கலக்கப்பட்டிருக்கிறதனாலும், கல்வெட்டு முதலிய நம்பத்தக்க சாதனங்களொன்றுங் கிடையாததனாலும், இவர் இன்ன காலத்திலேதான் பிறந்தாரென்று நிச்சயமாகச் சொல்லவொண்ணாது. 'கேரளோற்பத்தி' என்ற சங்கரவைபவத்தில் இவர் கி. பி. 400-ம் ௵ பிறந்தாரென்று எழுதப்பட்டிருக்கிறது. சிலர் இவர் கி. பி. 788-ம் ௵ பிறந்தாரென்றெண்ணியிருந்தார்கள். இவ்விரண்டுகொள்கைகளும் சரியானவைகள் அல்லனவாம். கி. பி. 630-ம் ௵ முதல் 650-ம் ௵ வரையில் நேபாளத்தில் அரசுபுரிந்த ஹர்ஷ வர்த்தனன் என்பவன் நெடுங்காலமாகச் சந்தானமின்றி இருந்தானென்றும், சங்கராசாரியர் திக்குவிஜயம் செய்கையில் நேபாளத்திற்குச் சென்றாரென்றும், அங்கே இவரது அனுக்கிரகத்தால் அவன் குலம் விளங்க மக்கட்பேறுண்டாயிற்றென்றும், அவ்வரசன் அந்நன்றியை மறவாது அந்தக்

அக்கிரகாரத்தில் ஆத்திரேய கோத்திரத்திற் பிறந்த நம்பூரி பிராமணராகிய சிவகுருவுக்கு அவரது கற்புடை மனைவியாகிய ஸ்ரீமகாதேவியாரிடத்துப் பிறந்தார்.

"விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்றபடி சங்கராசாரியரின் உள்ளே மறைந்திருந்த ஞானச்சுடர் இவரது குழந்தைப்பருவத்தே வெளித்தோன்றிற்று. சிவகுரு தமது திருமகனுக்குச் செய்யவேண்டிய ஜாதகருமம் நாமகரணமுதலிய வைதிக கருமங்களனைத்தையும் வேத விதிப்படி வழுவாது செய்து வந்தார். சிவகுரு சங்கரரது மூன்றாவதாண்டு நிறைவில் காலஞ்சென்றார். அதுமுதல் பெருந்தேவியார் கண்ணை இமைகாப்பது போலத் தமது அருமைக் குழந்தையைப் போற்றிப் புனைந்து வருவதையே தமக்குத் தொழிலாகக் கொண்டனர். சங்கராசாரியர் சிறு பிராயந்தொட்டே கலைமகளுருவெனக் குசாக்கிர புத்தியுடையவராய்த், தாம் ஆசானிடத்து ஒருமுறை கேட்டதை இருகாற் கேளாது உள்ளத்தமைத்து ஐயந்திரிபறவோதி உணர்ந்து கொள்ளத் தலைப்பட்டார். ஸாமுத்திரிகா சாஸ்திரப்படியுள்ள மகா புருஷலக்ஷணங்களனைத்தும் இவரிடத்தமைந்து, அதற்கேற்ற வண்ணமே, பொன் மலர் நாற்றமும் பெற்றிருந்தாற்போலப் பேரறிவினையும் இவர் பெற்றிருந்தமையால், ஞானியர் குழாங்கள் இவரைக்கண்டு தெய்வப்பிறப்பென்றெண்ணி உள்ளங்கனிந்து ஆனந்தக்கண்ணீருகுத்தன.

---

குழந்தைக்குச் சங்கரவர்த்தனனென்று பெயரிட்டானென்றுஞ் சொல்லப்படுகின்றது. கி. பி. 629-ம் ௵ற்கும் 645-ம் ௵றகும் இடையில் சீனதேசத்திலிருந்து நமது தேசத்திற்குவந்து இங்குள்ள பௌத்தமத நூல்களையெல்லாந் திரட்டிக்கொண்டுபோய் அவற்றைச் சீனபாஷையில் மொழிபெயர்ப்பித்த ஹுயன்ஸயாங்கு என்னும் பண்டிதர் தாம் கி. பி. 637-638 ஆகிய இவ்விரண்டு வருஷகாலம் பாடலிபுரத்துக்கு வந்திருந்தபோது பௌத்தமதத்தில் மிகுந்த அபிமானமுடையவனான பூர்ணிமா என்னும் அரசன் அந்த நாட்டை ஆண்டுகொண்டிருந்தானென்று எழுதிவைத்திருக்கிறார். சங்கராசாரியர் சாரீரகமீமாம்ஸா பாஷ்யத்தைச் செய்ய ஆரம்பித்தகாலத்திலே பூர்ணிமா என்பவன் இருந்திருக்கவேண்டுமென்று அந்த பாஷ்யத்தினால் தெரியவரும். ஜைமினி முனிவர் செய்த பூர்வ மீமாம்ஸைக்குச் சபரமுனிவர் செய்த பாஷ்யத்திற்கு எண்ணாயிரங்காரிகை எழுதிய குமாரிளபட்டர் கனலில் மூழ்கி இறக்குங்காலத்துச், சங்கராசாரியர் அவரைக் கண்டாரென்றதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. குமாரிளபட்டர் சீனதேசத்தில் கி, பி. 629-ம் ௵ முதல் 658-ம் ௵ வரையில் ஆண்ட ஸரான்த்ஸான்காம்போ என்னும் சீன சக்கரவர்த்தியின் காலத்திருந்தாரென்று நிர்ணயித்திருக்கிறார்கள். இவ்வாறாகச் சங்கரர் ஏழாம் நூற்றாண்டினிடையிலிருந்தாரென்று நாம் ஒருவாறு நிச்சயிக்கலாம்.

இவருக்குக் கர்ப்பாஷ்டகத்திலே தானே உபநயனஞ் செய்விக்கப்பட்டது. அது முதல் இம்மாணியார் ஸாங்கமாய் வேதங்களை ஓதி முடித்தனர். அதன்பின்பு பிர்மசரிய நிஷ்டைதவறாமல் பிக்ஷாடனஞ்செய்து பன்னிரண்டாவதாண்டு நிறையுமுன்பே சகல சாஸ்திர பாரங்கதரானாரென்று கர்ண பரம்பரையாகச் சொல்லப் பட்டுவருகின்றது. இவர் உலகானுபவத் திறமையுடையவராயினும், பாரின்பப் பாழ்ங்கும்பியில் விழாது, ஞானக்கண் பெற்றுப், பிறப்பறுத்து முத்திபெறுவதையே குறியாகக்கொண்டிருந்தார். ஆதலினால் இவர் சந்நியாசத்தினை விரும்பித், தமது கருத்தினைத் தமது அன்னையாருக்கு விண்ணப்பஞ்செய்ய, அவ்வம்மை அதுகேட்டுத் துன்பம் பொறுக்கலாற்றாது, "மகனே! இல்லறமல்லது நல்லறமன்றன்றோ? அப்படிக்கின்றி நீ துறவறம் புகவேண்டுமாயின், இல்லறமபூண்டிருந்தபின்பு அதனைப்பெறுவது தானே நன்று? எனக்குச் செய்யத்தக்கதாய்க்கடனைச் செய்ய உன்னையன்றி வேறு யாருளர்?" என்று சொல்ல, இவர் தம அன்னையாருக்கு வேதாந்தத்தின் தத்துவத்தைச் சுருங்கவெடுத்துரைத்ததுமன்றித், தாயக்கடனைத் தாமே செய்வதாகவுஞ் சொல்லத், தருமமுணர்ந்த அம்மகாதேவியாரும் இவரைச் சந்நியசித்துக்கொள்ள அநுமதிகொடுக்க, மகா ஞானியான கௌடபாதரின் சிஷ்யராகிய கோவிந்தபாதரென்னும ஞானாசாரியரிடத்து அதிபாலியத்திலேதானே இவர் சந்நியாசம் பெற்றார். பால சந்நியாசியாகிய இவர் எப்பொழுதும் வேதாந்த விசாரஞ்செய்வதிலும், சாக்கியர் க்ஷமணர் முதலிய நாஸ்திகர்களையும் மற்றுமுள்ள புறமதத்தாரையும கண்டிப்பதிலும், வேதாந்த சாஸ்திரங்களை இயற்றுவதிலும பொழுதை விளையாட்டாகப் போக்கினார். இவ்வாறிருக்குநாளில், மகாதேவியார் காலஞ் செல்ல, அதைக் கேட்ட சங்கராசாரியர் அக்கணமே அவ்விடஞ்சென்று, தாம் முன்சொன்னவண்ணம தமது தாயக்குச் செய்யவேண்டிய கடனைத் தாமே செய்தார்.

பௌத்தமதம இவர் காலத்துக்கு ஆயிரம் வருஷத்திற்கு முன்பே உண்டாகி இந்தியா முழுவதுமேயன்றி, திபேத்து சீனம் பர்மா முதலிய பல அயல நாடுகளிலும், சிமமளதீவிலும் பரவிக்கொண்டிருந்தது. அம்மதம் சாக்கிய ஸிம்ஹரென்னும் புத்தரால் உண்டாக்கப்பட்டது. புத்தர் அரசர் மரபிலுதித்தபேர

ருளாளர். அவரை நம்மவர் விஷ்ணுவின் அவதாரமென்று சொல்வதுமுண்டு. அவர் வெகுகாலமளவும் பிராமணர்களோடிருந்து அவர்கள் மதக்கோட்பாடுகளனைத்தையும் நன்குணர்ந்தவர். வேள்வியின் பொருட்டுச் கொலலுதல் குற்றமாகாதென்று வேதங் கூறுதலால் அவ்வேதம் பிரமாணம் அல்லவென்பதும், ஜாதிபேதம் பாராட்டுவது கூடாதென்பதும, தோன்றுவனவெல்லாம் அழியுமென்பதும், அறமும் மறமும் தேய்ந்தகாலத்து நிர்வாணங் கிடைக்கும் இலலாவிடின் இறபபும பிறப்பும் மாறிமாறி வந்து கொண்டேயிருக்குமென்பதும், பௌத்தமதத்தின் குறியாயுள்ள கோட்பாடுகளாம். இந்த மதம் சஙகராசாரியர் காலத்து மிகத் தாழ்ந்து காஷ்மீரம் மகதம் பாஞசாலம் கூாசசரம் ஆகிய இந்த நான்கு நாடுகளில மட்டுந்தான் கேடடையாதிருந்தது. ஜைனா, புராணங்களில சிலவறறை ஒப்புக்கொள்ளினும், அவாகளும் பௌத்தரைப் போலவே வேதமதத்திற்குப் பகையாயுள்ளவர்களேயாம். சஙகராசாரியர் அவர்களெல்லோரோடும் வாதிதது அவர்களை வென்றார். இவருடைய ஏவுதலால் தென்னாட்டிலுள்ள உருத்திரபுரத்து அரசன் தன்னாட்டிலிருந்த பௌத்தாகளையெல்லாம் கறகாணத்தில வைத்தாட்டினதாகச சொலலுகிறாாகள். ஆயினும, தம்மவா பிறா என்னும் வேற்றுமை சிறிதுமின்றி எல்லோரிடத்தும் அன்புடையவரான இவரிடததுக் கொலைக் குறறமுண்டென்று சொலவது பொருந்தாது. ஸர்வஜீவதயாபராகிய இவ்வேதியா பெருமான் இத்தீசசெயல புரியச சிறிதும் உடன்பட்டிராரென்பது திண்ணம். சங்கராசாரியரின் சரித்திரத்தை எழுதிய பலருள் சிறந்தவாகளாகிய ஆனந்தகிரியாரும், மாதவாசாரியரும இது முற்றும பொய்யென்றே துணிந்து மறுக்கின்றார்கள்.

கொல்லா விரதத்தோராகிய சாககியரும் க்ஷமணரும் எக்காலத்திலும் கலவியில் மிக்க தோசசியுடையாரென்பது உண்மை. அவர்களால வேதமதத்திற்கு விரோதமாக எழுதப்பட்டிருந்த நூலகளையெல்லாம் சங்கராசாரியரும் இவருக்குப் பின்னிருந்தவர்களும் அவர்களிடத்தினின்றும் பறித்து அவறறைச சுட்டெரித்து விட்டார்களென்று சொலலப்படுவது ஒருவாறு உண்மையாயிருப்பினும் இருக்கலாம். அவர்களுள் நிபுணகவி

யான அமரஸிம்மன் செய்த நூல்கள் பலவற்றுள் அவர் பெயர் வாய்ந்த 'அமரம்' என்னும் நிகண்டு வடமொழிக்குத் தாய்போன்றிருத்தல் பற்றி அஃதொன்றை மட்டும் அழிக்காமல் வைத்துக் கொண்டார்கள் போலும்.

சங்கராசாரியர் தாம் சந்நியாசம் பெற்றதுமுதல் ஓரிரவு தங்கியவிடத்தில் அடுத்து மற்றோரிரவிராமலே தேசாடனஞ் செய்து கொண்டிருந்தார். சேதுமுதல் இமயமலை ஈறாக இந்துதேசமெங்குமுள்ள புண்ணிய தீர்த்தங்களுக்கு யாத்திரை சென்றார். ஆதிகாலந்தொட்டுச் சிறப்புடையதும், இந்துதேசத்திற்குத் திலகம் போன்றதும், வித்வகோடிகளால் மலிந்ததுமாகிய காசிமாநகரத்திற்கு இவர் செல்ல, அங்கே இவரது பேராற்றல் முற்றிலும் நன்றாக வெளிப்பட்டு, அங்குள்ள புலவர்பெருமான்களால் புகழப்பட்டார். பற்பலவாகிய சிறுநூல்களையும் பெருநூல்களையும் இவர் பற்பல சமயங்களிற் செய்தாரெனினும், காசியிற் செய்தவை மிக்க சிறப்புடையனவாம். வியாஸமகரிஷி வேதங்களையெல்லாங் கடைந்தெடுத்துச் சொல்லிய உத்தரமீமாம்சை என்கிற பிரமசூத்திரங்களுக்கு பாஷ்யத்தை* அங்கேதான் இவர் செய்தார்.

இவர் சைவம், வைஷ்ணவம் என்கிற பேதம் பாராட்டாமல் ஸ்மார்த்த ஸம்பிரதாயப்படி செய்தக்கனவற்றை மனமொழிமெய்களாற் செய்து, எங்கும் நிறைந்த பரம்பொருளை வழிபட்டு வந்தாரென்பதை இவரியற்றிய நூல்கள் பலவற்றினுள்ளுங் காணலாம்.

இவரெழுதிய நூல்களிலுள்ள வாக்கியரசனை திராக்ஷாபாகமுடையதாய், எத்தனைமுறைதான் படித்தாலும் தெவிட்டாத அமுதமாயிருக்கின்றதெனின், எழுதுவதிலும் மொழிவதில் மிக்க

* இவரியற்றிய பாஷ்யங்களுள் 'பிரமசூத்திர பாஷ்யம்,' 'தசோபநிஷத் பாஷ்யம்,' 'கீதாபாஷ்யம்,' 'நரசிம்மதாபினி பாஷ்யம்,' 'சஹஸ்ரநாம பாஷ்யம்,' என்ற இவ்வைந்தும் மிக்கச் சிறப்புடையனவாம். 'ஆனந்தலகரீ,' 'ஹரிமீடே,' 'சிவ புஜங்கம்,' 'விஷ்ணு புஜங்கம்,' 'விவேகசூடாமணி,' 'ஆத்மபோதம்,' 'கநகதாரை,' என்னும் பல சிறு நூல்களும் ஒவ்வொருகாலத்தில் இவராற்செய்யப்பட்டன. மஹா பண்டிதரான மண்டன மிசிரர் மனைவியாரும், கலைமகளைப்போல நிறை கல்வியுடையவருமான உபயபாரதியாரை வாதத்தில் வெல்லுதற் பொருட்டு இவர் அமருகனென்னும் அரசனது தேகத்திற் புகுந்து 'அமருசதகம்' என்னுஞ் சிற்றின்பநூலொன்றைச் செய்தாரென்றுஞ் சொல்லப்படுவதுண்டு.

திறமையை உடையவரென்ற பிரசித்தியைப் பெற்றிருக்கும் இவர் சபைநடுவே உபந்நியசிப்பதைக் கேட்டவர்களுக்குண்டாயிருந்த ஆனந்தத்திற்களவுமுண்டோ !

இப்பொழுது இந்தியாவின் பலவிடங்களில் சங்கர மடங்களுண்டாயிருப்பதற்கு இவரே ஆதியாதல்பற்றி, இவரை எல்லோரும் ஆதிசங்கராசாரியர் என்பர். சங்கராசாரியர் திக்கு விஜயஞ்செய்து வருகையில், தமது சித்தாந்தம் எங்குந்தழைத்தோங்கும்படி, பிரதானமாயுள்ள சில க்ஷேத்திரங்களில் மடங்களைக் கட்டுவித்து, அவற்றிற்குத் தமது சிஷ்யர்களுள் தலைமையானவர்களை அதிபதிகளாக நியமித்தார். ஜகந்நாத மடத்தில் பதுமபாதரையும், துவாரகை மடத்தில் ஹஸ்தாமலகாசாரியரையும், பதரிகாசிரமத்தில் ஆனந்தகிரியாரையும், சிருங்கேரி மடத்தில் சுரேசுவராசாரியரையும் மடாதிபதிகளாக வைத்தார். இவர்கள் *நால்வரும் இவருக்குப்பின் எங்கும் மதப்பிரவாதத்தராயினர். இவர்களுள் ஒவ்வொருவரும் வேதாந்த நூல்களைச்செய்தனர். இவர்களுள் ஆனந்தகிரியார் சங்கரபாஷ்யங்களைத்திற்கும்விருத்தியுரை செய்திருக்கிறார். சங்கர மடங்களேற்பட்டு இப்பொழுது 1200-வருஷத்திற்குமேற்பட்டிருப்பினும், இந்நாளளவும் வழிமுறையே வருகின்ற ஆசாரியர்களால் முன்போலவே அவையெல்லாம் விமரிசையாய் நடத்தப்பட்டு வருகின்றன. இம்மடங்களுள் இமயமலையின் மீதுள்ளதும், சங்கராசாரியர் உவந்தவிடமுமான பதிரிகாசிரம

---

* பதுமபாதர். இவரிடத்து ஆசாரியருக்குள்ள பேரருளைக்கண்டு மற்றைச் சீடர்கள் மனம் வருந்த, இவர் பத்திமையை வெளியாக்கற்பொருட்டு, கங்கையின் எதிர்க் கரையிலிருந்த இவரை நோக்கி ஆசாரியர் அழைப்ப, அக்கணமே கங்கைப்பெருவெள்ளத்தையும் கருதாது இறங்கிப் புகுந்த இவர் அடிவைத்த இடமெல்லாம் பதும மலர் தோன்றி இவரை ஏந்தி ஏந்திக் கரைசேர்த்தமையால் பதுமபாதரெனப் பெயர் வழங்கலுற்றனராம்.

ஹஸ்தாமலகர். இவர் சகல வேதவேதாங்கங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனியை உணருமாறு உணர்ந்தார். ஆதலால் இவர் இப்பெயரை வகித்தனர்.

சுரேசுவராசாரியர். இவர் தேவகுருவை ஒப்பச்சகலவேதசாஸ்திரங்களையும் உணர்ந்தாராகலின் இப் பெயர் பூண்டனர்.

ஆனந்தகிரியார். இவர் ஆசாரியன் பேரருள்பெற்றுத் 'தோடகம்' என்னும் செய்யுளைச் சொன்னமையால், அன்று முதல்தோடகாசாரியர் என்றும்,அதற்குமுன்னெல்லாம் இவர் எப்பொழுதும் களிப்போடு யார் எது கூறினும் மறுமொழியின்றி மலைபோன்ற பெருமையோடிருந்தமையால் 'ஆநந்தகிரி' என்றும் அழைக்கப்பட்டார்.

மடத்தின் ஆதிபத்தியம் இன்றைக்கும் மலையாளநாட்டிலுள்ள நம்பூரிப்பிராமணர்களுக்கே உரியது. இப்பொழுதுள்ள மற்றைய சங்கரமடங்களெல்லாம் இவர் காலத்துக்குப் பின் ஏற்படுத்தப்பட்டனவே. இத்தென்னாட்டாரெல்லோருக்கும் சிருங்கேரி மடம் பிரதானம். துங்கபத்திரையின் கரையிலுள்ள அந்தமடத்தில் ஆதிசங்கராசாரியர் தாமே சிலகாலம் நிலையாயிருந்தார் என்கிற ஏற்றமும் அதற்குண்டு.

அக்காலத்தில் காஷ்மீரநாடு கல்வியில் மிகச்சிறப்புடைத்தாய், அங்கெங்கும் பௌத்தமதம் உயர்வடைவதையும், வேதமதந்தாழ்வடைவதையுங் கேட்டு, அவர்களை வெல்ல எண்ணிச் சங்கரர் அங்குச் சென்றார். அவர்கள் எளிதில் வெல்லத்தக்கவர்களல்லரென்று கண்டு, தாம் அவர்களோடு வாதஞ் செய்யும்பொழுதெல்லாம் நாமகளைத் தியானித்துக்கொண்டிருந்து சில நாளளவும் அவர்களோடுவாதஞ் செய்து, இறுதியில அவர்களை மேற்கொண்டார். அங்கிருந்த மகாபண்டிதர்களெல்லோரும் இந்தப்புலவர் பெருமானது பேராற்றலைக் கண்கூடாகக் கண்டு, கல்வியில் இவருக்கிணை யாருமில்லையென்று துணிந்து, அந்தச் சபைநடுவே கலைமகளுக்கென்றிடப்பட்டிருந்த சாரதா பீடத்தில் இவரை எழுந்தருளப்பண்ணிக் கொண்டாடினார்கள். அந்தப் பீடம் இந்நாளிலும் அங்கே இருப்பதைக்காணலாம்.

இவர் இளமை முதல ஐம்புலனையும் வாட்டி, நாளுக்குநாள் உடம்பை ஒடுக்கிக்கொண்டே வந்ததனாலும், தேகசுகத்தைப் பாராட்டாமல் எந்நாளும யாத்திரை செய்துகொண்டிருந்ததனாலும, தமது நுண்ணறிவால உண்மையை அறிதற்பொருட்டு அரிய நூல்களையெல்லாம் ஓய்வின்றி ஆராய்ந்து கொண்டிருந்ததனாலும், ஏனையோரால் செய்வதற்கரியனவாகிய வேதாந்த கிரந்தங்களைச்செய்து கொண்டிருந்ததனாலும, இவர் தேகம் மெலிவுற்றது. நிர்மலமானக்ஷேத்திரத்தில் காலத்தைப் பின்னிட வெண்ணிக் காஷ்மீரத்தினின்று இமயமலைக்குச் சென்று, அதின் மேலுள்ளதும், வியாசமகரிஷி தவம்புரிந்ததுமான பதரிகாசிரமத்தை அடைந்தார். அங்கேசிலநாளிருந்தபின்பு, அதற்கும் வடக்கே போகவெண்ணிப், பாண்டவர்கள் மகாப்பிரஸ்தானஞ்செய்து முத்தி பெற்ற இடமா

ிய இமயமலையின் உயர்வான மகாபாந்தம் என்னும் கொடி முடிக்கருகேயுள்ளதும், அதற்கும் அதிக உயரத்திலிருப்பதுமான கேதாரநாதத்தையடைந்தார். அங்கே சென்று சிலநாட்கழித்த பின் தேகம் முன்னிலும் மெலிவுற்றது. இவர் அங்கே தமது முப்பத்திரண்டாவதாண்டில் தேகவியோகமானார். இவர் தமது அந்திம தசையில் எங்கும் நிறைந்த பரம்பொருளைத் தியானித்து "எம்பெருமானே! பாவியேன் செய்த பிழை மூன்றையும் பொறுத்தருளவேண்டும்:—உருவமில்லாத உம்மைத் தியானத்தின் பொருட்டு மூர்த்திகரித்தேன்; மனோ வாக்கிற்கெட்டாத உம்மைத் துதிசெய்தேன்; எங்கும நிறைந்திருக்கிறீரென்பதையெண்ணாது தீர்த்த யாத்திரை செய்தேன்" என்று அநுதாபப்பட்டாரென்று சொல்லுவர்.

இவ்வுலகந் தோன்றியதுமுதல் இதிற் பிறந்திறந்த மாந்தர்களின் தொகையைக்கணக்கிட்டுச் சொல்லவல்லோரெவருமில்லை. அவ்வாறு பிறந்திறந்தவர்களுள் பிறர்க்குப் பயன்பட வாழ்ந்தவர் மிகவுஞ் சிலரேயாவர். பிறர்க்குப் பயன்படவாழாமாந்தர் பூமிக்குப்பாரமேயாவர்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

என்றபடி சங்கராசாரியர் இவ்வுலகத்திற்குப் பேருதவிசெய்தார். தன்னை அறிபவனே தலைவனாவான் என்பதை இவர் தாமே அநுபவத்தாலறிந்துகாட்டினார். முப்பத்திரண்டாவதாண்டிற் காலஞ்சென்ற இந்த மகா வேதாந்தியார் இன்னுஞ் சிலகாலமிருந்திருப்பாராயின் இன்னும் பல அரியநூல்களைச்செய்யாமலிரார்.*

---

* இந்த ஆசாரியர் நிலைநிறுத்திய அத்துவைத மதத்தை ஒருவாறு சுருக்கமாய்ச் சொல்லுவோம்:—அஞ்ஞானத்தால் கவரப்பட்ட மானிடர் கண்ணிற்கு உண்மையெனத் தோற்றும் உலகமனைத்தும் பொய்யே. ஆத்துமாதான் மெய்யாயுள்ளது. அஃது ஒன்றே. அது நிர்க்குணமானது. அஃது எவ்விதமான பந்தனங்களுக்கு முட்பட்டதன்று நான் தான் அது; அது தான் நான். அஞ்ஞானத்தைப்போக்கி, ஆத்துமாவின் தத்வத்தைத் தெரிந்துகொண்டவுடன், உள்ளனபோலத் தோன்றிய பூதங்களெல்லாம் நித்திரை தெளிந்தெழுந்தவுடன் கனவிற்கண்ட காட்சிகளைப்போல இல்லாதொழியும். இந்த ஞானமுண்டாவதே முத்தி. 'ஆத்துமா ஒன்றே உள்ளது; மற்றையவை அனைத்தும் வெறுந் தோற்றமேயல்லாது மெய்யல்ல' என்ற ஞானம் பெற்றவன் இவ்வுலகத்தில் ஜீவித்திருந்தாலும், சுகத்தில் களியாமலும், துக்கத்தில் வருந்தாமலுமிருத்தலால் முத்திபெற்றவனே. 'எல்லாம் ஒன்றே; பிராணிகளுள் பேதமில்லை' என்னும் நம்பிக்கை அத்துவைத

# எழுத்தின் உற்பத்தி.

ஆதியில ஜனங்கள் ஒருபொருளைக் குறிக்க அப்பொருளைப் போலச் சித்திரங்கள் எழுதிக் கருத்தைப் பிறருக்கு வெளியிட்டிருக்கவேண்டும். இவ்விதமாகவே மெக்ஸிகோவென்னும் நாட்டில் நடந்து வந்ததாக அவர்களுடைய சித்திரங்களால் காண்கிறோம். ஆனால் கண்ணுக்கு விஷயமான பொருள்களை மாத்திரம் இவ்வாறறிவிக்கக்கூடும்.* ஆகவே எகிப்து தேசத்தவர்களின் உபாயம் இதிலும் சிறந்தது. அவ்வெகிப்தியர்கள் மனிதன் முதலிய பிராணிகளாகிய பிண்டப்பொருள்களை அவ்வவற்றின் முக்கியமான சினைப்பொருளாகிய தலையையெழுதி அறிவித்ததுமல்லாமல், நயனகோசரமின்றிக் கருத்துக்கு விடயமான தந்திரம் கோபம் முதலிய குணங்களை அந்தந்தக்குணங்களில் சிறந்த நரி குரங்கு முதலிய பிராணிகளையெழுதியும், போர்புரிதல் நடை குழிவெட்டுதல் பார்த்தல் முதலியதொழில்களை முறையே சத்தி கேடயம்தரித்த கை இரண்டு கால் மண்வெட்டி கண்முதலிய கருவிப்பொருள்களையுமெழுதிக் காண்பித்தார்கள். இம்மாதிரிசெய்தும் தங்கள் கருத்தையெல்லாம் முற்ற எளிதாய்த் தெரிவிக்க முடியவில்லை. ஆகவே அவர்கள் அவைகளிற் சிலவற்றைப் பொறுக்கி அவ்வவற்றாற் குறிக்கப்படும் பொருள்களின் பெயர்களுக்கு முதலெழுத்தாக வமைத்துக்கொண்டார்கள். உதாரணமாக, அவர்கள் ஓர் அவயவமாகிய வாயைக்குறிக்கும் வாய்போன்ற சித்திரத்தை அவ்வுறுப்புக்கு அவர்தேசத்தில் வழங்கும் பாஷைமொழியாகிய ரு என்பதன் முதல எழுத்தாகிய ரகரமெய்யாகச் செய்துகொண்

மதத்தை வழுவாது அநுஷ்டிப்போருக்கு உண்டாகிறதனால் அவர் தம்மைப்போலவே பிறரையும் ஆதரிக்கத் தடையொன்றுமிராது.

சங்கராசாரியரின் அத்துவைத சித்தாந்தத்தையே 2300-வருஷத்திற்குமுன் கிரேக்குதேசத்திலிருந்த ப்ளேடோவென்னும் பண்டிதர் விளக்கிக்காட்டியிருக்கிறார். கி. பி. 1724-௵த்திற்கும் 1804 ௵த்திற்குமிடையிலிருந்த ஜர்மனிதேசத்து வித்துவானான காண்டு என்பவரும், 1788 ௵த்திற்பிறந்து 1860-௵வரையிலிருந்த அவர் சிஷ்யராகிய ஷோபின்ஹாவரென்பவரும், சங்கரர் சுருதிகளைக்கொண்டு ஸ்தாபித்திருக்கிற சித்தாந்தத்தை யுக்தியினாலேயே நிரூபணம்செய்திருக்கிறார்கள். இக்காலத்திலுள்ள ஐரோப்பா, அமெரிக்கா தேசத்துப் பண்டிதர்கள் இந்த மதத்தைப் புகழத்தலைப்பட்டிருக்கிறார்கள்.

டனர். இவ்விதமாகவே இத்தேசத்தாரியர்கள் பிறதேசத்தாருடைய கலப்பின்றித் தமது பாஷைக்குவேண்டிய எழுத்துக்களை உண்டுபண்ணிக்கொண்டார்கள். இவ்விஷயம் இந்துபாலியெழுத்தில் எழுதப்பட்டிருக்கும் அசோகனுடைய சிலாசாதனங்களினால் நன்கு வெளிப்படும். அச்சிலாசாதனங்களில், (ப) வென்றவெழுத்து அவ்வெழுத்தை முதலிலுடைய பாணியென்ற மொழியினால் குறிக்கப்படும் கை யென்ற உறுப்பைப்போலவும், வ, வீணையைப்போலவும், ந, நாஸ் என்ற மூக்கைப்போலவும் இருக்கின்றன. இந்த இந்துபாலியெழுத்தினின்றே தேவநாகரி கிரந்தம் முதலான பல எழுத்துக்களுண்டாயின. சிலாசாதனங்களில் காணப்படும் *வடடெழுத்தென்னும் பழைய தமிழெழுத்து இவ்வெழுத்தையொவ்வாது பழைய தமிழர்களால் தனியாகவுண்டாக்கப்பட்டிருக்கவேண்டும். இவ்வடடெழுத்திலேயே தொல்காப்பியம், குறள் முதலிய தொன்னூல்கள் வரையப்பட்டிருந்தன. பதினோராவது நூற்றாண்டுவரையில் இவ்வெழுத்து வழங்கிவந்து தமிழ்நாட்டின் வடபாகத்தார் உபயோகித்துவந்ததும் கிரந்தவெழுத்தைச்சார்ந்ததுமான தற்காலத்திய தமிழெழுத்துண்டாகவே மறைந்துபோயிற்று. இவ்வடடெழுத்து நாலுவருஷங்களுக்கு முன்வரையில மலையாளத்தில் வழங்கிவந்து இப்பொழுதும் இலடசதீவிலிருக்கிறது.

---

## பாஷோற்பத்தி.

---

மனிதர்களைச் சிருஷ்டித்த கடவுள் அவர்களுக்கு உபயோகத்திற்காகப் பாஷையைச் சிருஷ்டிக்காதொழிந்தபோதிலும், அதை உண்டாக்கத்தக்க புத்தியையும், அதற்குவேண்டிய சப்தத்தையும் சிருஷ்டித்தேயிருந்தார். பாஷை முடிந்த விதமிதுவெனச் சிலர் கூறுவது:—“ஆதியிற் சிருஷ்டிக்கப்பட்ட மனிதர்கள் ஆங்காங்குத் திரிந்துகொண்டு ஓர் மலையினுச்சியிற் காக்கைமுதலியவை

---

*வட்டெழுத்தென்றால் உருண்டைவடிவுள்ள எழுத்து. கோலெழுத்து (அல்லது கேரெழுத்து) இவ்வட்டெழுத்தின் ஓர் வேறுபாடு. இவ்வெழுத்துக்களைத் தமிழ்நாட்டின் சிலாசாசனங்களில் காணலாகும்

களைப் பார்த்து அவைகளின் இயல்பை மற்றவர்க்குத் தெரிவிக்கத் தம்முள்ளத்திற்றோன்றிய தாற்பரியத்தைக் கைகாற் சேட்டைகளைக்கொண்டு வெளியிடும்படி உத்தேசித்திருக்கலாம். அதுகொண்டு மற்றவர் அவருடைய உள்ளத்திற்றோன்றிய தாற்பரியத்தை அறிந்திரார். அவர் உடனே தன் விரலால் மரத்தைச் சுட்டிக்காட்டிக் கா, கா, கா வென்று சில வார்த்தைகளைச் சொல்லியிருப்பார். அதுகொண்டு மற்றவர் காக்கைகள் இங்கிருக்கின்றனவென்று அறிந்திருப்பார். அதுமுதலாகக் 'காக்கை' யென்னுஞ் சொல் ஓர் பறவைக்குப் பெயராக ஏற்பட்டது. இவ்விதமே ஒவ்வொருவரும் ஒவ்வொரு சமயங்களிற் றத்தமுள்ளத்திலுதித்த அபிப்பிராயங்களை மற்றவர்களுக்குப் புலப்படுத்தவேண்டித் **தத்தமக்குத்தோன்றியவாறு** சப்தங்களை உண்டாக்கி, ஒவ்வொன்றிற்குப் பெயராக்கினர். இதனையே **அனுகரணசித்தாந்தம்** என்று பெரியோர் வழங்குவர்." இப்படிப்பட்ட சித்தாந்தம் உலகத்திலே நாம் காணும் பிராணிகளிடத்தும், வேறுசில பதார்த்தங்களிடத்தும் ஒருசால் ஒத்திருப்பினும், குணங்களையுந் தொழில்களையுங் குறிக்கும் சப்தங்களில் ஒத்துவாராதாதலினாலே, இது நிலைபெற்ற சித்தாந்தமன்றென்பது சிலருடைய தாற்பரியம்.

வேறு சிலரோ "நாம் சந்தோஷம் விசனம் ஆச்சரியம் பயம் முதலாகிய விகாரங்களால் மனங்கலங்கி நம்மறிவின்றி 'ஆகா, அந்தோ, அகோ, ஹி ஹி ஹி, ஹ ஹ ஹ' என்று தொடங்கிய சப்தங்களை உச்சரிப்பது வழக்கமாயிருக்கின்றதன்றோ? அவ்விதமே முற்காலத்து மனிதர்களும் அவரவர் ஒவ்வோர் வஸ்துவைத் தாம் கண்டவுடன் தத்தம ஆச்சரிய முதலிய **மனோ விகாரத்திற்கேற்பச்** சப்தங்களை மாற்றிக்கொண்டனர். அவைகளே இவ்வுலகத்தில் பல வஸ்துக்களுக்கும் பெயர்களாக வழங்கப்பட்டன. இதனையே **ஒலிச்சித்தாந்த**மெனப் பெரியோர் வழங்குவர்.

இவ்விருவகைச் சித்தாந்தங்களையும் விலக்கி (Max Müller) மாக்ஸ் மில்லரென்பவர் ஒரு சித்தாந்தம் முடித்திருக்கின்றார். அஃதாவது; "உலகத்தில் நாம் காணும் ஒவ்வொரு பொருள்களும் ஒன்றுடனொன்று உராய்ந்தால் ஓர் ஒலியுண்டாவது இயற்கையிலுள்ளதென்பதில் தடையில்லையே. அவ்வாறு மனிதர்

களுடைய உள்ளம் ஒவ்வொரு பொருள்களையுங் கவருங்கால ஒவ்வொரு சப்தங்களைத் தோற்றுவிக்கும். ஒலிகளோ பொருள்கள் தோறும் வேறுபடும். அவற்றுள், மனிதர்களுடைய உள்ளத்திற்கு மிருகமுதலியவற்றிலும்உயர்ந்த ஊக்கமென்னும் சக்தியிருத்தலால், அவ்வுள்ளத்திற்றோன்றும் ஒவ்வொரு சப்தங்களும் பொருள்களோடியைந்து இனிமையுள்ளனவாகவும் ஏற்படுகின்றன. ஆதலால், முற்காலத்துதித்த மூலபுருடர்களின் உள்ளத்திற்றோன்றிய ஒலிகளின் தொகுதியே ஆதியிற் பாஷையென வழங்கப்பட்டது" என்பதேயாம்.

இவ்வாறு பாஷோற்பத்தி விஷயத்தில் நாம் எடுத்துக்காட்டின பற்பல வழிகளில் உசிதமான மதம் யாதெனில், முதற்கட் கூறிய அனுகரண சித்தாந்தமே. ஆயின் அச சித்தாந்தத்தில் குணம் தொழில் முதலாயினவற்றை அனுகரித்தல் கூடாதாதலின், அச சித்தாந்தத்திற்கு அஃதோர் குற்றமாமெனக் கூறினுமன்றோ? அதனை இங்ஙனம் மாற்றுவாம். தொழில்களிலுங் குணங்களிலும்கண்டவுடன் அதற்கு ஓர் அனுகரண சப்தம் அமையாவிடினும், பரம்பரையில் அதற்குமோர் சொல் உண்டாகக்கூடும்.

தற்காலத்தவர் வழங்கும் குறுகுறுத்தல், குமுகுமுத்தல் [வாசனைகமழ்தல்] முதலிய சொற்கள் முற்றிலும் அனுகரணங்களாகவே கொள்ளற்பாலனவன்றோ? இவ்விடங்களில் தொழிலை அனுசரிப்பது வெளிப்பட்டதல்லவா? இவ்விதம் திரவியங்களிலும் தொழில்களிலும் சொற்கள் நிலைபெற்றனவாதலால், குணங்களிலும் ஒருவிதமாய முடிககலாமென்றுணர்க.

---

## வசீகரநித்திரை.

---

வசீகரநித்திரை என்பது ஒருவித ஆச்சரியமான மனோநிலைமை. இது தற்காலம் ஐரோப்பு நாட்டிலுள்ள எல்லா நூலோராலும் அங்கீகரிக்கப்பட்டு அதின் இலக்கணமும் காரணகாரிய சம்பந்த விவரமும் இன்னவெனப்புலப்படாமல இருப்பதால் நன்றாய்ப்பரிசோதிக்கவேண்டிய ஒரு நூதனதோற்றமென மதிக

கப்பட்டிருக்கிறது. இந்த விசேட நிலைமை இத்தேசத்தும் ஆங்காங்குச சிற்சிலர் காட்ட, அநேகர் பொழுதுபோக்காகக் கண்டும் அனுபவித்தும் இருக்கலாம். தனக்கு முந்திய காலத்தும் இவ்வித நித்திரை உண்டுபண்ணி வசீகரணம் செய்தவர்கள் ஐரோப்பு நாட்டிற்றானே இருந்துள்ளாரெனினும், 1734-ம் வரு பிறந்து 1815-ம் வரு வரை இருந்த ஆந்தனி மெஸ்மர் என்னும் ஒரு வைத்திய பண்டிதர் மூலமாய் இத்தொழிலுக்குப் பிரசித்தி நேர்ந்தபடியால் அதற்கு மெஸ்மரிஸம் என்று பெயரிடப்பட்டது.

இவ்வசீகர நித்திரையின் சம்பவங்கள் மிகவும் ஆச்சரியமானவை. அவற்றின் வரலாற்றை ஒருவாறு சுருக்கி இவ்விடத்தில் கூறுவதன்றி அருமைக்குத் தக்கபடி அதனை விரித்துரைக்க இடமில்லை. வசீகரநித்திரை வரவழைக்கும் மார்க்கங்கள் பலவுள. அவற்றுள் சாதாரணமானவழி, கண்ணாடித்துண்டு பொத்தான் என்னும் கருக்கபந்தனம் முதலிய ஒளிவிடும் பதார்த்தங்களில் வசீகரிக்கப்படுபவனைச் சலனமற இருந்து நோக்கவைத்தலும் அவ்விதம் நோக்குகின்றவன் கண்மயங்கிச் சோர்வடையுங்கால் அவன் முகமுதலாகக்கீழ் நோக்கிக்கைவிரலால் இரண்டொருமுறை தடவிவிடுதல்போல வசீகரண பாவனை பண்ணலுமாக இருக்கின்றது. அவ்விதம் செய்தவுடன் கண்மயங்கி இருந்தவனுக்குச் சாதாரண நித்திரைக்குள்ள குறிகள் தோன்றும். அக்காலையாதும் செய்யாது விட்டுவிடில் காட நித்திரைமேலிட்டவன்போல போதமிழந்து சோர்வடைந்து விழுந்து தூங்கிவிடுவன். இப்படி நேரும் நித்திரையும் பலவிசேடங்களை உடைய ஒரு வியப்பான அவஸ்தையன்றிப், பொதுவாய் மனிதர் நாடோறும் அனுபவிக்கும் சுழுத்தியன்று. அதற்கு 'வசீகரசுழுத்தி' யென்ப பெயர் கூறலாம். ஆனால் அதன் தன்மையை ஆராயுமுன் அவ்விதமான சுழுத்தி நேரிடாமல் தடுக்கில் உண்டாம் வைபவங்களைக் கவனிப்போமாக. அப்படித் தடுப்பதற்கு மேற்கூறிய வழி கண்மயங்கி வரும் புருஷனுடைய இமைகளை விரலால் திறந்துவிட்டு அவனோடியாதேனும் ஒன்றைப்பற்றிச் சம்பாஷித்தலே போதுமாக இருக்கின்றது. இச்சம்பாஷணையில் உண்டாம் விநோத வேடிக்கைகளே ஜனங்களுக்கு மகிழ்ச்சியும் அதிசயமும் உண்டுபண்ணி அவர்களை இங்

சித்திரையிற் பிரியப்படுத்துகின்றன. வாஸ்தவத்திலும அவைகள வியப்பானவைகளே. சம்பாஷணை ஆரம்பித்ததின் பின் சிறு பொழுது மேற்கூறியபடி வசீகரிக்கப்பட்டவனுக்குத தனனை வசீகரித்த வசீகரன் வார்த்தையன்றி மற்றையா பேசும் பேசசுகளும் தன்னைச் சூழ்ந்திருக்கும் பொருள்களும் சாதாரண காலத்தில் யார்க்கும் தோற்றுவதுபோலவேதோறறும. அஙஙனந் தோற்றினும் அவ்வசீகரன் சொலலுபவை எவையோ அவைகளை மாத்திரம் உண்மையாக நமபிப பிரவாத்திக்கிறவனுகப் பாவிப்பதே விசேடம். உன் கை நீட்டக கூடியதல்லவெனமுல இவன எவ்வளவு பிரயாசைப்படினும நீட்டுகிறதறகு ஏலாதவனுகவே ஆய் விடுகிருன். அது வெறும நடிபபு அன்று என்பதற்கு அந் நிலையிலிருந்த ஒரு சிறுவனை நோககி காணி என்னும் வித்துவாம் "ஒரு பவுன் இதோ, கைநீட்டி வாங்கிககொள" எனறதறகு அதற்காக இயனற அளவு முயன்றும முடியாதிருந்தான என்று அவா கூறும சாக்ஷியம போதுமானதாக இருக்கின்றது. முழஙகையை நீட்டுவதறகுரிய புலாலுறுப்புகளும் இசைபபுகளும் வாதரோகாதிகளால முடஙகபபெற்றவாகளுககிருபபன போலவே வலுத்துச சுளுக்கடைநதவையாய அக்காலம காணப்படும். இபபடிக கருமேநதிரியமன்றி ஞானேந்திரியஙகளும் இவ்வவஸ்தையில வசீகரபபடுகின்றன. சுத்த ஜலததை, பால மது அல்லது ஆமணக்கு நெய என்றிபபடி ஒவ்வொன்றுக மாறுபடக் கூறிக்குடிக்கும்படி வசீகரன் கறபிததால அதனைக் குடிககும போது அந்த அநத பாவனுபதாரத்தஙகளுக்கு ஏறகச சுபாவமாக முகக்குறிகள தோனறுவதும் சாரீராதி சாஸ்திர பண்டிதர்களால ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றது. புறக்கரணங்களுடன் அகக்கரணங்களும் வசீகரிக்கபபடுகின்றன. கைலேஞ்சியைக் காட்டி அது பேயென வசீகரன் கூறில, லேஞ்சியே எனத் தனக்குத் தோறறினும் பேயெனும பிராந்தி தன்னைக கவாந்திழுகக அப் பிராந்திகேற்க, பய கமபனுதிகள் உண்டாய் ஒருவன ஓடத் தலைபபட்டான் எனல சற்றும வியப்பன்று. மீன கோழிக்குஞ்சு முதலியவாகத் தன்னை வசீகரன் கற்பிக்கில, அவைகட்கு இயனறபடி முறையே பூமியில் விழுந்து நீநதுதல, சிறகடித்துக்கூவல, கொத்துதல் ஆதி

யான தொழில்களைக்காட்டி அவ்வசீகரனது சங்கற்ப விசேடத்தோடு தனது அகம் புத்தி தாதான்மியப்பட்டு அது அதுவாகத் தானே தனதுளம் மாறிவிடும் அதியாசசரியமான சம்பவங்களே தருக்காதி நூல்வல்லோர்களால் சோதிக்கபபட்டுச சாக்ஷிப்படுத்தப்பட்டிருக்கின்றன. இவ்வித வியப்பான தோற்றங்கள் காணப்படும் இம் முதல் அவஸ்தையில ஒருவாறு ஐம்புலன்கள் தமக்கெதிர்ப்படுகின்ற விஷயங்களை உள்ளபடி உணர்தலும் தன் தேகத்தில கிள்ளுதல முதலானவற்றால் நேரிடும் நோவு தெரிந்துகொள்ளுதலும் வசீகரனது சஙகற்பஙகளால் அனுபவிக்கும் வேறுபாடுகள நித்திரை நீங்கினதின்பின் ஒருவாறு ஞாபகம் இருத்தலும் அதற்கு விசேட இலக்கணமாக நிற்கின்றன. இம் முதல் அவஸ்தைக்கு **வசீகரஜாக்கிரம்** என பெயரிடத்தகும்.

மேற்கூறிய அவஸ்தை முதிர்ந்து இரண்டாம் அவஸ்தை நேரிடும்போது பஞ்சேந்திரியங்களில காது நீஙகலாக மற்றவைகளெல்லாம் ஒடுங்குவது சகஜம். ஒருகால அவை முற்றும் ஒடுங்காவிடினும் வசீகரனது ஆஞ்ஞைக்கு முழுதும் அற்புதமானவையாகவே நிறகும. எவ்வளவு கூசசலிட்டு மற்றையா இரையினும் அவை வசீகரனது அனுமதியின்றேல் கேளாதனவாயும, வசீகரன் எவ்வளவு மெள்ள மிணுமிணுக்கினும் அவை கேடபனவாயும் இருப்பது வியபபே. தனக்குப் பழக்கமுடையோராயினும் சிலரை அந்நியனை ஒரு கவிஞன், படைவீரன், வியாபாரி என்றிப்படி வசீகரன் சங்கற்பித்துச சொல்வனேயாகில அவாகள் அப்படியே தனக்குத்தோறற அததற்கு இசைய அவாகளோடு சம்பாஷித்தலுமன்றித் தன்னையே அப்படி வெவ்வேறு புருஷாகளாக வசீகரன் கற்பிக்கில் அவ்வவற்றிற்கேற்ப மாறுபடடு அகம்புத்தி செய்தலும் வழக்கம். ஆயினும் இத்திசையில் யூகித்தல் தானுகச்சங்கற்பித்தல் முதலிய அகக்கரண விருததிகள் முறறிலும் ஓய்வடைவதில்லை. வசீகர நித்திரையிற்படட ஒருவன் தனனைச சிரச்சேத தண்டனைக்கு விதிக்கப்பட்டிருப்பதாய வசீகரன் சங்கற்பித்ததுக்கிணங்க அப்படியே தாதான்மியப்பட்டு விசனமாதிகள தோற்றுவிக்குங் கால, தனது காதலி கடலில வீழ்ந்திறந்தாள் என்ற செய்தி வர்த்தமானப் பத்திரிகையில காண்பதாகக்கூற, அப்படியே நம்பித்

தனக்குச் சிரச்சேத தண்டனை விதிக்கப்பட்டதைக் கேள்வியுற்று அத்துயரத்தால் அவள் அவ்விதம் கடலில் வீழ்ந்திருக்கலாமென்று தானே யூகித்துச் சொன்னதும் தவிர, பிற்பாடு வந்த பத்திரிகையில் அவ்விதம் அவள் வீழவுமில்லை இறக்கவுமில்லை எனப் பிரஸ்தாபித்திருப்பதாக மறுபடியும் வசீகரன் சொல்ல, அதனையும் நம்பி அப்படி அவள் வீழ்ந்தவள் போலவும் இறந்தவள் போலவும் தோற்றினளென்றுதான் முன் பத்திரிகையில் சொல்லியிருக்கக் கூடுமென்றும், அது தன் கஷ்டவிதி உணர்ந்த சோர்வால் தன் காதலிக்கு நேரிட்டிருக்குமென்று தானே ஒரு சமாதானம் கற்பித்ததாகவும் காணி என்னும் பண்டிதர் கூறும் பிரத்தியக்ஷானுபவம் இவ்விரண்டாம் அவஸ்தையிலும் அந்தக் கரணங்கள் தாமே தொழிற்படக் கூடுமென்பதை விளக்கும். இவ்விரண்டாம் அவஸ்தைக்கு **வசீகர சொப்பனம்** என்னும் பெயர் பொருந்தும்.

மூன்றாம் அவஸ்தை இதிலும் கடிது. இதுவே முற்கூறிய **வசீகர சுழுத்தி.** அதில் சாவகருவிகரணங்களும் ஒய்ந்து கேவலம் பிரேதம்போல் கிடப்பதே சகஜம். ஒருகால் அகக்கரணங்கள் தோன்றினும் அவை வசீகரனது பிரியம்போல் தொழிற்படுமேயன்றிச் சுயமே பிரவர்த்தித்தல் இல்லை. நோவு முதலிய சரீர ஸ்திதிகள் யாதொன்றும் தோன்றுவதல்ல. நகக்கண்ணில் ஊசியைச் செருகினும் ஓரான். உடலை மரபிண்டம்போல வசீகரனது இச்சைக்கிசைய உபயோகப்படுத்தலாம். முற்கூறிய இரண்டாம் அவஸ்தைக்கும் இம்மூன்றாம் அவஸ்தைக்கும் சம்பந்தமில்லை. வசீகரச் சுழுத்தியினின்று வசீகரத்தன்மை நீங்காமல் மறுபடியும் வசீகர சொப்பனவஸ்தையில் எழுப்பி விடப்பட்டார். முன் நிகழ்ந்த இரண்டாம் அவஸ்தையாகிய வசீகர சொப்பனத்தோடு ஞாபகத் தொடர்ச்சி அடைதல் சகஜம். மீனாகப்பாவித்து உடலை நடுக்கி நீந்துவதாகப் பாவனைகாட்டி நின்ற ஒருவன் சுழுத்தி அவஸ்தையை அடைந்து மூர்ச்சித்துக்கிடக்கப், பின் எழுப்பப்பட்டவுடன் மறுபடியும் தானே மீனாகப்பாவித்துத் தரையிற்கிடந்து நீந்தத்தொடங்கினான் என்று கார்ணி பண்டிதர் சொல்லுவதே இதற்கு அத்தாக்ஷி. இச் சுழுத்தி அவஸ்தை, ஒருகால் தானே

நீங்கித் தன் மெய்யுணர்வு வரினும் வரலாம். ஆனால் இவ்வித வசீகரநித்திரை சாதாரணமாக வசீகரனாலேயே நிவர்த்தியாவது வழக்கம்.

இவைகள் பொய்க்கதைகளோவென ஐயமுறுவோர் அவைகளைத் தாம் கண்டதாகக் கூறும் பண்டிதர்கள் தங்களுக்குச் சமானமான சத்திய சுபாவமும் தருக்காதி நூல் வல்லமையும் உடையரோ அல்லரோ என நிர்ணயித்துக்கொள்ளல வேண்டும். அப்படியும் நம்பிக்கைபிறவாமல் தாங்களொழிய மற்றியாரும் ஏமாந்துபோகத்தக்க எளியோரென மதிப்போர்க்குப் பிரசித்த வசீகரர்கள் இருக்கும் இடம் சென்றோ அல்லது அவர்களை வரவழைத்தோ தத்தம் ஐயம் தெளிந்துகொள்ளுதலன்றி வேறுமார்க்கமில்லை. எவரையும் இவ்வித சந்தேகத்திற்கு உட்படுத்தும் வியப்பு இத்தோற்றங்களுக்கு உளதென்பது மெய்மையே. அது நூலறிவுடைய வசீகரர்தாமே ஒப்புக்கொள்ளும் விஷயம். பொதுவாக இந்நித்திரா விசேடங்களை அங்கீகரிப்போர் யாவரும் இவை நன்றாய் ஆராயத்தக்க தோற்றங்களென விசாரணையில் வைத்திருக்கிறார்களேயொழிய, அவற்றின் காரணகாரிய சம்பந்தம் இன்னபடி என்று துணிபவர் இலர். எந்த வழியாய் ஆராயவேண்டும் என்பது கூட அவர்களுக்குள் நிச்சயப்பட்டதாயில்லை. மின்சார சக்தி நூலில பழகினோர் இஃது ஒருவகைக் காந்தசக்தியெனவும், சாரீர நூலில் சார்புடையோர் நாடி விகாரங்களெனவும், மனோ சாஸ்திரம் உணர்ந்தோர் சங்கற்ப விசேஷமெனவும் கூறி அந்த அந்த நூலவழிதொடர்ந்து விசாரணைசெய்யவேண்டுவதாகத் தமக்குள் விவாதஞ்செய்துவருகின்றார்கள். ஒருபுறம் உடலும் மறுபுறம் உளமும் கலத்தலால இருவழியும் சோதனைசெய்யவேண்டியதான ஒருவிசேஷ நிலைமையெனக்கொள்ளுபவரும் சிலர் உளர்.

இப்படியே நாளதுவரை ஆராய்ந்த ஐரோப்பு நூல நியமங்களுக்குள் அகப்படாமல் இன்னும் சோதனைக்குரித்தாய் நிறுத்தியிருக்கும் சங்கதிகள் பினனும்பலவுள. சாதாரண நித்திரையிற் சிலர் எழுந்து நடந்து, விழித்திருக்கும்போதும் செய்கிறதற்குக் கூடாததான மதிலேறல, மதிலின்மேல் நடத்தலாதி பல அருமையான தொழில்களை மிகசகலபமாயச செய்துமுடித்தலும், ஒருவன்

ருனே சொப்பனத்தில் ஒருபுருடனும் சாக்கிரத்தில் வேறு ஒரு வனுமாக நாடோறும பாவித்து விவகரித்தலும் ஆதியான அற்பு தங்களுக்கு இடந்தரும் சஞ்சார நித்திரை என்று பேர்பெற்ற தோற்றமும், தூரதேசசமாசாரங்களைக் கரணங்களின் யாதோர் உதவியுமின்றி அறிதல், அன்னியரின் மனோநிலைமைகளை அவர்கள் கூறாதுணர்தல ஆதியாகச சிற்சிலா ஆஙகாங்கு நிராக்ஷேபமாக மெய்ப்படுத்திருக்கும் விஷயஙகளும பிரஸ்தாபசஙகதிக்குச சம் பந்தப்படுபவையாயினும அவைகளை எடுதது விரிப்பதற்கு இவ் விடத்தில் சாவகாசமில்லாமையால முறகூறிய வசீகரநித்திரா விஷயங்களுடன இவற்றை ஒபபிடடு நோக்குவோாககு இவை களின் உண்மையும் இயலபும தானே விளஙகுமெனவிடபபடுகின் றன.

---

# திருவெண்காடர் சரித்திரம்.

---

### மருதப்பெருந்தகை வாணிபத்தின்மேற் கலமேறிச்சென்றது.

இங்஡னம் நிகழுநாளில *மருதவாணப் பெருந்தகையாருக்குப் பதினாறும் பிராயம் சமீபிதததது. அவா ஒருநாள் தன்தந்தையாகிய பட்டினத்துப்பிள்ளையாரிடஞ் சென்று, "ஐயரே! கலமேறிக் கட லோடி வியாபாரம்செய்து பலதுறை பாாத்துவர மிக்க ஆசை யொன்றுடையேன். தீவாந்தரங்களில் விலையுயர்ந்த மணி முதலிய பல சிறந்த பண்டஙகள் இருப்பதாகக கேள்விப்படுகின்றேன். வணிகராகப் பிறந்தவர்கள் இளமைப் பருவத்தில் வருந்தியும் பொ ருளை மிகப்பத் தேடவேண்டுவதே கடனன்றோ? முதுமையில என்னசெயயக்கூடும்? பொருள் மிகப்பவில்லாவிடில இம்மை மறுமைப்பயனை அடைவதெங்ஙனம்? 'ஒண்பொருள் காழ்பப 'வியற்றியார்க கெண்பொரு ளேனை யிரண்டு மொருங்கு' எனப் பெரியாருங கூறினரே. 'திரைகடலோடியுந் திரவியந்தேடு' என ஔவையாரும் கூறினரன்றோ. ஆதலால எனக்குக் கட்டளையா

---

* மருதவாணப் பெருந்தகை என்பவர் காவிரிப்பூம் பட்டினததில் பட்டினத்துப் பிள்ளையாரெனப் புகழ்பெற்றிருந்த திருவெணகாடர் புத்திரர். மருதவாணர் சிவன் அவ தாரமென்றும் திருவெணகாடர் குபேரன் அவதாரமென்றும சொல்வர்.

னால் தீவாந்தர வியாபாரத்திற்குச் செல்லும் இந்நகர வாணிக மாக்களோடு யானுஞ்சென்று சிலநாளில் வருகிறேன்" என்றனர்.

அதுகேட்ட வெண்காடர் நெஞ்சுதிடுக்கிட்டு, "அண்ணலே! என்ன கூறினாய்! பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமானே! உன்னைப் பிரிந்து ஒரு கணமேனும் உயிர் வாழ்வல்லேனே! உனக்குப் பொருளென்ன தாழ்வாகவா வுள்ளது? வேண்டிய செல்வ நிரம்பியிருக்கப், பலதுன்பத்தோடுகடலோடி வருந்திப் பொருள்தேடவேண்டுமென்பதென்னை? எத்தனை காலம் நீ எவ்வாறு செலவு செய்யினும் சற்றுங்குறையாத நிதிக்குப்பைகள் பாசிபற்றிக்கிடக்கின்றனவே. நீ செல்வப் பிள்ளையாகி மனம்போனபடியுண்டு உடுத்து உலாவித்திரிவதை விட்டுக், கலமிவர்ந்து நெடுந்தூரம் போகநினைத்து இவ்வாறு சொல்வது முறையன்று. நீ இன்னும் முலைப்பாலை மணம் நீங்காத வாயையுடைய சிறுமதலை. உன் அன்னையும் மூதன்னையும் உன் பிரிவுக்கஞ்சி உயிர் துறப்பார்கள். ஆதலால் இப்போது இவ்வெண்ணத்தினை ஒழிப்பாயாக ஐயனே!" என்று வருந்திச் சொல்லினர்.

அதுகேட்ட மருதப்பர் சிறுநகை செய்து, "அப்பரே! நீருரைத்தன முழுவதும் உண்மையே. உங்களன்புக்கும் நிலைமைக்கும் தக்கதுவே கூறினீர். ஆயினும் 'மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்' என்ற பெரியோர் ஆணையை நிறைவேற்றுவது என் கடன். ஆகவே அக்கடனை மனமொழி மெய்யளவாகக் கழிக்கவேண்டுமானால், பொருளின்றி முடியாது. ஏனெனில், 'தம்பொருளென்பதம் மக்களவர்பொருட் டந்தம் வினையான் வரும்' என்பது சான்றோர் துணிபு. அன்றியும் உலகியலறியாதவனுக்குத் தருமவியலும் கடவுளின் அருளியலும் உணர்வது அருமையாம். அவ்வுலகியலறிதலும் பலதேயஞ்சென்று வருதல், அரசவை புகுதல், கற்றுணர் புலவர் கூட்டத்திருத்தல், இங்கித நட்பினரோடு அளவளாவல் ஆகிய இந்நான்குங் கடைப்பிடித்து நல்லொழுக்கத்தோடும் ஒழுகினாலன்றி முற்றமுடியாது. இதற்கு இளமைப்பருவமும் ஒரு கருவி. அறிவறியும் பருவமாகிய இது கடந்தால் தருமநூலுக்க

மெவ்வாறு முதுமையில வெளிபபடும். முன் தசரதன் தன் முது மையில் தவஞ்செய்து வருந்தி ஈன்ற இராமலக்குவனென்னும இளமைந்தரை அரக்கரோடு போர்செய்யவன்றோ விசுவாமித்திர முனிவர் பின் செலுத்தினன். நீர் அறியாததல்லவே! குலவொ ழுக்கமும் தொழிலுமாயினும், மக்கள காலையிறபபில்லதே சிறப் பும் பயன்படுவதும் ஆம. 'அகாலபபயிரும அன்னையப்பனில லாப்பிள்ளையும் அல்லற்படும்' எனபது உலக வழக்கமன்றோ? எல்லாமுணாநத நீரே இங்ஙனமானல், என அன்னைமார் பெண் பாலராவார் நிலைமை ஏதாகமாட்டாது. ஆதலால என் விண் ணப்பததைப் பயனறறதாககாது கடடளை தரவேண்டும" என்று கூறக்கேட்ட வெண்காடரோ தமமுடைய மைநதனை குறிபபைத் தெரிந்துகொண்டு, இனி இவா தடைசகு அஞ்சாா என்று எண்ணி, "ஆயின், ஐய! யானும் உன்னுடனை வருகிறேனை" என்றுா.

அபபோது மருதவாணர் "அப்பரே! யாமிருவரும் ஒருஙகே சென்றல எமமன்னையாா நம இருவா பிரிவையும ஒருஙகா றறு திறந் துபடுவர். அனறியும் என் முயறசியும் ஊக்கமுறறுச சிறவாது. ஆகலின் நீர்கருணைசெயது இஙகுத்தானே என்னன்னைமாரைககாத திடுதிர். யான்விரைவில பொருள தேடிவந்து சோகின்றேன்" எனசசொலலக்கேடடு,படடினததையா மறுக்கமாட்டாதவராய்ச சிறுபோது மயஙகி நின்று பின்னொருவாறு தெளிய, மருதப்பர் வழிச்செலவுக்கும் வியாபாரத்திறகும வேண்டும் கருவிகளையும துணையையும பண்டங்களையுங்குறைவறச சேகரித்துப், புதிய தொரு கலத்தில நிரபபித, தகக மீகாமனொருவனை நியமிக்க தாய் மூத்தன்னை தந்தை சுறறத்தினர் சிவனடியா முதலிய பெரி யோா யாரையும் மருதவாணா வணங்கி விடைபெற்றுக் கடற் றுறை அடைந்தனர். அதற்கு முன்னமே அவ்வூரிலுள்ள வணிக மாக்கள் மைந்தரும இவர்க்குத் தோழருமானவர்கள் யாவரும் வாணிபத்தை முன்னிட்டு அவ்வாறே பறபல பண்டங்கொண்டு கலமேற வந்திருந்தவாகளோடு தாமும் ஏறிக் காற்றின சாயலு மொத்துவரக் கலஞ் செலுத்தி மிக விரைவிற் சென்றனர்

**மருதப்பெருந்தகை வாணிபத்திறனும் மீட்சியும்.**

இங்ஙனமிருக்கையில் பொருள் வளர்கக வாணிபங்குறித்துக

கலமேறிச்சென்றவர்களனைவரும சிலநாளில ஒரு தீவத்தினை யடைந்து அங்குத் தம்பாலுள்ள பண்டங்களை மாறிக்கொண்டு, வேறுபல நாடுநோக்கி, மருதவாணரொழிய மற்றையர் யாவரும் போயினர். மருதவாணர் மாத்திரம் அவ்விடத்திற்றானேயிருந்து கொண்டு தம்பாலுள்ள பண்டஙகளை மாறிப்பொருள்கொண்டு, கோயில், மண்டபம், மடம், சத்திரம், சாலை, நந்தவனம், சோலை, குளம், கூவல், தடாகம் முதலிய பல்வகை அறங்களையும் சிவகாருண்ணியத்தாற் செயது, ஏழையா முதலிய யாவர்க்கும் உபகரித்துக் கொண்டு பலபுகழ நிறுத்திவந்தனா. இவ்வாறு சிலமாதங்கள் கழிந்தன.

அப்பால், வாணிபத்தின்பொருட்டு வேறு தீபநோக்கிச சென்றிருந்த அவா நண்பா யாவரும் அந்தந்த தீவுகளினும் நாடுகளினும் உள்ள பண்டங்களை மாறிப் பொருள்விருத்திசெய்து ஊதியமடைந்தவர்களாய்ச் சிலநாளிற்றானே மருதவாணரிருந்த இடம் வந்துசோந்து அவரைக் கண்டு முகமன் கூறிப் பிரிவாற்றாமை வினவி மகிழ்கொண்டாடியிருந்து, அவா வாணிபத்திறம் வினவினராய், அவரடைந்த இலாபம் வேறு பிறிதின்றி வரட்டிகளும், அவல் கடலையுமே இருக்கக்கண்டு, திடுக்கிட்டு, "ஐய! நீர்கொண்டு வந்த உயர்விலைப்பண்டஙகளும் பெருநிலைத்திரவியங்களும் ஏதாயின? உம்மிடத்தில் உலர்ந்த எருககுப்பலும், மிகுந்த அவல் கடலையுமே இருக்கின்றனவே. என்னகாரியஞ் செய்தீர்? பட்டினத்துப்பிள்ளையாரெனப் புகழ்பெற்ற திருவெண்காடர் தவப்பேறாய்வந்த நீர் எம்மனைவர்க்குந் தலைவராக இருக்கின்றீர்; எம்மினுஞ் சிறந்த அறிவாற்றலுடையீர; பொருள்வளாக்க எம்மையேவினீர்; அருள் வளர்க்குங் கொடையாளராயினீரன்றி மருள்வளர்க்குமாண்பிலாபோல் என்னபண்டம் தேடிவைததுள்ளீர்? ஐயா! இது உமக்கு அடுக்குமோ? நுந்தையார் கேட்டால் என்னினை யார்? என்னுரையார்? நீர் என்செய்தீர் என்செய்தீர்! நும்மையர்க்கென்னுரைப்பீர்?" என்று, மிக்க பரிதாபத்தினராய் மொழிகூற, மகாலிங்கமூர்த்தியாகிய மருதவாணவள்ளலாா அவரை அருக்கிய நோக்கினுற் சிறிது கடைக்கணித்து, " அன்பரே! நீவிர் யாவரும் என்பொருட்டாக ஏன் அவலப்படுகிறீர்கள்? எந்த

ஆர், இக்கருமம்பற்றித் தங்களை யாதும் வினவாதவராக நேருவ தீர" என்றனர்.

அதனைக்கேட்ட தோழர்கள் யாவரும், "என்னகாரணம், இது வரையுமிருந்தவாறன்றி, நமது மருதவாணவள்ளல் குணத்தானே மாறுதற்குறிப்புவேறுபட நின்றனரே? திருவெண்காடர் தவப் பயனின்னதுவோ? யாமென்செய்வது? போனதுபோக. இனியா மனைவரும் இவரைப் பிரிந்து உறைவேமல்லேம்." என்று தம்முள் துணிந்தனராகியிருக்கையில், அங்கு சிலநாள் கழிய, மீட்டுந் தங் கள் சீர்விரிபட்டினஞ் செல்ல யாவரும் எண்ணித், தத்தமரக் கலங்களில் தாம் தேடிய பொருளையும் பண்டங்களையும் ஏற்றுவித் துத் தாமுமேறிக் காற்றின்வாய்ப்பறிந்து நாவாயோட்டிவருகை யில், எல்லாம்வல்ல மருதவாணப்பெருந்தகை ஒருதிருவிளையாடலை கருதித் திடீரெனவோர் பெருங்காற்றும் மழையும்புரிந்து திசைதப் பிக் கலங்களோடச் செய்வித்தனர். ஆக்கவே அப்பெரும்புயலுட் சிக்கி யாவர்மனமும் ஒருமுகமாகக் கப்பலிருட்சூழலுட் புகுந்ததாகப், பல நாள் திக்குத்தோற்றாது அலைந்து திரிகையில் அவரவர்கள் சேர்த்து வைத்திருந்த உணவு முதலிய உபகரணங்கள் செலவழிந்து போய்க் குளிரான்மெலிந்து அதனை நீக்குவதற்கு எரிகரும்புமின் மையால் மிகவருந்திப் பெருங்கவலை அடைந்தவர்களாய், மஹா லிங்கமூர்த்தியாகிய மருதப்பரிடம்வந்து தோழமையினால் இனிய வார்த்தை கூறி, "ஐயரே! உம்மையன்றி இத்தருணத்தில் எமக் குத் திக்கு? எம்மனைவரையும் காப்பது உமது கடன். எம்மனைவில் பலநாளாய்க் காற்றும் மழையுமுடன் சிக்கித் திசைதப்பியலைவதில் காவி ரிப்பூம்பட்டினம் சேருமவரையில் ஆகுமெனத் தேடிவைத்திருந்த விறகு முதலிய உபகரணங்கள் முழுவதும் செலவாய்விட்டன. இன்னும் மழைவிட்டபாடில்லை. யாம் எங்குள்ளோமோ கலம் எத் திசைநோக்கிச் செல்கின்றதோ ஒன்றுந்தெரியவில்லை. குளி ரோ உயிர் உடலிற்றங்காவண்ணம் வாட்டுகின்றது. விறகு முதலியன இல்லாக்குறைகொண்டு இவ்வன்றேனும் உமது துறையாம் தொனறுந்தோற்ற [illegible] என் செய்வோம் [illegible] இடத்துள்ள வரட்டியையேனும் இத்தருணம் எங்களுக்கு [illegible] உபகரிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்கார்கள்.